# வேத பாரம்பரியமும்
# சைவ சித்தாந்தமும்





தி[illegible]. கலைவாணி இ[illegible]
சிரேஷ்ட
இந்து ந
யாழ்பாணப்
யா[illegible]
[illegible]

# வேத பாரம்பரியமும் சைவ சித்தாந்தமும்



திருமதி. கலைவாணி இராமநாதன் M.A. (Cey).
சிரேஷ்ட விரிவுரையாளர்
இந்து நாகரிகத் துறை,
யாழ்பாணப் பல்கலைக் கழகம்,
யாழ்ப்பாணம்,
ஸ்ரீ லங்கா.

VEDIC TRADITIONS AND SAIVASIDDHANTA.

First Edition, March, 1992.

**Price : 25-00**



ஸ்ரீரெங்கா பிரிண்டர்ஸ்,
எஸ். எஸ் காலனி, மதுரை 16,
போன் ; 31527

திரிகரண சுத்தியும் காரிய சித்தியும் தருவாய் !



ஓம் சிவகுமாராய தஸ்மை ஸ்ரீகுருவே நமஹ!

# சமர்ப்பணம்



மறைந்த பேராசிரியர்கள்

அமரர். ஆ. சதாசிவம் அவர்கட்கும்.

அமரர். க கைலாசபதி அவர்கட்கும்.

இச்சிறு நூலினைக் காணிக்கையாக்குகிறேன்.

பிரிவுகளில் சிவனைப் பற்றிக் காணப்படும் குறிப்புக்களை எல்லாம் தொகுத்துத் தருகிறார். உருத்திரனைப் பற்றிய வர்ணனைகளும் விளக்கங்களும் சிவனையே குறிப்பிடுவதை எடுத்துக் காட்டுகிறார். சைவ சித்தாந்தத்தின் பதிக் கொள்கைக்கான ஆணிவேர் வேதத்தில் இருப்பதைக் கண்டு உணர்ந்து சொல்கிறார். நுணுக்கமான சில விளக்கங்களை முதல் பகுதியில் காண முடிகிறது.

'சைவ சித்தாந்த பதிக் கோட்பாடு-ஒரு கண்ணோட்டம்' என்னும் இரண்டாம் பகுதி மிகவும் விரிந்ததொரு விளக்கவுரை. தடத்த நிலை, சொரூப நிலை என்னும் இரண்டு நிலைகளில் சைவ சித்தாந்தம் முழு முதற் கடவுளைப் பற்றி எவ்வாறு விளக்குகிறது என்பது இந்தப் பகுதியில் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. சித்தாந்தத்தின் பதிக் கொள்கை பற்றிய மிக விரிவான ஆழமான விளக்கத்தை இந்தப் பகுதி தருகிறது. இந்தப் பதிக்கோட்பாடு எவ்வளவு முழுமையாக அமைந்திருக்கிறது என்பதை ஆசிரியர் மிக விரிவாகவும் தெளிவாகவும் எடுத்து விளக்குகிறார். ஆழ்ந்த பயிற்சியிருந்தாலன்றி இவ்வாறு ஒரு பகுதியை எழுதி இருந்திருக்க முடியாது.

மூன்றும் பகுதியாகிய 'ஈழத் தமிழரும் சைவ சித்தாந்தமும்' என்னும் பகுதி சைவ சமய வரலாற்றின் ஒரு பகுதியையே நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது. தமிழகமும் மறந்து போயிருந்த சைவ சித்தாந்தப் பயிற்சியைப் மீண்டும் இங்கு நிலைநாட்டிய சிறப்பு யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் போன்ற பெரியோர்களையே சாரும். சித்தியார் சுபக்கத்துக்கு உரை கண்ட ஞானப்பிரகாசர் முதலாக இன்றைய சைவ சித்தாந்த அறிஞர்கள் வரை அனைவரைப் பற்றியும் அவர்கள் தொண்டு பற்றியும் அங்குள்ள நிறுவனங்களின் பணி பற்றியும் மிகவும் சிறப்பாக, ஆசிரியர் நமக்கு விளக்குகிறார். இலக்கிய வரலாறு, சமய வரலாறு, வாழ்க்கை வரலாறு, சமய வளர்ச்சி, இந்த நூற்றாண்டின் சமயப் பணிகள் முதலிய பல்வேறு செய்திகளை இந்தப் பகுதி சுவையாகத் தருகிறது. இவ்வளவு செய்திகளையும் எடுத்துத் தந்த திருமதி. கலைவாணி இராமநாதன் அவர்களுக்குத் தமிழுலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் மேலும் பல நூல்களைத் தருவதன் மூலம் தமது தமிழ்த் தொண்டைத் தொடர்ந்து நடத்த இறைவன் அருள் துணை நிற்குமாக!

மதுரை
5-5-1992

டாக்டர் சி. பி. சித்தலிங்கையா

# சிறப்புரை

டாக்டர். **கோ. சுந்தரமூர்த்தி**, M.A. Ph.D.
வடமொழிப் பேராசிரியர்,
**சமஸ்கிருதத்துறை,**
மதுரைக் காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

பாரதநாட்டைச் சார்ந்த சமயங்களையும், தத்துவங்களையும், வைதிகம் சார்ந்தவை, வைதிகம் சாராதவை என இரு வகையாகப் பிரிப்பது வழக்கம். வேதத்தையும், வேதம் சார்ந்த வைதிக நூல்களையும் ஒட்டிப் பேசுகின்ற சமயங்களும், தத்துவங்களும் 'வைதிகம்' எனப்படும்.

தமிழகத்தில் நிலை பெற்றுள்ள தமிழ்ச்சைவம் நமக்குத் தெரிந்தகாலம் தொட்டே வைதிகச் சைவமாகவே விளங்கி வருகிறது. தமிழ்ச்சைவம் வைதிகக்கோட்பாடுகளுக்கும், மரபுகளுக்கும் என்றுமே மிகப்பெரும் மதிப்புக் கொடுத்து வந்துள்ளது.

ஆகவே தமிழ்ச்சைவமான சைவசித்தாந்தத்தை வேத பாரம்பரியத்தை விட்டுப் பிரித்துப்பார்க்கவே முடியாது. நம்முடைய தமிழ்ப்பெரியவர்கள் வேத நெறியைப் பின்பற்றித்தான் தமிழ்ச்சைவத்தை உருவாக்கி, வளர்த்திருக்

கிறார்கள். இச்செய்தியை நமக்குத்தெளிவாக நினைவூட்டுவதற்காகவே திருமதி. கலைவாணி இராமநாதன் அவர்கள் 'வேத பாரம்பரியமும் சைவசித்தாந்தமும்' என்னும் கட்டுரையை இந்நூலின் முதல் கட்டுரையாக உருவாக்கியுள்ளார்கள்.

இக்கட்டுரையைத் தமிழன்பர்கள் கூர்ந்துபடித்து, அதன் கருத்தாழத்தை கண்டு உணர்ந்து பாராட்டக் கடமைப்பட்டுள்ளனர்.

இந்நூலின் இரண்டாம் கட்டுரை 'சைவசித்தாந்தப் பதிக்கோட்பாடு' பற்றியது. சைவசித்தாந்தத்திற்கு மிகவும் அடிப்படையாக விளங்குவது 'பதி' என்னும் சிவம். சைவசித்தாந்தத்தில் உருவாக்கப்பட்டுள்ள பதிக்கோட்பாட்டைப் புரிந்து கொண்டால் சைவசித்தாந்தத்தின் ஏனைய கருத்துக்களை நன்கு புரிந்து கொள்ள அது மிகவும் உதவியாக இருக்கும்.

மிகப்பெரிய தலைப்பான பதிக்கோட்பாட்டை ஒரு கண்ணோட்டத்தில் கண்டு அதை நமக்கு மிகத் தெளிவாக விளக்கியுள்ளார் திருமதி. கலைவாணி இராமநாதன் அவர்கள்.

இந்நூலின் மூன்றாம் கட்டுரை சைவசித்தாந்தத்திற்கு ஈழத்தமிழர் ஆற்றிய தொண்டின் சிறப்பினைச் சுட்டிக் காட்டுகிறது.

பல நூற்றாண்டுகளாகச் சைவ சித்தாந்தத்திற்கு உணர்ச்சிவசப்பட்டுத் தொண்டாற்றி வருபவர்கள் ஈழத் தமிழ்அறிஞர்கள். ஈழநாட்டின் பெரும் பகுதித்தமிழர்கள் சைவ சித்தாந்தத்தைத் தம் வாழ்க்கை நெறியாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள்.

சென்ற நூற்றாண்டுகளில் ஈழத்தமிழ் அன்பர்கள் சைவசித்தாந்தத்துறைக்கு ஆற்றிய தொண்டு எண்ணிக்கையில் மட்டுமின்றி, உள்ளடக்கத்திலும் மிகப்பெரும் சாதனைகள் புரிந்துள்ளது.

'இந்து நாகரீகத்துறை' என்ற ஓர் துறையைப் பல்கலைக்கழக அளவில் நிறுவி சைவசித்தாந்தத்தை உயர்ந்த அளவிலும், ஆய்வு நிலையிலும் கற்பித்துவருவது ஸ்ரீலங்காவின் பல்கலைக்கழகங்கள்தான். பின்னர்தான் தாய்த் தமிழகப் பல்கலைக்கழகங்கள் இம்முயற்சியில் ஈடுபட்டு இன்று சைவசித்தாந்தத்துறைக்குச் சிறப்பாகப் பணியாற்றுகின்றன.

ஆனாலும் சைவசித்தாந்தத் துறைக்கு ஈழத்தமிழர்கள் பலர் எத்துணைச் சிறப்பான பணியாற்றியுள்ளார்கள் என்பது தாய்த் தமிழர்களுக்கு இன்னும் முறையாகத் தெரியவில்லை. ஆகவே திருமதி. கலைவாணி இராமநாதன் மூன்றாவது கட்டுரை தாய்த்தமிழர்களாகிய நமக்குப் பல புதிய செய்திகளை அள்ளித்தருகிறது.

பலகாலம் சைவசித்தாந்தத்தைப் பல நிலைகளில் பல ஆர்வமுள்ள மாணவர்களுக்குப் போதித்த அனுபவம் காரணமாக இந்நூலை உருவாக்கிச் சைவசித்தாந்தத்திற்கு மிகப்பெரிய தொண்டாற்றியுள்ளார்.

இவரது இந்த அரிய பணியையும், எதிர்காலத்தில் இவர் ஆற்றப் போகின்ற பணியையும் மனமாரப் பாராட்டவேண்டியது நம் கடமை.

வளர்க இவர் ஞானப்பணி.

அன்பன்
டாக்டர். கோ. சுந்தரமூர்த்தி

மதுரை
7-5-1992.

# முன்னுரை

வேத இலக்கியங்களிலே சிவப்பொருள் வளர்ச்சிக்கான ஆதாரங்கள் இருக்கின்றனவா என்பது பற்றி நீண்டகால மாகவே ஆராய்ச்சிகள் நடந்து வருகின்றன. ஆயினும் சைவ சித்தாந்தப் பதிப்பொருளிற்கு மூலமான கருத்துக் களும், சித்தாந்தம் 'வேதம் பொது நூல்' என ஏற்றுக் கொள்வதன் அடிப்படைக் கருத்தோட்டம் என்ன என்பது பற்றிய சித்தாந்த சாஸ்திரங்களின் கருத்துக்களை அறிவது மே இக்கட்டுரையின் நோக்கமெனலாம். 'வேதம் பொது ஆகமம் சிறப்பு' எனச் சித்தாந்த நூல்களிலே ஆப்த வாக் கியப் பிரமாணங்கள் பற்றி அடிக்கடி சொல்லப்படுகின் றன. அதனுல் எவ்வாறு 'வேதநூல்' சித்தாந்தத்தின் முத னூலாயிற்று என்பதனை முழுமையாக அறிய வேண்டு மென்ற ஆர்வமும் இக்கட்டுரையாக்கத்திற்கு இன்னோர் காரணமாகும். இதுவே முதலாவது கட்டுரையாக அமை வதனுல் அக்கட்டுரையின் பெயரே இந்த நூலிற்கும் பெய ராக அமைந்தது.

'தேவாரம் வேதசாரம்' என்ற காசிவாசி. செந்திநா தையரின் நூலினை இத்தகைய சிந்தனை தொடர்பாக எழுந்த ஈழத்தமிழறிஞரின் முதல் முயற்சி எனவும் குறிப் பிடலாம். வேதநூல்களைச் சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொண்டுள்ள முறைமைபற்றி சாஸ்திர நூல்கள் வாயி லாக ஆங்காங்கு அடையாளம் காட்ட முயன்றுள்ளேன் பல ஆய்வாளர்களின் கருத்துக்களை வேண்டிய இடங்களில்

விளக்கியதோடமையாது அவற்றினை ஒரு வரலாற்றுப் பின்னணியுடன் அமைக்க முயற்சி செய்துள்ளேன்.

'சைவ சித்தாந்தப் பதிக்கோட்பாடு' என்னும் இரண்டாவது கட்டுரையானது சைவ சித்தாந்தத்திலே சிறப்பானதும் அதிமுக்கியமானதாகவும் இடம் பெற்றுள்ள 'உருவக் கடவுட் கொள்கை' பற்றிய கோட்பாடுகளை மூலமாகக் கொண்டு எழுதப்பட்டதாகும். எமது முதுமாணிப் (M.A.) பட்டமேற் படிப்பிற்காக எழுதப்பட்ட ஆய்வுக் கட்டுரையான 'இந்து தத்துவ சிந்தனைகளான வேதாந்தமும் சித்தாந்தமும் காட்டும் கடவுட் கொள்கை - ஒரு ஒப்பியல் ஆய்வு' என்பதன் கண் இடம் பெற்றுள்ள சித்தாந்தக் கடவுட் கொள்கை பற்றிய சிலகாரணிகள் சித்தாந்தத்தின் உருவக்கடவுள் பற்றிய கோட்பாட்டு விளக்கங்களை அறிவதில் எமக்குப் பெரிதும் ஆர்வத்தை வளர்த்தன. ஆதலால் 'சிவஞான சித்தியார்' என்ற சாஸ்திர நூலிலே கூறப்பட்டுள்ள பதி இலக்கணம் பற்றிய மிக உன்னதமான கோட்பாடுகளை ஆதாரமாகக் கொண்டே இரண்டாவது கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது. சைவ சித்தாந்தம் தனது பரம் பொருட் கொள்கை பற்றிய முடிவான திட்டங்களில் இறைமைக் கோட்பாட்டிற்கு அதிமுக்கியத்துவம் அளித்துள்ளது. அதே வேளையில் பாமர மக்களின் ஞான ஈடேற்றத்திற்காக உருவக் கடவுட் கொள்கையினை முறையாக அறிமுகப்படுத்திச் செயற்படுத்துவதில் தன்னிகரற்று விளங்குவதுடன், அதில் பெரு வெற்றியும் கண்டுள்ளது. எனவே சைவ சித்தாந்த உருவக் கடவுட் கொள்கையின் பெரும்பகுதியினை இவ்வத்தியாயம் ஆராய்வதாக உள்ளதால் அதற்குச் 'சைவ சித்தாந்தக் கடவுட் கொள்கை' என்று பெயரிடுவதனை விட 'சைவ சித்தாந்தப் பதிக்கோட்பாடு' எனப் பெயரிடுவது மிகப் பொருத்தமாகத் தோன்றியது.

**'அறிவியல் அடிப்படையற்ற மதம் ஒரு குருடு**
**ஆன்மீக அடிப்படையற்ற அறிவியல் ஒரு முடம்'**
**(A. Einstein)**

என்பது 20-ம் நூற்றாண்டு அணு விஞ்ஞான யுகத் தந்தை அயன்ஸ்டீன் என்பாரின் அறிவுரையாகும். இன்றும் வழிபாட்டு மரபுகளில் மாவிலை, வேப்பிலை, எலுமிச்சம் பழம் போன்ற பலவும் சிறப்பான கருவிகளாகப் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றிற்கு மின்சக்தியைக் கடத்தும் ஆற்றல் அதிகம் என்று இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சிகளும் தெளிவுபடுத்துவதனை பிறநாட்டு மருத்துவ ஆராய்ச்சிகளில் கண்டு கொள்ளலாம். இவ்வுண்மைகள் அந்தக் காலத்திலேயே ஞானிகளின் ஞான திருஷ்டியினால் சிவாகமங்களில் புலப்படுத்தப்பட்டுள்ளமையினை உணர்ந்து சித்தாந்தமானது தனது உருவக்கடவுட் கோட்பாட்டிலே அமைத்துத் தந்திருப்பது அபூர்வமான விடயமாகும்.

'ஈழத்தமிழரும் சைவ சித்தாந்தமும்' என்னும் மூன்றும் பகுதி ஈழநாட்டுத் தமிழர்களின் சைவசித்தாந்த வளர்ச்சியினைச் சுருக்கமாக எடுத்துக் காட்டுவதாகும். எனது கலாநிதிப்பட்ட ஆராய்ச்சிக்காக கடந்த நான்கு ஆண்டுகளாக மதுரை காமராஜர் பல்கலைக் கழக வடமொழித் துறைத் தலைவரும் பேராசிரியருமாகிய டாக்டர். கோ. சுந்தரமூர்த்தி அவர்களிடம் ஆராய்ச்சிகளை மேற்கொண்டிருந்த வேளையில், பேராசிரியர் அவர்கள் திரும்பத் திரும்ப ஈழத்து சித்தாந்த வளர்ச்சி பற்றிய அறிமுகம் அவசியமானது என்ற கருத்தினை என்னிடத்திலே அதிகமாக வற்புறுத்தி வந்தார்கள். 'சைவ சித்தாந்தம்' பற்றிய கோட்பாடுகளிலும் பேராசிரியர் அவர்களே எனக்கு அதில் அதிக பயிற்சியும், ஆழமான ஆர்வத்தையும் ஏற்படுத்தியவர்களாவர். அவர்களது தூண்டுதலும், அன்னார் எப்போதும் எமக்களித்து வந்த தளராத ஊக்கமுமே இந்த நூலினை எழுதுவதற்கு எமக்குப் பெரிதும் தூண்டுகோலாக அமைந்ததென்பதனையும் இங்கு அவசியம் நான் குறிப்பிட்டாக வேண்டும். பேராசிரியர். சுந்தரமூர்த்தியவர்கள் ஸ்ரீலங்காவில் பேராதனைப் பல்கலைக் கழகம். கொழும்புப் பல்கலைக் கழகம், இவற்றிலே விரிவுரையாளராகச் சிலகாலங்கள்

கடமையாற்றினார்கள். அதன் பயனாகக் கொழும்புப் பல்கலைக் கழகத்திலே அன்னாரிடம் மாணவியாக இருந்து 'தத்துவக் கல்வி' கற்கும் பெரும் பேறு எனக்கும் கிட்டியது. ஸ்ரீலங்காவில் கடமையாற்றியதன் காரணமாகவோ என்னவோ பேராசிரியர் அவர்கட்கும் ஈழத்தமிழறிஞரின் சைவ சித்தாந்த வளர்ச்சிகளிலும் முயற்சிகளிலும் அளப்பரிய ஈடுபாடு ஏற்பட்டிருந்தது. அதன் விளைவாக உருவானது மூன்றாவது கட்டுரை எனலாம்.

இந்த நூல் வெளியீட்டுத் துறைக்கு நான் மிகவும் புதியவர். அதிலும் எழுத்துலகிலே மிகவும் பால்யப் பருவத்தைச் சேர்ந்தவர். இந்த நூலாக்கம் எமது முதல் கன்னி முயற்சியாகும். அத்துடன் யாழ்பல்கலைக் கழக 'இந்து நாகரிகம்' கற்கும் மாணவர்களின் அறிவு வளர்ச்சிக்கு உதவும் பொருட்டும் எம்மால் மேற்கொள்ளப்பட்ட ஒரு சிறுமுயற்சி இது என்றும் கூறலாம். சித்தாந்த தத்துவம் பயிலும் மாணவர்கட்கு இது உபயோகமாயிருக்குமெனில் நாம் பெரிதும் மகிழ்வடைவோம். எமது இச்சிறு நூலாக்க முயற்சி மேலும் வளர்ச்சியடைய சைவ சித்தாந்த அறிஞர்களும், பேராசிரியர்களும், அருளாளர்களும் எமக்கு மேலும் ஆதரவு தர வேண்டுமென அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். நூலினிற் குற்றப் கண்டால் அவற்றினைப் பொறுத்துக் குணம் கொள்ள வேண்டுமெனவும் பணிவன்புடன் கூறுகிறேன். மாற்றங்களும் வளர்ச்சியின் ஒரு அம்சமாகும். மாற்றுக் கருத்துக்களும் வளர்ச்சியின் பொருட்டு எம்மால் என்றும் வரவேற்கப்படும். அவற்றினைத் தெரியப்படுத்தினால் அன்புடன் அவை வரவேற்கப்படும் என்பதனையும் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர் டாக்டர். சித்தலிங்கையா அவர்கள் குறிப்பிட்டது போல நூற்பயிற்சியும் அறிவு வளர்ச்சிக்கு காரணமாயினும் எனது குருநாதரது திருவருளே எனக்கு இவ்விடயத்தில் உறுதுணையாயிருந்து பெரிதும் உதவி புரிந்தது என்பதே பொருத்தமானது.

இறுதியாக 'செய்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை' என்ற வள்ளுவர் வாக்கிற்கமைய நன்றிகளை உரியவர்கட்குத் தெரிவிப்பது எமது முதற் கடமையாகும். எனது ஞானசிரியரும் பேராசிரியருமான டாக்டர். கோ. சுந்தரமூர்த்தி அவர்கள் எனது அன்பான வேண்டுகோளினை ஏற்று பல சிரமங்கட்கும் நேரமின்மைக்கும் மத்தியிலே இச்சிறியேனது நூலிற்கு அரியதொரு சிறப்புரையினை மனமுவந்து வழங்கியிருக்கின்றார்கள். அவர்கட்கு முதலில் எனது மனம் நிறைந்த நன்றிகளையும், வணக்கங்களையும் பணிவுடன் தெரிவிக்கின்றேன். அடுத்து எனது இச்சிறு நூலினைக் கொடுத்து சைவ சித்தாந்தப் பேராசிரியர். டாக்டர். ரி. பி. சித்தலிங்கையா அவர்களிடம் ஒரு சில வார்த்தைகள் தாங்கள் சொல்ல வேண்டும் என்று கேட்டதுமே, அவ்வேண்டுகோளை அன்புடன் ஏற்று இந்நூலிற்கு ஒரு அணிந்துரை வழங்கியிருக்கின்றார்கள். அன்னாருக்கும் எனது மனப்பூர்வமான நன்றிகளை கூறிக் கொள்கின்றேன். அவை தவிர இந்த நூலில் இடம் பெற்ற சில கருத்து விளக்கங்கட்கும், படத்திற்கும் திரு. இலஞ்சி. ஆ. சொக்கலிங்கம் பிள்ளை அவர்களின் நூலானது பெரிதும் உதவியது அன்னாருக்கும் எனது நன்றிகள். யாழ்பல்கலைக் கழகத் தமிழ் பேராசிரியர். டாக்டர். ஆ வேலுப்பிள்ளை அவர்கள் இந்த நூலின் முதல் அத்தியாயத்திற்கான ஆய்வுகளை நான் மேற்கொண்டிருந்த வேளையிலே பெரிதும் ஆலோசனைகளும் அறிவுரைகளும் வழங்கி உதவினார்கள். அன்னாருக்கும் இவ்விடத்திலே நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். எனது கணவர் டாக்டர். பொ. இராமநாதன் அவர்கள் எனது தொழிற்துறை. உயர்கல்விக்கான முயற்சிகளில் எல்லாம் என்னுடன் பெரிதும் ஒத்துழைத்து, வேண்டிய உதவிகளையும் வசதிகளையும் எப்போதுமே மனம் தளராது செய்து தருபவர்களாவர். அவர்கட்கு நன்றி கூறுவதென்பது மிகவும் அளப்பரியதொன்றாகும்.

இவை மட்டுமின்றி இந்த நூலினை அழகாக அச்சிட்டு

வெளியிடுவதற்குப் பல வழிகளிலும் எமக்கு உதவி புரிந்தவர்கள் ஸ்ரீரெங்கா பிரிண்டர்ஸ் உரிமையாளராகிய திரு எஸ். வி. ஆர். மகேஷ் அவர்களாவர். அவர்கட்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும். எல்லாவற்றிற்கும் மேலாக இந்த நூலினை எழுதி வெளியிடுவதற்குச் சகல சித்திகளையும் எனக்களித்துத் திருவருள் புரிந்த எல்லாம் வல்ல முருகப் பெருமானின் திருவடிகட்கு எனது வணக்கங்களைச் செலுத்தி வழிபடுகின்றேன்.

'கனகதாரா'
தாவடி, கொக்குவில்,
யாழ்ப்பாணம்,
ஸ்ரீ லங்கா.
5-5-1992.

சுலைவாணி இராமநாதன்,
இந்து நாகரிகத் துறை,
யாழ். பல்கலைக்கழகம்,
ஸ்ரீ லங்கா.



பொருளடக்கம் :

# வேத, பாரம்பரியமும் சைவ சித்தாந்தமும்

இந்து சமயம் வரலாற்றிற்கு முற்பட்ட காலத்துப் பழமை வாய்ந்தது. இந்து சமயம் சார்ந்த சமயதத்துவ வளர்ச்சியில் இருவழி ஆய்வுப் போக்குகள் காணப்படுகின்றன. மரபு வழிக் கோட்பாடு (Traditional Theory) பரிணாமக் கோட்பாடு, என்பன அவையாகும். தொல் பொருட்கள், கல்வெட்டுச் சாதனங்கள், எழுத்திலக்கியச் சான்றுகள், நாணயங்கள், பிறநாட்டார் குறிப்புக்கள் இன்னோரன்னவற்றை ஆதாரமாகக் கொண்டு ஒரு விடயம் பற்றி ஆராய்ந்து நிறுவி அதனை உறுதிப்படுத்தும் முறை பரிணாமக் கோட்பாடு (Evolutionary Theory) எனப்படும். ஒரு பொருளின் ஆரம்பம், காலம், தோற்றம் என்பன பற்றிய முறையான செய்திகளை அறிய முடியாதபடி அவை மறை பொருளாய் இருக்குமிடத்து 'நம்பிக்கை உணர்வை' மட்டுமே ஆதாரமாகக் கொண்டு கிடைத்த சான்றுகளின் அடிப்படையில் ஒன்றினை அறிய விளைவது மரபுவழிக் கோட்பாடெனலாம். முன்னயதிற்கு 'ஆராய்ச்சியறவு' ஆதாரமாகிறது. பின்னயதிற்கு 'நம்பிக்கை உணர்வு' அடித்தளமாகிறது. இதன் தொடர்ச்சியானது 'மரபு' எனப் பேணப்படுகின்றது.

**வேத நூல்கள் :**

எல்லாவற்றிற்கும் காலத்தால் முற்பட்ட பழமை வாய்ந்ததும், தொன்மை யானதாய், தொடக்கமில்லாத நிலையில் நின்று விளங்கும் இந்து சமயத்தை 'அநாதி, என்ற சொற்றொடரால் குறிப்பிடுவது மரபு. இப்படிப்

பட்ட ஆதியான இந்து சமயத்தின் ஆரம்பநிலை பற்றியும் அதனைப் பின்பற்றுவோரின் வாழ்க்கை நெறி பற்றியும் முதன் முதல் அறிவிக்கும் எழுத்திலக்கியச் சான்றாக அமைவன வேத இலக்கியங்கள் ஆகும். இந்து மறை நூல்களில் இந்து சமயத்தைக் குறிப்பதற்கு இரு பெயர்கள் கையாளப் பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று சநாதன தருமம்; மற்றொன்று வைதிக தருமம்: சநாதன தருமமானது பாரத நாட்டின் என்றுமுள்ள நம்பிக்கை அடிப்படையிலான வாழ்க்கை நெறியினையும், வைதிக தருமமானது வேதங்களை அடித்தளமாகக் கொண்ட வாழ்க்கை நெறியினையும் குறிப்பிடுகின்றன.[1] எனவே இந்து சமயத்தின் அடிப்படை ஆதார இலக்கியங்களாக வேத நூல்களைக் ஏற்றுக் கொள்ளும் மரபு உருவானது. வேத நூல்களின் வழிவந்த சமய, சமூக, தத்துவ ஒழுகலாறுகள் யாவும் இவ்வாறு இந்து சமய நெறியின் அடிப்படைக் கோட்பாடுகளாக வளர்ச்சி பெற்றன.

வேதங்கள் எழுதாமறை எனவும், சுருதி எனவும், மறைமொழி மாந்தர் வாக்கு, இறைவெளிபாட்டு நூல் என்றெல்லாம் கருதப்படுவதால் 'அபௌர்ஷேயம்' எனப் பட்டன. குறிப்பிட்ட ஒரு தனிப்பட்ட நபரால் எழுதப் படாத இலக்கியம் என்பது இதன் பொருள் எனலாம். ஞான விழிப்புணர்வு பெற்ற ஒருவன் தனது சுய விருப்பு வெறுப்புகளைக் கடந்த நிலையில் பரம் பொருளுடன் அறிவினால் இரண்டறக் கலந்து நிற்கின்ற அந்த ஒருமை நிலையில் பிரிவின்றி நிற்கும்போது, முற்றறிவில் அவன் பேசும் பேச்சுக்கள் யாவும் பரப்பிரமத்தின் வாக்குகளாக வேத சமய சிந்தனையாளரால் மதிக்கப்படுகின்றன.

1. மகாதேவன், டி.எம்.பி. இநது சமய தத்துவம், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1964, பக். 227.



அந்த மாதிரியான நிலையிலே நின்று வேதங்களை உபதேசித்த ரிஷிகளின் வாக்குகளும், கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட நூல்களாகவும், அவைகளை எழுத்துக் கலையினை மனிதன் அறிவதற்கு முன்னர் செவிவழி கேட்டும் மனைம் செய்தும் வந்துள்ளான் என்றும், எழுத்து முறை அறியப்பட்ட காலத்தில் அவை பின்வந்த சந்ததியினரால் அழியாமல் பாதுகாத்தற் பொருட்டு முதலில் ஏட்டுச் சுவடிகளில் பத்திரப்படுத்திப் பேணப்பட்டன என்பதும் புலனாகின்றது. பிற்காலம் நூல் வடிவில் உருவாகும் போது அவற்றிலே பல இடைச்செருகல்கள் ஏற்பட வாய்ப்புண்டாகி இருக்கலாம் 'ஆயினும் எத்தனையோ இலக்கியங்கள் தோன்றி மறைந்த போதிலும் வேத நூல்கள் தமக்குரிய சத்தியத் தன்மையினாலும், ஞானவாக்குகளாக விளங்குவதனாலும் பல்லாயிரமாண்டுகளாக சமுதாயத்தில் நிலை பெற்று வாழ்கின்றன.

**வேத காலம்'**

வேதநூல்களின் காலத்தை நிச்சயிப்பதில் பல முரண்பட்ட கருத்துக்கள் சாணப்படுகின்றன. இதுவரை உலகில் தோன்றிக் காணப்படும் நூல்கள் எல்லாவற்றிலும் வேதங்கள் காலத்தால் முற்பட்டவை என்பர் பேராசிரியர் கைலாசநாதக் குருக்கள்.[2] ஏனைய நூல்களைப் போல வேதங்கட்கு கால எல்லை கற்பிப்பது பொருந்தாது என்பது மரபு வழிவந்தோர் உள்ளடக்கிடக்கையாகும். ஆயினும் வேதங்களின் காலத்தை மேலை நாட்டாருள் மக்ஸ்மூலர் என்பார் அதன் காலம் கி.மு. 1200-1000 என்றும்,[3] விட்னி என்பாரும் தமக்கு இக்கருத்து

2. கைலாசநாதக் குருக்கள், கா., வடமொழி இலக்கிய வரலாறு. கலா நிலையம், கொழும்பு, 1962, பக். 22.
3. மேற்படி நூல், பக். 87

உடன்பாடென்றும்.[4] ஷிராடர் என்ற அறிஞர் அவை கி.மு. 1500 - 2000-ப் இருக்கும் எனவும் குறிப்பிட்டுள்ளனர். இவை தவிர ஐகோபி என்ற ஜெர்மானிய அறிஞரும், திலகர் என்ற மாராட்டியரும் வேதகாலம் கி.மு 6000-4500ஐச் சேர்ந்ததாகும் என்கின்றனர்.[5] இருந்தாலும் இலக்கிய, வரலாற்று ஆதாரங்களைக் கொண்டு நோக்குமிடத்து பார்ஸ்வநாதர், மகாவிரர், புத்தர் காலத்திற்கு முற்பட்டவை எனக் கருத்திற் கொண்டு மக்ஸ் மூலர் கூறியவாறு தி.மு. 1500 - 1200க்கு முன் வேத காலம் தொடங்கிற்று என முடிவுக்கு வருகின்றனர் [6]

**ஆகம இலக்கியங்கள் :**

இந்து சமயக் கோட்பாடுகள் அனைத்திற்கும் வேதங்கள் ஆதார இலக்யங்களாக அமைந்துள்ளன. எனவே இந்து சமயத்தின் சநாதன தரும நெறியினை முதன் முதலில் போதித்த காரணத்தினால் வேதவழி வந்த இந்து தருமம் 'வைதிக தருமம்' எனவும் 'வைதிக சமயம்' எனவும் ஆயிற்று. இச் சநாதன தருமத்தின் அடுத்த சிறப்பு இலக்கியங்களாகப் போற்றப் படுபவை ஆகம நூல்களாகும். ஆகமங்களும் இறை வெளிப் பாட்டு நூல்களாகவே காணப்படுகின்றன.

> **'முதலாகும் வேத முழுதாகமப்**
> **பதியான ஈசன் பகர்ந்தது இரண்டு'[7]**

4. வடமொழி இலக்கிய வரலாறு, பக். 87
5. மேற்படி : பக். 88
6. மேற்டி ; பக். 91 - 92
7. திருமூலர், திருமந்திரம், திருப்பனந்தாள் காசிமட வெளியீடு, குமரகுருபரன் சங்கம் ஸ்ரீவைகுண்டம், 1968, பாடல் எண் : 2104.



எனத் திருமந்திரம் கூறும் இறைவனால் வேதாகமங்கள் அருளப்பட்டதாகவும் அது கூறும், இவற்றிலே ஆகமங்கள் என்ற பெயரில் இந்து சமயத்தின் சில சமய பிரிவுகள் சில ஆகம நூல்கள் பற்றிக் கூறுகிளறன. அவற்றிலே வைணவ ஆகமங்கள் வைகானகும், பஞ்சராத்திரப், சம்கிதை எனப்படும் 'சாக்த ஆகமங்கள் வாமதந்திரம் எனப்படும்.[8] வைணவ ஆகமங்கள் சம்கிதைகள் என்றும் சாக்த ஆகமங்கள் தந்திரங்கள் எனவும் அறியப்படுகின்றன. சைவ சித்தாந்தம் 28 சிவாகமங்களையும், உபாகமங்களையும் சைவாகமங்கள் எனச் சொல்லும்.[9] சிவாகமங்கள் சைவத்தின் கருவூலம். அவை முதல்வன் வாக்கு எனச் கட்டப்பட்டுள்ளன.[10]

> **'அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்.[11]**
> **'மன்னுமாமலை மகேந்திர மதனிற்**
> **சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்'[12]**

என்பன ஆகமங்கள் முதல்வன் வாக்கு என்பதனை விளக்கும். ஆகமம் என்ற சொல் தோற்றம், சாஸ்திரம், ஆப்த வசனம், ஞானம், மரபு வழிக் கோட்பாடு என்று பல

8. வேலுப்பிள்ளை, டாக்டர், ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி நிலையம் சென்னை, 1985. பக். 155
9. Arunasalam, M. Sivagamas, (Peeps into Tamil Culture, Series, N 5) Kalakshetra Press, Tiruvanmyur, Madras, 1988, P. 13.
10. கழகத்தமிழ் கையகராதி, சென்னை, 1976, பக். 36.
11. திருமந்திரம், ஆகமச் சிறப்பு, 64.
12. திருவாசகம், 2 : 9 - 10-ம் வரிகள்.

பொருள்களையும் தரும்.[13]

**ஆகமங்களின் காலம் :**

ஆகமங்களின் காலத்தைக் கணிப்பது கடினமான காரியமாகும். ஆகமங்கள் நூல்வடிவம் பெற்ற காலம் கிறிஸ்துவிற்கு முற்பட்டதெனவும் கருதப்படும். பல ஆகமங்கள் பற்றி 'வேதாதந்த சூத்திரம்' இரண்டாம் பாகம் பல வினாக்களை எழுப்பியுள்ளது. மகாபாரதம் சாந்திபர்வத்திலும் ஆகமம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.[14] ஆகமங்கள் கி. பி. 2-ம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 13-ம் 14-ம் நூற்றாண்டுகளில் முற்றுப் பெற்றிருக்கலாம் என்பர் தாஸ்குப்தா.[15] பொதுவாக ஆகமங்கள் கி. பி. 1-ம் நூற்றாண்டிலிருந்து அதன் வளர்ச்சி கி. பி 8ம் நூற்றாண்டளவில் முற்றுத் பெற்றிருக்கலாம் என்பர் அருணாசலம்.[16] இவ்வாறாக ஆகமங்கள் நூல் வடிவு பெற்ற காலம் கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்பாகும் எனக் கருதும் மரபுவழி சிந்தனையாளர்கள் இருக்கின்றனர். தற்கால விஞ்ஞான ஆய்வின்படி திட்டமான காலக்கணிப்பும் அவசியமாகிறது

ஆகம காலத்தை வரையறை செய்ய முயன்ற பல அறிஞர்களும் திருமூலர் காலத்தையே பின்னெல்லையாகக் கொள்கின்றனர். எனவே திருமூலர் காலத்தை

13 Apte. V.S , A Students Sanskrit Dictationary, Willson, H H., Glossary of Indian Terms, London, 1955, P 76.

14. ராமானுஜாச்சாரி, ர, சைவசித்தாந்தம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1963, பக். 2 - 3.

15. Dasguta, S. N., A History of Indian Philosophy, Motilal Banarsi das, 1975, PP. 8 - 16.

16. Arunasalam, M , Sivagamas., PP. 9-20.



சுருக்கமாக ஆராய்ந்தால் ஆகம காலத்தை ஓரளவு அறிய முடியும். ஏனெனில் 28 சிவாசமங்களின் எண்ணிக்கையை தமிழில் கூறும் முதல் நூல் திருமந்திரமாகும்.

**'அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்**
**அஞ்சொடு இருபத்து மூன்றுள ஆகமம்......'**[17]

என்பது அக்கூற்றும்.

**திருமந்திரத்தின் காலம் :**

ஆகமங்களின் காலம் தொடர்பாக சி. வி. நாராயண ஐயர் என்பார் வி வி. ரமணசாஸ்திரிகள் என்பாரது கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டும் திருமந்திரத்தின் அகச்சான்றுகளைக் கொண்டும், திருமூலர் காலம் கி.பி. 6ம் நூற்றாண்டோ அல்லது அதற்கு முன்பாகவோ இருக்கலாம் எனபர்[18]. திருமூலர் கைலாசத்திலிருந்து தெற்கே வந்தவர் என்ற ஒரு கொள்கையுண்டு. இதனைப் பெரிய புராணமும் கூறும்.[19] 'காஷ்மீருக்கு வடக்கேயுள்ள கைலாசத்தில் ஆகமாந்தம் என்ற பிரத்தியபக் ஞான தரிசனம் தோற்றம் பெற்றதாகவும். ஆகமாந்தம் வேதங்களின் உட்பொருள் என்றும் இதனை எல்லோருக்கும் தெளிவுபடுத்தும் நோக்குடன் காஷ்மீரில் ஆகமங்கள் எழுதப்பட்டிருக்கலாம் என்றும் ஒரு கருத்து காணப்படுகிறது. சமணம் எழுச்சி பெற முன்பே ஆகமாந்தம் காஷ்மீரிலும், பின்னர் இந்தியாவின் மேற்குப் பகுதியிலும், அதன் தெற்குப் பகுதியிலும் பிரசித்தி பெற்றிருந்ததுடன் தென்பகுதியில் இது

17. திருமந்திரம், ஆகமச் சிறப்பு 57

18 Narayana Ayyur, C. V., Origin and Early History of Saivaism in South India, University of Madras. 1936, P 213.

19. பெரியபுராணம், திருமூலநாயனார் புராணம், பாடல் 2.

'சுத்த சைவ தரிசனம்' என்ற பெயரிலே அழைக்கப்பட்டது என்பர். திருமந்திரத்திற்கும் காஷ்மீர சைவத்திற்கும் உள்ள ஒருமைபாட்டை நோக்கினுல் ஆகமாந்தம் காஷ்மீரில் சிறப்புற்றிருந்த காலம் திருமூலர் தெற்கே வந்திருக்காலம் என்ற கருத்தும் காணப்படுகின்றது.[20]

ஆகமாந்த சாஸ்திரங்கள், கி. பி. 4ம் 5ம் நூற்றாண்டிலிருந்து சிறப்புற்றிருந்தன எனலாம். திருமூலரும் கி பி 4ம் 6ம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனவும் கருதமுடியும் எனவே பிரத்யபிக்ஞான தரிசனக் கருத்துக்கள் காஷ்மீரத்தில் சிறப்புற்றிருந்த காலத்தில் திருமந்திரம் செய்யப்பட்டதென்பது தெளிவு என்பர் அறிஞர் இராசமாணிக்கனுர்.[21] ஆகம காலத்தை முறைப்படுத்த முயன்ற மேலை நாட்டு அறிஞர்களில் வின்ரநீட்ஸ் என்பார் ஸ்கோமரஸ், பார்குவார் என்போரது கருத்துப்படி அவை கி பி. 1ம் 2ம் நூற்றாண்டாகலாம் என்பர்.[22] பார்குவார் என்பார் திருமூலர், மாணிக்கவாசகர் என்பாருடைய காலத்தை கருத்திற்கொண்டு கி பி. 8ம் நூற்றாண்டை ஆகமத்தின் பின்னெல்லையாகக் கொள்ளலாம் என்பர்.[22] சுந்தரமூர்த்தி 'திருத்தொண்டர் தொகையில், நாயனுர் திருமூலரைக் குறிப்பிட்டிருப்பதாலும் இது பொருத்தமானதெனத் கருதலாம்.

வேதங்களை முதலாக உடைய சமயம் 'வைதிக சமயம்' எனவும், ஆகமங்களைச் சிறப்பாகக் கொள்ளும் சமயநெறி 'சைவ சமயம்' எனவும் வளர்ச்சி அடைந்

20. Narayana Ayyar, C.V., ibid, PP. 206 - 214.
21. இராசமாணிக்கனார், டாக்டர். மா , சைவசமய வளர்ச்சி, ஔவை நூலகம், சென்னை, 1958 பக். 78.
22. Winternitz, M., A History of Indian Literature, Vol. I., Part-I Calcutta 1964, PP. 515-16.
23. Farquar, J.N., An outline of the Religious Literature of India Oxford University Press, London, 1920. P. 153 194.



துள்ளதைக் காணமுடிகிறது. முன்னயது வடநாட்டு மரபு எனவும் பின்னயது தென்னாட்டு மரபாகவும் விளங்குகின்றது. வைதிகமோ, சைவமோ இரண்டும் இந்து சமயத்தின் இருவழிப் பாதைகளாககும். இரண்டு இந்து சமயத்திரு நூல்களும் எமக்கு இன்று வடமொழியிலேயே கிடைப்பனவாயுள்ளன. 'சைவாகமங்கள் இன்று வட இந்தியாவில் தோன்றியனவா அல்லது தென்னிந்தியாவில் தோன்றியனவா என்று கூறமுடியாதுள்ளது. வேதங்களையும், ஆகமங்களையும் முதனூலாகச் சைவசித்தாந்தம் ஏற்பதனால் அதற்கு வேதசித்தாந்தம், வேதாந்தம், வைதிக சித்தாந்தம் என்ற பெயர்களும் பொருந்துவனவாக உள்ளன.[24] தமிழ்நாட்டு சைவசித்தாந்தம் அத்துவித சைவம் எனவும் சிவஞான போதம் அருளிய அறிஞர் அத்துவித மெய்கண்டார் எனவும் வழங்கப் படுவதுண்டு.

**வேதங்களும் ஆகமங்களும் தோற்றத்தில் வேறுபட்டாலும் கருத்து முடிவில் ஒன்றே என்பது சைவ சித்தாந்தியின் கொள்கையாகும்''.[24a]**

வேதங்களதும். ஆகமங்களதும் மார்க்கங்கள் தோற்றத்தில் வேறுபட்டது போலத் தோன்றுவதற்கு அவை எழுந்த காலச் சூழ்நிலைகளும். அவற்றின் பின்னனிகளும், மக்கள் வாழ்க்கையிலுள்ள பிராந்திய வேறுபாடுகளும் காரணமாகலாம். இது இந்து சமயம் காலத்திற்கேற்ற மாற்றங்களைக் கைக்கொள்வதையும், இறுக்கமான பழைய விதிகளைத் தளர்த்தி புதிய முறைகளை அனுமதிப்பதையும் அதன் அறிவியல் வளர்ச்சிப் போக்கையும் காட்டுகின்றதெனலாம். எனவே வேதகால வேள்வி நியமங்களும், வேட்

24. வேலுப்பிள்ளை, டாக்டர், ஆ , தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக். 155.

24a. மேற்படி

கூடயாடும் தொழில் முறையில் எச்சமாகவுள்ள பலியிடுத லும், யாகக் கிரியைகளும் கடும் நியமங்களுடன் கூடிய தவக் கிரியைகளும், ஆகம நூல்களில் விரதக் கிரியைக ளாகவும், கோயிற் கிரியை களாகவும், தியானத்தை உள் ளடக்கிய யோக முறையாகவும், காலத்திற்கேற்றவாறு மாற்றமடைந்து வளர்ச்சிப் பெற்றன. வடநாட்டிலே வேள்வி, யாகக்கிரியை முறைகள் என்பன வளர்ச்சி குன்றி ஞானமார்க்கத்தில் தலைப்பட்டதும் தென்னாட் டின் பலபகுதிகளில் ஆகமங்களின் செல்வாக்கால் கோயிற் கிரியைகளும், பூசை முறைகளும் குறிப்பாகத் தமிழகத்தில் பாரிய வளர்ச்சி பெற்றன.

**வைதிக அவைதிக மரபுகள் :**

உபநிடதங்களும் இந்து சமய மரபில் பாரிய சிந்தனை மாற்றங்கட்கு உறுதுணையாக அமைந்தன. 'வேத மரபு' எனக் கூறிக்கொண்டு இந்து சமயம் வேதக் கருத்துக்களைப் புனரமைக்காது வெறும் சடங் காசாரங்களையும், கட்டுப்பாடுகளையும் கொண்ட சமய மாக இருக்கவில்லை என்பதும் உபநிடதக் கருத் துக்களாற் புலனாகும். இந்து சமய சிந்தனை மரபில் ஏற்பட்ட மாற்றம் போன்று வேதசிந்தனை மரபில் ஏற்பட்ட அறிவியல் மாற்றமே இந்து தரிசனங்களின் வளர்ச்சியாகும். வேதநூல் மரபில் ஏற்படும் வியப்பு யாதெனில் காலம் தோறும் வளர்ச்சியடையும் அறிவுத் துறையில் சிந்தனைகேற்ப விளக்கங்களை அது கொண்டி ருப்பது ஆகும். அதன் விளைவாகவே 19-ம் நூற்றாண் டில் சமய, சமூக மாற்றங்களில் புதுமையை ஏற்படுத்திய ராஜாராம் மோகன்ராய் கூடப் பரம்பொருட் கொள்கை வளர்ச்சியில் வேதநூல்கள் குறிப்பிட்ட 'ஏகம்ஸத்' என் னும் 'உருவமற்ற ஒருமைக் கொள்கை' தான் சிறந்த தென அடையாளம் காட்டினார். எனவே வேதம் என்ப



தன் பொருள் 'அறிவு' அதிலும் 'பேரறிவு' என இந்திய தத்துவ ஞானிகள் அன்றே தீர்க்க தரிசனமாகச் சொல்லி வைத்தனர்.[25]

இந்து தத்துவ முடிவுகள் அனைத்தும் வேதநூல்களின் 'சத்திய தருமத்தை' கொண்டிருப்பதனாலோ என்னவோ இந்தியாவில் வளர்ச்சி அடைந்த காலத்தால் முற்பட்ட தரி சனங்கள் அனைத்தும் வேதங்களை ஆதரித்தோ அல்லது எதிர்த்தோ வளர்ச்சி பெற்றனவாகவே காணப்படுகின் றன. அதனால் வேதங்களை ஏற்போர், ஏற்காதோர் என இரு பிரிவுகள் இந்திய தத்துவ சிந்தனையாளர்களி டையே உண்டாயின. அப்பிரிவுகள் வேதங்களை அடி யொற்றி வைதிக மரபு, அவைதிக மரபு என்ற பெயரில் அழைக்கப்பட்டன. இவற்றின் சிந்தனையில் பரிணாம வளர்ச்சிகள் காணப்பட்ட போதும் இவை அனைத்தும் 'தருமம்' என்ற ஒன்றைப் பற்றிப் பேசுவதில் ஒருமைப் பட்டு நிற்கின்றன. ஆயினும் மேற்குறிப்பிட்டது போல் காலத்தின் வளர்ச்சிக்கேற்ப அதனை அடையும் பாதை களை இலகுபடுத்தியுள்ளன. அதுமட்டுமின்றி வைதிக தரிசனங்களும் சரி; அவைதிக தரிசனங்களும் சரி; 'கடவுட் கொள்கை'யை விட உலகியல் சார்ந்த தார்மீக ஒழுக்க நெறியையும், ஆன்ம தரிசனம், பற்றியும் தான் அவை யாவும் முதன்மைப் படுத்திப் பேசியுள்ளன. ஒரு வித்தி யாசம் யாதெனில் வைதிக மரபு வேதத்துடன் சார்பு படுத்திப் பேசும்போது அவைதிக மரபு வேதச் சார்பினின் றும் விலகி நின்று பேசுகின்றது. இவற்றின் வாயிலாக வேத மரபின் முக்கியத்துவத்தையும் அவற்றின் வளர்ச்சியி னையும் நாம் காண முடிகிறது.

---

25. மகாதேவன், டி. எம். பி., இந்து சமய தத்துவம், பக். 3.

### ஆகமங்களும் மொழிமூலமும் :

அடுத்து இந்து சமயத்தில் வேதங்களின் வழி வைதிக மரபு வளர்ச்சியடைந்தது போல; சைவாகமமர பின் வழிச் சைவமரபு வேரூன்றியது. இதன் விளைவாக வேதவழிவந்த தரிசனங்கள் 'வைதிக தரிசனங்கள்' எனப் பட்டமை போன்று சைவாகம வழி வந்த தரிசனம் 'சைவ சித்தாந்தம்' எனப் பெயர்பெற்றது. 'சைவசித்தாந்தம்' தமிழர் கண்ட நெறியா ? அல்லது வடமொழியிலிருந்து தழுவப்பட்டதா ? என்ற ஒரு ஐயம் அறிஞர்சிலரிடையே நிலவுகின்றது. இந்தியாவில் தோன்றியுள்ள தத்துவமுறை கள் அனைத்தும் வடமொழியிலேயே தோன்றி இருப்ப தால் அறிஞர் சிலரிடையே இவ் ஐயப்பாடு எழுந்திருக் கலாம். வடமொழியில் உள்ள ரௌரவ ஆகமத்தில் பாவ விமோசனப் படலத்திலே சிவஞானபோதத்தில் உள்ள தமிழ் சூத்திரங்கட்கு நேரிடையான வடமொழிச் சூத்திரங்கள் காணப் படுகின்றன. எனவே சைவசித்தாந்தமும், வட மொழி மூலமுடையது என்ற கருத்து அறிஞர் சிலரிடையே காணப்படுகின்றது. இந்திய தத்துவ ஆசிரியர்களில் அடி வையற்ற சங்கரர் தென்பகுதியில் கேரள மாநிலத்தில் தோன்றியவர். அத்வைதத்தை வைணவ சித்தாந்தமாக்க முயன்ற இராமானுஜர் தமிழ்நாட்டின் தென் பகுதியில் தோன்றியவர். மாதவர் மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த வர். இவர்கள் மூவரும் வடமொழியையே பயன்படுத்தி னர். எனவே பரஞ்சோதி முனிவரிடம் மெய்கண்டார் வடமொழி அறிவு பெற்றிருக்கலாம். சோழர் காலம் எழுந்த தத்துவத் நூல்களின் வடமொழிக் கலப்பு இருப்பது ஆச்சரியப்படத்தக்க விடயமல்ல. மெய்கண்டார் நாயன் மார் 'நால்வரையும் பெரியபுராண அடியார்களையும் வைத்து சிவஞானபோதம் பாடியிருக்கலாம். அது வட



மொழி மொழிபெயர்ப்பு என்பது கடினமானது என்பார் கலாநிதி வேலுப்பிள்ளை அவர்கள். [26]

மறைமலையடிகள், கா. சுப்பிரமணியபிள்ளை போன் றோரது கருத்துப்படி ஆகமங்கள் முதலில் தமிழ் எழுதப் பட்டு பின்னர் வடமொழிக்கு மாற்றப்பட்டதெனவும் கருதப்படுகின்றது. [27] ஆனால் மெய்கண்டார் எழுதிய சிவ ஞானபோதம் ரௌரவ ஆகமத்தின் 73ம் பகுதியான பாப விமோசனப் படலத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு எனவும் கூறப்படுகிறது. [28] திருமூலர் ஒன்பது வடமொழி ஆகமங் களின் பெயர்களைக் கூறுகிறார். ஒரு காலம் தமிழில் இருந்த ஆகமங்கள் அழிந்து போயின என்ற கருத்தும் காணப்படுகின்றது.[29] மல்காபுரம் கல்வெட்டுக் குறிப்பைச் சுட்டிக்காட்டி ஆகமங்கள் பற்றிஆராய்ந்த வி. எஸ். பதக் என்பாரும்ஆகமங்கள் பல மறைந்துவிட்டதாக் கூறுவர். [30]

ஆகமங்கள் வடமொழியிலும், பிராகிருதத்திலும் எந்த லிபியிலும் காணப்பட்டதாகச் சிவதருமோத்திரம் கூறுவதால், அவை வடமொழியிலும், தமிழ், தெலுங்கு, கன்னடம் போன்ற திராவிட மொழிகளிலும் இருந்திருக் கலாம் என ஊகிக்க முடிந்தாலும், ஆகமங்கள் வடமொழி

---

26. வேலுப்பிள்ளை, டாக்டர். ஆ., தமிழர் சைவ வரலாறு, பாலிபுத்தக நிலையம், சென்னை, 1980, பக். 204-7.
27. லக்ஷ்மண ஐயர், கி., இந்திய தத்துவஞானம், சென்னை, 19 10, பக். 356-57.
28. ராமானுஜாச்சாரி. ஏ., சைவசித்தாந்தம், பக். 5.
29. Arunasalam, M., Sivagamas, P. 1.2
30. Dunuila. A. Rohan., Saivasiddhata Theology, Motilala Banarsidas,Madras, 1985, P. 41.

யிலோ அன்றித் தென் மொழியிலோ இருந்திருக்கலாம்.
திருவல்லிக்கேணி, மைசூர், அடையாறு போன்ற இடங்
களிலுள்ள கையேட்டுப் பிரதி நூலகங்களில் ஆகமங்கள்
பழைய லிபி வடிவங்களில் காணப்படுகின்றன.[31] எனவே
வடமொழி, தென்மொழி இரண்டிலும் புலமைமிக்க
அறிஞர்களும், தத்துவகாரர்களும் பண்டைக்காலம் முதல்
தென்னாட்டில் பலரும் இருந்தனர். எனவே தமிழ்
மொழியில் சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் காணப்
படுவது போல வடமொழியிலும் பல சைவசித்தாந்த
இலக்கியங்கள் காணப் படுகின்றன. கி.பி. 9ம் நூற்றாண்
டினை அடுத்து வடமொழியில் சைவசித்தாந்த நூல்கள்
நாட்டிலே பரவலாக ஆரம்பமானதாகத் தெரிகிறது. பண்
டைய இந்தியாவில் சித்தாந்தக் கருத்துக்களைக் கூறும்
ஆகம நூல்கள் எழுந்தபோதிலும் ஆகமநூற் கருத்துக்க
ளைத் திரட்டி முதன்முதல் வடமொழியில் சைவ சித்த ந்
தம் பற்றி எழுதிய அறிஞர்களில் சத்யோஜோதி சிவாச்
சாரியார் குறிப்பிடத் தக்கவர்.[32] அவரைத் தொடர்ந்து
இப்பணியில் ஈடுபட்டோர் ராமகண்டர்-1, சிறிகண்டர்
நாராயணகண்டர், ராமகண்டர்-2, என்பார்களும், 11-ம்
நூற்றாண்டைச் சேர்ந்த போஜமன்னனும் ஆவார்கள்.[33]

ஆயினும் வடமொழியில் உள்ள சைவசித்
தாந்த நூல்கள் இன்னும் சரியாக அறிமுகப்படுத்தப்
படவில்லை. இவற்றை அறிமுகப்படுத்தும் சீரிய பணி
யில் ஈடுபட்டுள்ள டாக்டர். சோ. சுந்தரமூர்த்தி
அவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்கள்.

---

31. Dasgupta, S. N., History os Indian Philosophy, Vol. V. P<sup>p</sup>. 16-20.
32. Rohan Dunuwila A., Saiva Siddhata Philosophy, P. 61
33. See: Astapraharana, Edited by N. Krishna Sastri, Devakottai, South India; Saviva Siddhanta [illegible]lana Sangnm, 1983.



அவர்களால் வடமொழி சைவசித்தாந்த நூல்கள் சில அறி
முகப்படுத்தப்பட்டுள்ளன.[34] எனவே எந்த மொழியில்
இருந்தாலும் சிவாகமங்கள் வெளிப்படுத்தும் தத்துவம்
சைவசித்தாந்தம் என்பது பெறப்படுகின்றது.

அதனாற்போலும், .........

> **"தமிழ்ச் சொல் வடசொல் இவ்விரண்டும்**
> **உணர்த்தும் அவனை உணரலுமாமே"[35]**

என 'தமிழகத்திற்கெனச் சிறப்பான சைவசித்தாந்தத்திற்
குப் பழமையான பெரியோரில் ஒருவராகத் திகழும் திரு
மூலர்'[36] கூறியிருப்பது மிகப் பொருத்தமுள்ளதாகத்
தோன்றுகிறது. ,,ஆகமங்கள் வடக்கிலும், தெற்கிலும்
வெவ்வேறு வடிவங்களில் வழக்கில் இருந்து வந்தபடியால்
வடஇந்திய சைவாகமம், தென்னிந்திய சைவாகமம் என
வும் வகைப்படுத்தலாம்[37] எனப்பட்டாச்சார்யா என்பார்
கூறுவதும் ஈண்டு கவனிக்கத்தக்கது. எந்த மொழியாயி
ருந்தாலும் சிவாகமங்கள் கூறுவது 'சைவசித்தாந்தம்'
என்பதனால் 'ஆகம மரபு சைவசித்தாந்தம்' எனபடுவ
தாயிற்று.

---

34. சுந்தரமூர்த்தி, டாக்டர். ஜி., வடமொழி நூல்களில் சைவ சித்தாந்தம், பகுதி-1, பகுதி-2, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1977.
35. சுந்தரமூர்த்தி, டாக்டர். ஜி., சைவசபயம் (தமிழ் மரபை ஒட்டியது) சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை. 1977. பக். 155.
36. திருமந்திரம், ஆகமச் சிறப்பு, 66.
37. Battacharya, T., The Cannos of Indian Art. Firma Mukkapadhyaya K.L., 2nd Ed. Calcutta, 1963, P. 331.

சிவாகமங்கள் வேதங்களின் தத்துவக் கருத்துக்களு டன் ஒத்துப் போகின்றன என்பதனைப் பின்வரும் பகுதி களில் சுட்டுகின்றன :-

> "ஆகமங்களினின்றும் பல பகுதிகளை எடுத்து அவை வேதக் கொள்கைகளுடன் ஒத்துப் போகின்றன" என்பதனை சுப்பிரபேதாகமத்தில் வரும் 'சித்தாந்த வேத சாரத்வாத்' என்பதற்கு வேதத்தில் சாரமாகச் சித்தாந்தம் அமைகிறது என்று பொருள், மாகுடாகும் சித்தாந்தம் பற்றிக் குறிப்பிடுமிடத்து 'வேதசாரம் இதம் சாஸ்திரம்' என்கிறது 'வேதத்தின் மிக முக்கியமான போதனை களைச் சித்தாந்தம் காட்டுகிறது' என்பது இதன் பொருள். அதே மகுடாகமம் மற்றோர் இடத்தில் 'வேதாந்தார்த்தம் இதம் ஞானம், சித்தாந்தம் பரமம் சுபம்' எனக் கூறும் வேதாந்தத்தின் மிகச் சிறப்பான இந்தச் சித்தாந்த அறிவு மிகவும் பாராட்டத்தக்கது' என்பதாம்"[38]

இங்கு குறிப்பிட்ட சித்தாந்தம் என்பது சைவசித்தாந் தத்தைச் சுட்டுகின்றதா ? என சிலரிடையே ஐயப்பாடு நிலவினாலும், 'சிவாகமங்கள் சித்தாந்தம்' என சிவஞான சித்தியார் ஏற்றுக் கொள்வதாலும் சிவாகமங்கள் சிலவற் றிலிருந்தும் எடுக்கப்பட்ட மேற்கோள் என்பதனாலும் அவை சைவ சித்தாந்தத்தைக் குறிக்கும் எனக் கருத இடமுண்டு.

**சிவன் பற்றிய வரலாற்றுச் செய்திகள் :**

சைவசித்தாந்தம் கூறும் மேலான பரம்பொருள் 'சிவம்' என்னும் கடவுளாகும். கி.பி.6-ம் நூற்றாண்டிற்கு முன்பு

38. ராமானுஜாச்சாரி ஏ., சைவசித்தாந்தம், பக். 3



வரை இக்கடவுள் தனக்கென ஒரு தனிப் பெயரைக்கொண் டிருந்ததற்கான ஆதாரங்களை பழந்தமிழ் இலக்கியங்களிற் காண்பதரிது. ஆயினும் கி.மு.3000 ஆண்டுகட்கு முற்பட்ட சிந்துவெளியில்[39] வாழ்ந்த மக்கள் சிவனைப் பெருந் தெய்வ மாக வழிபட்டனர் என்பதற்கான தொல்பொருட் சான்று கள் கிடைத்துள்ளபோதும், அக்கடவுளின் பெயரை நிச்ச யப்படுத்தும் கல்வெட்டெழுத்து சான்றுகளை ஆராய்வதில் சிக்கல்கள் காணப்படுகின்றன. 'சிவம்' என்னும் செம் பொருளை சிறப்புடைய கொள்கையாகக் கொண்டுள்ள சைவ சித்தாந்தக் கோட்பாடு 13-ம் நூற்றாண்டில் வாழ்ந்த மெய்கண்ட தேவரால் வடிவமைப்புப் பெற்ற போதிலும் அதன் கூறுகள் 13-ம் நூற்றாண்டிற்கு முன் தமிழ்நாட்டில் வழக்கிலிருந்தமை பன்னிரு திருமுறைகளின் வாயிலாகப் புலனாகின்றன.

எனினும் பன்னிருதிருமுறைத் தொகுப்பிலிடம் பெற் றுள்ள சைவ தோத்திர நூல்கள் யாவும் கி. பி. 6-ம் நூற் றாண்டிற்குப் பிற்பட்டனவாகும். நாயன்மார் காலத் திற்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களை ஆராயுமிடத்து ஆங்கு 'சைவம்', சிவம் என்னும் சொற்றொடர் பற்றிய வரலாற்று வளர்ச்சிக் கருத்துகளில் பெரும் சிக்கல் காணப் படுகின்றன. காலத்தால் முற்பட்ட பழந்தமிழ் நூலாக தொல்காப்பியம் இறைவனை 'முனைவன்' எனப் பொதுப் பெயரில் 'வாழ்த்தியலில்' பின்வருமாறு காட்டுகிறது.

> **'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
> **முனைவன் கண்டது முதனூலாகும்'**
> (தொல்காப்பியம், பொருளதிகாரம் - 649)

மேலும் சங்க இலக்கியங்கள் பலவும் சைவசமயக் கடவு

39. Marshal, Sir John, Indus Civilisation, Vol. I, Indological Book house, Delhi, 1973, P. 52.

ளான சிவனுக்குரிய பல்வேறு பெயர்களைக் குறிப்பிட்டுள்ளதையும் காணலாம்.

ஆலமர் கடவுள் - (புறம் 198)
ஆல்கெழு கடவுள் - (திருமுருகாற்றுப்படை, 256)
ஆலமர் செல்வன் - (சிறுபாணாற்றுப்படை 92)
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன் - (அகம் 181)

இவ்வாறு பல இடங்களில் குறிப்புகள் இடம் பெற்றபோதிலும் 'சிவன்' அல்லது 'சிவம்' என்ற பெயர் பற்றிய குறிப்புகளை நேரடியாகக் காண்பதரிதாகவே உள்ளது. "சிவம்" என்ற பெயர் சங்க இலக்கியங்களில் ஒரு முறை கூடப் பயன்படுத்தப்படவில்லை. சிவனிற்குரிய மற்றத் தமிழ்ப் பெயர்களை அவை குறிப்பிடுகின்றனவே ஒழிய சிவன் என்றும் பெயர் அவற்றில் இடம்பெறவேயில்லை'[40] என்ற டாக்டர் ஜி. சுந்திரமூர்த்தியவர்களின் கருத்தும் இதனையே எடுத்துக்காட்டும்.

அடுத்து ஐம்பெருங்காப்பியங்களை எடுத்து நோக்கின் அவற்றிலே 'சிவன்' பற்றிய 'சைவம்' தொடர்பான சில கருத்து வளர்ச்சியைக் காண முடியும். சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவிய நூல்களில் சிலப்பதிகாரம் இருமுறை சிவன் பற்றிக் குறிப்பிட்டுள்ளது.[41] கலித்தொகை கூறும் சிவநடனம் என்பது போல சிலம்பு சிவனின் மூவகை நடனங்களைக் கூறும். உமையுடன் ஆடும் கொடுகொட்டி நடனம், விஸ்வரூப தாண்டவம், பாண்டுரங்கம் என்பன அவையாகும். திரிபுரம் எரியும் போது கை கொட்டி யாடியது கொடுகொட்டி எனவும்[42]

40. சுந்தரமூர்த்தி, டாக்டர். ஜி., சைவசமயம், பக். 2,
41. சிலப்பதிகாரம்; 6 : 40. 45 ; 28 : 66-75 ;
42. மேற்படி 28 : 65-77



திரிபுரத்தை எரித்தபின்னர் வெண்ணீற்றை அணிந்து ஆடியது பாண்டுரங்கம் எனவும்[43] கூறப்படும். 'இமயத்தில் முக்கட்கடவுள் உறைவன் என்பதையும் சிலம்பில் காணலாம்.[44] இருந்தபோதும் 'சிவன்' என்ற சொல்லை மணிமேகலையில் நேரடியாகப் பயன்படுத்தியமைக்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆயினும் 'சைவம்' என்ற பெயரினை நாம் முதன் முதல் கி. பி. 5ம் நூற்றாண்டில் எழுந்த இந்நூலில் தான் காண முடிகிறது. மணிமேகலை காப்பியத்திலே ஓரிடத்தில் பௌத்த சமயத்தை ஸ்தாபிக்கும் நோக்குடன் மணிமேகலை தர்க்கம் மேற்கொண்டிருந்த வேளையில் 'சமயக் கணக்கர் தந்திரம் கேட்ட காதை' என்ற பகுதியிலே,

**'பரசு நின் தெய்வம் எது'**

என்ற மணிமேகலையின் வினவிற்கு ஒருவன்;

**"இருசுட ரோடிய மா னைம்பூதம் — . . . . . .**
**ஈசன் இறைவன் என நின்ற சைவவாதி,"[45]**

என விடையிறுப்பதிலிருந்து 'சைவம்' என்ற பெயரிலே ஒரு சமயநெறி அக்காலத் தமிழ் நாட்டிலே வளர்ந்திருந்தவாற்றை அறிய முடிகிறது.

அடுத்து வந்த கால கட்டத்தில் காரைக்கால் அம்மையார் என்பவர் தான் சிவனை முழுமுதல் கடவுளாகக் கொண்டு தோத்திரப் பாடல்களைப் பாடியுள்ளார். அவரது பாடல்களிலும் ஈசன், இறைவன், பெம்

43. மேற்படி, 6 : 40, 45;
44. மேற்படி, 28 : 65-77.
45. வேலுப்பிள்ளை, பேராசிரியர்., ஆ., காலமும் கருத்தும், பக். 43.

மான் எனப் பலவாறு சுட்டப்பட்டாலும் 'சிவன்' என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை. சிலப்பதிகாரத்தில் ஓரிடத்தில் 'சிவவரன் தேவன் சிவகதி நாயகன், [46] என்றவாறு 'சிவ' என்ற சொல்லடியைக் காண்பது போல், காரைக்கால் அம்மையார் பாடலின் இறுதிப் பாடல் ஒன்றிலே,

> ''காரைக்காற்பேய் செப்பிய செந்தமிழ்
> பத்தும் வல்லார்
> சிவகதி சேர்ந்து இன்பமெய்துவர்'' [47]

என்றவிடத்துச் 'சிவகதி' என்ற சொல்லைப் பயன்படுத்தியதைக் காணலாம். இந்த வகையிலே காரைக்கால் அம்மையார் பாடல்கள் தான் சிவனைப் பெருந் தெய்வமாக வர்ணிப்பனவாக அமைந்தன. கி.பி. 6ம் நூற்றாண்டைச் சேர்ந்த [48] தெனக் கருதப்படும் திருமந்திரம் என்ற நூலில் தான் 'சைவம்', 'சிவம்', 'சித்தாந்தம்' போன்ற சொல்லாட்சிகளை அதிகம் காணமுடிகிறது. 'சைவம்' 'சிவம்' சம்பந்தமானது என்ற கருத்து வளர்ச்சியை நமக்கு முதன் முதல் தமிழ்ச் சைவ வரலாற்றில் எடுத்துக் காட்டும் தமிழ் நூல் 'திருமந்திரமாக'வே காணப்படுகிறது.

> 'சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல்
> சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்' [49]

---

46. சிலப்பதிகாரம்., க0 : நாடுகாண்காதை; கஅ0.
47. காரைக்கால் அம்மையார், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், பாலன்பதிப்புக் கழகம், சென்னை, 1947, பாடல் எண் : 11
48. திருமந்திரத்தின் காலம் பற்றி இக்கட்டுரையின் 5ம் பக்கம் பார்க்க.
49. திருமந்திரம்; பாடல்:1512. 'சிவகதி' பற்றித் திருமந்திரம்: பாடல் எண்:2716.



என்ற திருமந்திரப் பாடலில் இருந்து இவ்வுண்மையினை உணரலாம். இவற்றிலிருந்து கி.பி. 6-ம் நூற்றாண்டின் பின்னரே தமிழ் இலக்கிய வரலாற்றில் சைவ சமயம் பற்றியும் அதன் முதற் கடவுளான சிவன் பற்றியும் தெளிவான குறிப்புக்கள் அறியப்படுகின்றன, எனலாம்.

**சைவ சித்தாந்தம் என்ற சொற்றொடர் :**

புராதன பாரதநாட்டு சமயநெறியான சனாதன தர்மத்திற்கு வடக்கே 'வைதிகம்' என்ற பெயரும், தெற்கே 'சைவம்' என்ற பெயரும் மிகப் பிற்பட்ட காலத்தால் ஏற்பட்டவை என்பது புலனாகின்றது. வேத நூல்களை முதலாகக் கொண்ட வைதிக நெறிவளர்ச்சி பெற்றதைப் போல வடக்கே காஷ்மீரில் கி.பி 8-ம் நூற்றாண்டளவில் பிரத்யபிக்ஞான சைவமும், கன்னடத்தில் வீரசைவமும், தெற்கே தென்னாட்டு சைவமும் ஆகம நூல்களை சிறப்பாகக் கொண்டு வளர்ச்சியடைந்தன. இவற்றுள் சிவாகமங்கள் இருபத் தெட்டையும் சிறப்பாகவும் வேதங்களைப் பொது நூலாகவும் ஏற்றுக்கொண்ட தென்னாட்டு சைவம் 'சைவ சித்தாந்தம்' என்ற தத்துவக்கோட்பாடாக 13-ம் நூற்றாண்டில் வடிவமைப்புப் பெற்றதையும் காணலாம். எனினும் 'சைவ சித்தாந்தம்' என்ற சொற்றொடர் முதன் முதலாகத் திருமந்திரத்தில் தான் காணப்படுகிறது.

> 'சொற்பத மேவித் துரிசற்று மேலான
> நற்பதம் கண்டுளோர் சைவசித்தாந்தரே' [50]

திருமந்திரத்திற்கு முன் தமிழ்நாட்டில் தமிழ்மொழியில் சைவசித்தாந்த நூல்கள் கிடையாதெனவும், திருமந்திரமே சைவசித்தாந்த தத்துவத்திற்கு முதன்நூலாக விளங்கு

---

50. திருமந்திரம் : பாடல் : 1421.

கின்றதெனவும், இந்நூல் கி. பி. 4ம் நூற்றாண்டிற்கும், 6-ம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டதாகலாம் எனவும் இராசமாணிக்கனார் கருதுவர்.[51] திருமந்திரம் சைவசித்தாந்தத்தை மட்டுமின்றி, தமிழ்ச் சைவத்தில் பல தந்திர மந்திர பகுதிகளையும் புகுத்தியுள்ளது என்றும், லிங்க வழிபாடு, துறவு பற்றியும், சுத்த, அசுத்த, கடும்சுத்த சைவப் பிரிவுகள் பற்றியும் பேசுகின்றதென்றும், அக்காலத்தில் இத்தகைய பல சைவப்பிரிவுகள் காணப்பட்டனவோ தெரியவில்லை எனவும் வேறு சில அறிஞர்கள் கருதுவர்.[52]

13ம் நூற்றாண்டிற்கு முன்பு 'சைவ சித்தாந்தம்' என்ற சொற்றொடர் திருமந்திரத்தால் மட்டுமின்றி பல்லவர் காலக் கல்வெட்டுக்களிலும் இடம் பெற்றுள்ளது. தென்னாட்டில் பல்லவர் காலத்திலே 2ம் நரசிம்மன் எனப்பட்ட இராஜசிம்மன் காலம் ஆகம மரபும் சைவ சித்தாந்தமும் பேணப்பட்டதாகக் கூறப்படுகிறது; இவனது சமய உணர்வானது இவன் காலக் கல்வெட்டுக்களில் பின்வருமாறு பிரதிபலிக்கின்றது.

"ஆகமத்தைப் பிரமாணமாகக் கொண்டவன்"[53]
"சைவசித்தாந்த வழியைப் பின்பற்றுபவன்"[54]
சைவசித்தாந்த மார்க்க ;

என்பன அவற்றுள் சிலவாகும். இவ்வாறாக கி. பி. 6ம்

---

51. இராசமாணிக்கனார்., மா., சைவசமய வளர்ச்சி, பக். 96.
52. சுந்தரமூர்த்தி, டாக்டர், கோ., சைவசமயம், பக்.115 வேலுப்பிள்ளை, பேராசிரியர். ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக். 123-124.
53. South Indian Inscription, Vol. I, No. 25.
54. Ibid., No. 24.



நூற்றாண்டின் பின்னர் தமிழ் சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் அடுத்து வந்த நாயன்மார் காலம் பெருவளர்ச்சியடைந்து கி. பி. 13ம் நூற்றாண்டளவில் சாஸ்திர நூல்களாக உருவாக்கம் பெற்றனவாகலாம்.

**வேதம் பொது-ஆகமம் சிறப்பு :**

தமிழ்நாட்டு சைவநெறிக்கும், பழைய வேத நெறிக்கும் பல வேறுபாடுகள் இருந்தபோதும் சைவசித்தாந்தம் வேதநூல்களை ஏற்றுக் கொள்கின்றது. அந்தணர்கள் வைதீக நெறியிற் பெற்ற சிறப்பினை சைவ நெறியிலும் பெற்றனர். வேதமும் ஆகமமும் இறைவனால் அருளிச் செய்யப்பட்டவை, அவை பொதுவும் சிறப்பும் என வழங்கப்படும் என்பது திருமந்திரக் குறிப்பாகும். வேதங்களையும், ஆகமங்களையும் முதனூலாகச் சைவ சித்தாந்தம் ஏற்பதனால் அதற்கு வேதாந்தம், வேத சித்தாந்தம் வைதிக சித்தாந்தம் என்ற பெயர்களும் உண்டு. சைவ சித்தாந்தம் தமிழ்நாட்டிற்கு அத்துவித மெய்கண்டார் அருளிய 'அத்துவித சித்தாந்தம்' எனவும் வழங்கப்படுவதுண்டு[55], இது முன்னரே காட்டப்பட்டது. எனவே

"வேதமொடாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள"[56]

எனவும்; 'பதியினைப் போல் பசு பாசமநாதி'[57]

எனவும்; சைவ முப்பொருளுண்மையும் வேதமரபும் திருமந்திரத்தால் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

---

55. வேலுப்பிள்ளை, பேராசிரியர். ஆ.. காலமும் கருத்தும், பக். 155
56. திருமந்திரம்; பாடல் : 237
57. மேற்படி; பாடல் : 115

**வேதங்களும் சிவவழிபாடும் :**

வேதநூல்களில் சிவ வழிபாடு பற்றிய கருத்துக்கள் காணப்படுகின்றனவா என ஆராய்வது இன்றியமையாதது ஆகும். சங்க இலக்கியங்களில் காணப்படாத சிவனது ஆற்றமை பற்றிய வளர்ச்சியை அவற்றிற்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த வேத இலக்கியங்களில் காண முடிந்தால் அவை எமக்கு சைவத்தின் தொன்மையையும், பழமையையும் எடுத்துக்காட்டுவதாகவும் அமையும். ரிக் வேதத்திலே ஓரிடத்தில் மட்டும் சிவ; என்ற சொற்றொடர் மங்கலம்' என்ற பொருளிலே இடம் பெறுவதாகக் காணப்படுகின்றது.[8] இது தவிர ரிக் வேதம் மூன்று பாடல்களில் மட்டும் ருத்திரக் கடவுட்குரிய அம்சங்களைக் குறிப்பிட்டிருக்கிறது. அவை அத்தெய்வத்தின் உருவ அமைப்பினையும், உடலின் அங்கங்கள் பற்றியதொரு படத்தினையும் பிரதிபலித்துக் காட்டுவனவாக உள்ளன. அவை வருமாறு

ருத்ரமால்ய குர்ஹஸ்த; கைகளையும்,[59]
'வஜ்ரபாஹோ', புஜங்களையும்,[60]
'புருரூபா உக்ரோ' அச்சம் தரும் இயல்பையும்[61]
'கபர்டீன்', சடாமுடியையும்[62]

கொண்டவன் ருத்திரன் என அக்கடவுளின் தோற்றம் வர்ணிக்கப்பட்டுள்ளது.

---

58. Griffith Raliph, T.H., The hyms of Rig Veda (Trans) Varanasi, 1963, Vol. I; X: 165.2.
59. Rig Veda; II : 33.7.
60. Ibid; II · 33.3.
61. Ibid; II : 33:9.
62. Ibid; I : 114.1.



இங்கே சுட்டிக் காட்டப்பட்ட அம்சங்கள் அனைத்தும் சித்தாந்தக் கடவுள் ஆகிய சிவனின் தோற்றத்தினை உள்ளபடியே பிரதிபலிப்பதனை எடுத்துக் காட்டுகின்றன. சித்தாந்தத்தில் கூறியபடி சிவனுக்குரிய முத்தொழிலும் ரிக் வேதத்தில் உருத்திரனுக்குரிய முத்தொழிலாகக் கூறப்பட்டுள்ளன. உருத்திரனது கோபமும் ரௌத்ராகாரமும் அவன் அழித்தல் தொழிலைச் செய்பவனாகக் காட்டுகின்றன.[63] சித்தாந்த சாஸ்திரமான சிவஞான போதம் என்ற நூலும் சிவனை அழித்தலைச் செய்யும் முதல்வனாகவே முதற் சூத்திரத்தில் அறிமுகப்படுத்துவதும் இவ்விடத்து நோக்கத்தக்கது.

> **"சங்கார காரணனாயுள்ள முதலே முதலாக**
> **உடைத்து இவ்வுலகம்"** [64]

அழித்தலைச் செய்யும் ருத்திரனும் ரிக் வேதத்தில் தலைமைக் கடவுளாக விளங்கியதை;

> **'ஈஸானத் அஸ்ய புவனஸ்ய'** [65]

என்றும், 'புவனஸ்ய பிதா'[66] என்பதில் உலகிற்குத் தந்தையாகவும் வர்ணிக்கப்பட்டுள்ளான். அதுமட்டுமின்றி 'அருளல்' என்பதும் அவனது தொழிலாக உணரப்பட்டுள்ளதுடன், காலப்போக்கில் பிற்பட்ட வேதநூல்கள் முத்தொழிலாற்றும் அதிகாரங்கள் யாவும் உருத்திரனுக்கே படிப்படியாக வழங்கப்பட்டுள்ளதை உணர்த்தியுள்ளன.[67]

---

63. Rig Veda; III : 33.9; X : 126.5; II ; 33.11.
64. சிவஞானபோதச் சிற்றுரை; பிரமாணவியல், சூத்திரம் 1, (நாவலர் பதிப்பு)
65. Rig Veda; III : 33.9.
66. Ibid; III : 49.10.
67. Ibid; III 33 11; I:43 1; சுவேதாஸ்வதரம் IV.4;IV:15

முத்தொழில் நிலைப்பாட்டை பிற்காலம் சைவசித்தாந்தம் ஐந்தொழிலில் அடக்கி பஞ்சகிருத்யம் செய்பவர் சிவன் எனக் காட்டியது. கடவுட் கொள்கையில் சித்தாந்தம் முழுமுதற் கடவுட்கு சொருபநிலை. தடத்த நிலை என இரு நிலைப்பாட்டை வகுத்து, தடத்தத் திருமேனி கொண்ட சிவனார் ஐந்தொழிலதிபதி எனவும், சொருபநிலையில் சிவம் வேதநூல்களையும் கடந்து நிற்கும் 'பரப்பிரம்ம சிவம்' என்பதையும் சிவப்பிரகாசம் 'பதியிலக்கணம்' என்ற பகுதியில் சிறப்பாக உணர்த்தியுள்ளது.

**"... ..பதிபரமேயதுதான் .. ... செல்வரிதாய்,**
**செல்கதியாய்ச்**
**சிறிதாய்ப் பெரிதாய் திகழ்வது தற்சிவம் என்பர்**
**தெளிந்துளோர்"**[68]

எனவே சித்தாந்தம் கூறும் பஞ்சகிருத்தியதிபதி சிவனாருக்கும் வேதங்களிடம் பெற்ற உருத்திரக் கடவுட்குமுள்ள தொடர்பு மிக நெருக்கமானது.

முத்தொழிலுக்கதிபதியாகிய ருத்ர சிவ வழிபாடு யசுர் வேத காலத்தில் முக்கியமான வளர்ச்சிக் கட்டத்தை அடைந்தது. இக்கால கட்டத்தில் உருத்திர சிவன் ஒன்றிற்கு மேற்பட்ட நாமங்கள் கொண்டவராக சிவமூர்த்திக்குரிய பண்புகளைப் பெற்றுக்கொண்டதொரு தலைமைக் கடவுளாக உயர்த்தப்பட்டார். யசுர் வேதம் நான்காம் காண்டமாயுள்ள தைத்திரிய சம்கிதையில் இடம் பெற்றுள்ள 'சதத்ருத்திரியம்' என்றும் பகுதி உருத்திரசிவ வழிபாட்டிலே குறிப்பிடத்தக்க மாற்றத்தை வெளிப்படுத்தி

68. சிவப்பிரகாசம், திருவிளக்கம் புத்துரை, யாழ்ப்பாணம், 1974, பதியிலக்கணம், பாடல்: 1



யது. உருத்திர சிவன் 'மலைவாழ் கடவுள்' என்பதை யசுர்வேதம் எடுத்துக்காட்டுகிறது.

**'கிரிஷன், கிரிதரன், என்பதுடன் நில்லாது.**[69]
**நீலக்கிரிவ, சிவாத்ம; சிவ;**[70]

உருத்திரன் சிவமூர்த்தியாக, பரமாத்மனாகவும் கணிக்கப்பட்டான். இதன் தொடர்ச்சியாக நோக்கினால் பிற்காலம் தென்னாட்டுக் கோவில்களில் அர்ச்சனை விதிகள் வளர்ச்சியடையவும் இந்த சதரத்திரியம் பகுதியே முன்னோடியாக அமைந்துள்ளது. ஏனெனில் அங்கு வழிபாட்டிலே உருத்திர சிவனுக்கு முதலில் எட்டு நாமங்களும். நூறு நாமங்களுமாக வளர்ச்சியடைந்து படிப்படியாக அவை முந்நூறு நாமங்களாகவும் பெருகியதுடன் அக்கடவுளைப் பொதுவாகவும், சிறப்பாகவும் கட்டி வழிபடுவதற்குரிய நெறியாகவும் அமைந்தன. இவற்றிலிருந்து அஷ்டோத்திர நாமாவளி, சதநாமாவளி, திரிசதி அர்ச்சனை முறைகள் என அவை சிவ வழிபாட்டிலே பல்கிப் பெருகிச் சித்தாந்த நெறியின் வழிபாட்டம்சத்தில் பெரும் செல்வாக்கைப் பெற்றன.

சிவ வழிபாட்டு நெறிக்கு மட்டுமின்றி தத்துவ கருத்து வளர்ச்சிக்கும் யசுர் வேதம் முன்னோடியாக அமைந்தது. தத்துவ மரபிலே யசுர் வேதம் உருத்திர சிவனை 'பசுபதி'யாகவும் வைத்தியநாதனாகவும் சிருட்டித்துள்ளமை இவற்றிற்கு உதாரணங்களாகவும், உருத்

69. Keith. Berriedale, A., Taittiriya Samhita, Part II; Kanda: IV; Motilal Banersidas, Delhi, 1967.
IV : 5 1.3; V : 5.1.4
70. Ibid! IV : 5.1.8; 5.1 7

திர சிவன் விலங்குகளின் தலைவர் என்னும் பொருளில்,

'பசுனும்பதி ; பசுபதயே :'[71]

என் யசுர் வேதம் சுட்டியுள்ளது. அத்துடன்,

நம : சிவாய சிவதராய நம;

என்ற பஞ்சாட்சர மந்திரங்களும் சதருத்திரியத்தின் இரு தய ஸ்தானமாக விளங்குகின்றன. வேதத்தின் உட்பொருள் 'பஞ்சாட்சரம்' என்பதனை ;

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல்
அருமறையும்'[72]

எனச் சித்தாந்த நூலும் விளக்கியுள்ளது. உருத்திரனைப் பற்றி சதருத்தியம் மேலும் கூறுகிறது ;

நமோபவாய ; ச ருத்ராய ச : சர்வாய ச
பசுபதயே ச ;
நமோ நீலக்கிரீவாய நம ச, சிறிகண்டாய ச
நம கபர்தினே சவ்யுப்த கேசாய ச;[73]

எனப் பலவாறு துதிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய துதிப்பாடல்கள் அதர்வவேதத்திலும் உருத்திர சிவனை நோக்கிப் புகழப்படும் பிரார்த்தனை வடிவங்

71. Ibid., IV : 5. 212 ;
72. உண்மை விளக்கம், வச்சிரவேல் முதலியார் தெளிவுரை (ஜே. எம். நல்லாசாமிப்பிள்ளை மொழிபெயர்ப்பு), யாழ்ப்பாணம், 1971, பாடல் : 44.
73. ஸ்ரீருத்ரம் : அண்ணா உரை, ராமகிருஷ்ண மடம், சென்னை, 1977. பக். 57.



களாக அமைந்தன. பவன், சர்வன, உருத்திரன், சங்கரன், ஈசானன் என்பன அத்தகைய திருநாமங்களில் குறிப்பிடத்தக்கனவை.[74] 'உலகைப் படைப்பவரும், துன்பங்களைத் துடைப்பவரும், பாவத்தைப் போக்குபவரும், கண்டங்கறுத்தவரும், உயிரினங்களின் தலைவராயும், திருநீலகண்டராயும், சடாமுடியராகவும், அதே சமயத்தில் சடாமுடி நீக்கப் பெற்ற துறவியராகவுமுள்ள உருத்திரக் கடவுட்கு வணக்கம்' என்றிவ்வாறு அதர்வ வேதம் உருத்திரக் கடவுளைப் பிரார்த்திப்பதாகக் கூறுகின்றது.[75] அத்துடன் உருத்திர சிவன் 'பசுபதி' என்றழைக்கப்பட்டான் என்னும் யசுர் வேதக் கருத்தினையொட்டி அதர்வ வேதத்திலும் பின்வரும் கருத்து அமைந்துள்ளது. உருத்திர சிவன் மனிதர்களுடனும், குதிரை, ஆடு, செம்மறியாடு, பசு என விலங்குகளும் சூழ வீற்றிருப்பவர்' என்பதாம்.[76] சித்தாந்தக் கோட்பாட்டிலே இடம் பெற்ற 'பசுபதி' கொள்கையின் ஒரு அறிமுகமாக இதனைக் கருதலாம்.

சைவநெறியிற் சிவனார் நோய் தீர்க்கும் வைத்திய நாதனாகவும், வைத்தீஸ்வரனாகவும் சித்தரிக்கப்படுவது போல வேதங்களும் உருத்திர சிவனின் பண்புகளில் ஒன்றாக அவற்றினை வர்ணித்துள்ளன.[77]

'பிரத மஸதவ்ய பிகிசஜா' என வருமடிகளில் அக்கடவுள் 'முதல் தெய்வீக வைத்தியன்' எனவும்,

'சகஸ்ரம தே ஸ்வபிவாத பேஷஜா'[78] என்பதில் 'ஆயி

74. Atharva Veda; XV: 5 : 1-7.
75. Ibid; IV : 74 3
76. Ibid; XI : 2.9
77. Taittirya Samhitha; IV : 5.1.13
78. Rigveda; VII : 46.3; II:3 '.12

ரம் மருந்துகளையுடையவன்' எனவும், 'எதிரிகட்கு நோயை ஆயுதமாகப் பயன்படுத்துபவன்'[79] என்றெல்லாம் குறிக்கப் பட்டுள்ளன.

வேத நூல்களில் சொருப சிவத்தைக் குறிக்கும் சூக்கும பஞ்சாட்சர மந்திரம் நடுநாயகமாகப் போற்றப்பட்டுள்ளது. இத்தகைய வேத பாரம்பரியத்தைப் பின்பற்றியே திருமந்திரமும், சூக்கும பஞ்சாட்சரம், தூல பஞ்சாட்சரம் என்பவற்றை சிறந்த மந்திரமாகக் போற்றியிருக்க வேண்டும். பிற்காலம் எழுந்த சைவசித்தாந்த பாரம்பரியத்திலும் அதற்கு முன்னோடியாக எழுந்த பன்னிரு திருமுறைகளிலும் கூட நால்வேதங்களும், பஞ்சாட்சர மந்திரமும் நடுநாயகமாகக் கொண்டு மிகவும் போற்றப்பட்டுள்ளன.

தேவாரத் திருமுறைகளில் சிவனார் வைத்தீஸ்வரனாக வைத்தியநாதனாக விளங்குவதையும் அவர் உருத்திரனாகப் போற்றப்படுவதையும்;

உருத்திரனை உமாபதியை உலகாளனை,[80]
உருத்திர பசுபதி,[81]
உருத்திர நாதனுக்குத்தீ பிற,[82]

எனவும்,

---

79. Atharva Veda; X : 2.2
80 பன்னிரு திருமுறைத் திரட்டு; சைவசித்தாந்த நூற் பதிப்புக்கழக வெளியீடு, சென்னை, 1961, பாடல், 382.
81. மேற்படி; சுந்தரர் தேவாரம், பாடல் : 1323.
82. திருவாசகம், திருவுந்தியார், பாடல் ; 5.



வேதத்திலுள்ளது நீறு, வெந்துயர் தீர்ப்பது நீறு,[83]
ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் கூத்தன்,[84]
தீராத நோய் தீர்த்தருளவல்லான்,[85]
மூலநோய் தீர்க்கும் முதல்வன்,[86]
பிறப்பறுக்கும் மருந்து,[87]

எனவும் போற்றப்பட்டுள்ளதிலிருந்தும் உணரலாம். வேத மரபினைக் கூட நாயன்மார்களும், மெய்யடியார்களும் தமது பாடல்களில் ஆங்காங்கு எடுத்துக்காட்டினார்கள்.

பஞ்சாட்சர மந்திரமும் பெருமளவு அவர்கள் பாடலில் பிரபல்யமடைந்தது. சம்பந்தரின் திருநீற்றுப் பதிகத்தில்,

**'வேதம் நான்கினும் மெய் பொருளாவது**
**நாதன் நாமம் நமச்சி வாய வே'**

எனவும், அப்பர் தேவாரத்தில்,

**நமசிவாய வே ஞானமும் கல்வியும்**
**நமசிவாயவே நானறி விச்சையும்**
**நமசி வாயவே நா நவின் றேத்துமே**
**நமசி வாயவே நன்னெறி காட்டுமே எனவும்**

மணிவாசகர் சிவபுராணத்தில்

**'நமசிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க எனவும்,**

---

83. பன்னிரு திருமுறைத் திரட்டு; சம்பந்தர் தேவாரம், பாடல் : 1546.
84. திருவாசகம்; திருவெம்பாவை, பாடல் : 12.
85. மேற்படி நூல், அப்பர் தேவாரம், பாடல் : 259.
86. மேற்படி; பாடல் : 1524.
87. திருவாசகம், கோயிற்றிருப்பதிகம், பாடல் : 4.

சிவனாரை வேதநாயகனாகத் துதித்துள்ளனர். இவ்வாறு சைவசித்தாந்தம் வேதநெறியைப் பரவலாகப் போற்றுவதும், பெரியபுராணமும்,

'வேதநெறி தழைத் தோங்க, மிகு சைவத் துறை விளங்க'வும் சம்பந்த பெருமான் தோன்றினார் என்று கூறுவதை நோக்கும்போது வைதிக நெறியும், சைவ நெறியும் ஒருமைப்பட்டு வளர்ச்சி பெற்ற நிலையினை எண்ணிப் பார்க்க முடிகிறது "தேவாரங்களில் வேத வேதாகமங்கள் பற்றிய கூற்றுக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன" என்று கூறும் பேராசிரியர் வேலுப்பிள்ளை[88] வேதங்களில் காணப்படும் ருத்திர வணக்கம் பிற்கால சைவ சமயத்தின் முன்னோடியாகக் கொள்ளப்படுகிறது எனவும், திரிபுரம் எரித்த கதையும், தக்கன் வேள்வி சிதைத்தக் கதையும் யசுர் வேதத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ளதுடன் உருத்திர சிவன் பற்றிய பழைய கதைகள் சதருத்திரியத்திலே கூறப்பட்டவை' எனக் கூறியுள்ளமையும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.[89]

**வைதிகமும் பௌராணிகமும் :**

வட இந்தியாவில் ஒருகாலம் பௌத்த, சமண சமயங்களின் எழுச்சியினால் நிலைகுன்றியிருந்த வேதகால வைதிக நெறியானது கி. பி. 5ம் நூற்றாண்டில் குப்தர் ஆட்சிக்காலத்தில் மீண்டும் மறுமலர்ச்சி பெற்றதுடன் வேதசமயம் தம் அறிவு, ஆற்றல், ஒழுக்கங்கட்கேற்ப வைதிகக் கடவுளர்கள் பற்றிய கற்பனை கலந்த கதைகளை தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு விரித்துரைக்கும் புராணமாக அமைத்துக் கொண்டது. இவ்வாறு வைதிக நெறி குப்தர் காலம் பௌராணிக சமயமாகியதும், இப் பௌராணிக

88. வேலுப்பிள்ளை, ஆ., காலமும் கருத்தும், பக். 122.
89. வேலுப்பிள்ளை, ஆ., காலமும் கருத்தும், பக். 99.



சமயம் தமிழகத்துப் பழைய சமய முறைகளுடன் கலந்து பல்லவர் கால சைவமாகியது. வடநாட்டு பௌராணிக சமயத்திற்கும், தென்னாட்டில் பல்லவர் காலம் மறுமலர்ச்சியடைந்த சமயத்திற்கும் ஒரு வேற்றுமையுண்டு. சமண பௌத்தர் ஒதுக்கி வைத்த தமிழ்நாட்டு வழிபாட்டு முறைகளை, சங்க மருவிய காலம் வாழ்ந்த சைவ சமயத்தோர் தமக்கேயுரிய முறையில் பௌராணிக வைதிக நெறியுடன் ஒன்றுபடுத்தினர்.[90]

"எனவே தமிழ்நாட்டு சைவ நெறியை வைதிகமரபின் சிறப்பான சாரம் எனக் கூறுவது தவறாகாது. நாயன்மார்கள் வைதிக மரபிற்கும், வேதங்கட்கும் அளித்த மனப்பூர்வமான கேள்விக்கிடமற்ற ஆதரவினால் சைவ சித்தாந்த நூல்கள் பிற்காலம் தங்களை முற்றாக வைதிக மரபில் இணைத்துக் கொண்டன. "நாயன்மார்கள் இல்லையெனில் வேதமரபிற்கும் ஆகம மரபிற்கும் இடையே ஓர் இடைவெளி இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.[91] இவ்வாறு சைவ சித்தாந்த வளர்ச்சியில் வேத நெறி மரபானது ஊடுருவியிருப்பதை இவற்றின் வாயிலாக அறியமுடிகிறது.

"வேதங்களில் உருத்திரக் கடவுட்கு கூறப்பட்ட
வணக்கத்தையும் வழிபாட்டையும் கொண்டு கொடுமை
செய்யும் இயல்புடைய முரட்டுத்தனமான உருத்திரக்
கடவுளை பழங்கால மக்கள் தம் வழிபாட்டால் உவப்

90. மேற்படி., பக். 81
91. சுந்தரமூர்த்தி, டாக்டர், கோ., சைவசமயம், பக் 37-38.

படையச் செய்து நன்மை செய்யும் சிவனாக மாற்றினர்" [92]

எனச் சில ஆய்வாளர் கருதுவது தவறான முடிவாகும் என்பதனை

''இவ்வாறு முடிபு காண் பவர் வேதத்தில் பேசப்பெறும் கடவுளரை வெறும் வளி மண்டல நிகழ்ச்சிகளின் உருவமாகக் கொண்டு அக் கடவுளரின் இயல்பு களைச் சரியாக உணரத் தவறினர் என்னும் தம் கருத்தை சி. வி. நாராயண ஐயர் வேத மொழிகளைக் கொண்டே நிலைநாட்டியுள்ளார்" [93]

என்ற பேராசிரியர். தேவசேனாபதியின் கருத்தும் இங்கே குறிப்பிடத்தக்கதாகும். வேதங்கட்கு உரை கண்ட சாய ணர் என்பார் உருத்திரனின் இயல்பினை உணர்வதற்குத் தரும் விளக்கங்களில் ஒன்று பின்வருமாறு :

> "ருத் என்பது துன்பம் அல்லது துன்பத்திற்குக் காரணமான பாவத்தைக் குறிக்கும், அதனை நீக்குபவன் ருத்திரன் என்று பெயர் பெற்றான்'' [94]

என்பது போல சைவசித்தாந்த விளக்கத்திலும்,

> **"இன்பம் செய்வதில் சங்கரன் ... — —**
> **இடும்பை நோய் என்பதோட்டுமியல்பில்**
> **உருத்திரன் — — ..." [95]**

92. தேவசேனாபதி, வி.ஏ., சைவசித்தாந்த அடிப்படை கள், சென்னைப் பல்கலைக்கழகம், 1982, பக். 2.
93. தேவசேனாபதி. வி.ஏ., சைவசித்தாந்த அடிப்படை கள், பக். 2.
94. மேற்படி., பக். 2.
95. சிவஞானமுனிவர்., காஞ்சிப்புராணம், பரமேஸ் வர படலம், பாடல் : 44



என்ற 'சிவஞான முனிவர்' கூற்றும் ஒப்புநோக்கத்தக் கது. ஆதலால் 'பழைய விஷ்ணு, பிரஜாபதி போன்ற வேதக் கடவுளருள் சிவனும் முதல்வனாவான் என்பர்' பேராசியர் உறிரியண்ணா.

**வேதமரபும் சித்தாந்த சாஸ்திரங்களும் :-**

வேதமரபின் தொடர்ச்சியானது சைவ சித்தாந்த சாஸ்திர நூல்களிலும் குறிப்பிடத்தக்க செல்வாக்கைப் பெற் றுள்ளது. அதன் வழி சைவசித்தாந்தக் கோட்பாட்டிற்கு வேதம் பொது நூலென்றும் ஆகமம் சிறப்பு நூலென்றும் கொள்ளும் மரபு சித்தாந்தந்தில் வேரூன்றியது.

ஆகவே

> "வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள் ..
> ஆதிநூல் அனாதி அமலன் தருநூலிரண்டு
> ஆரணநூல் பொது, சைவம் அரும் சிறப்பு நூல்" [97]

எனச் சிவஞான சித்தியார் இவ்வாறு வரையறை செய் துள்ளது. சைவ சித்தாந்தத்தின் முதன் நூல் எனத் தமிழி லே கருதப்படும் சிவஞானபோதம் வேதங்களின் தத்துவ விசாரம் பற்றி விவாதிக்குமிடத்து 'ஏகம்ஸத்' என வேதம் கூறுவது, 'உள்பொருளாம் பரம்பொருள் ஒன்று' என்ப தையும் பதிக்கு வேறாயுள்ளபசு பாசத்துடன் சேர்ந்துள்ளது,

96. ஹிரியண்ணா, எம்., இந்தியத் தத்துவம், பகுதி-1, தமிழ்நாட்டு பாடநூல் நிறுவனம், 1966, பக். 98-99 பார்க்க.
97. சிவஞான சித்தியார் புத்துரை, திருவிளங்கம், சைவத்திறம், பாடல் : 267.

ஆகையினால்;

> 'அக்கரங்கள் இன்றும் அகர உயிர் இன்றேல்
> இக்கிரமத் தென்னும் இருக்கு'' 98

என்பதில் பிரமம் இல்லையெனில் வேறு பொருளுமில்லை என்பதை விளக்கியுள்ளது. மேலும்

> "அத்து விதமாதல் அருமறைகள் ஒன்றென்
> றோது
> அத்துவிதம் என்றுறையுமாங்கு'' 99

என்றவிடத்திலும் வேதநூல்கள் பிரமம் ஒன்றெனில் அதனை 'ஏகம்' எனச் சொல்லாது 'பிரமம் அத்துவிதம்' எனக் கூறுவதிலிருந்து, பிரமம் உயிர்களுடன் அத்துவிதமாய் நிற்கும் என்பதன் பொருட்டாகும்; ஆதலால் 'ஏகம்' என்பதுடன் முரணுமாறில்லை' எனவும் சைவசித்தாந்தக் கடவுட் கொள்கை வேதச் சார்பிலே தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

சிவஞான சித்தியார் வேதநூல்களை அனுசரணையாகக் கொண்டே சைவ சித்தாந்தக் கோட்பாட்டை அணுகியுள்ளது போலத் தோன்றுகிறது. அந்நூற்பாயிரம் 'வேதாகமங்களாலும் அறியப்படாத சிவன் சித்தாந்தப்பதிப் பொருளாயினும், அறிவின் துணை கொண்டு நாடுவோர்க்கு ஆன்மாவின் அருளோடு பொருந்தி உயிர்க்குயிராகும் பரமாத்மாவாகி அறிவை நல்குவான்' எனக் கூறும்[100]. ஆகையினால்,

---

98. சிவஞானபோதச் சிற்றுரை, சூத்திரம் 2; அதிகரணம்; பாடல் : 2.
99. சிவஞான போத சிற்றுரை, 2:1:3
100. சிவஞான சித்தியார், புத்துரை, பாயிரம், பாடல் : 2.



> "மறையினால் அயன், மாயன் மனதினால் வாக்
> கால் மற்றும்
> குறைவிலா அளவினாலும் கூறவொண்ணான்'' 101

எனினும் ;

> "சிறப்புடைப் புராணங்கள் உணர்த்தும் வேதச்
> சிரப் பொருளை மிகத் தெளிந்து சென்றோர்"
> —சைவத்திறத் தலைமவர்'' 102

என்பதே சித்தாந்த சாரமாகும் எனச் சாத்திர நூல்கள் கூறுவதிலிருந்து வேதசிரசென்னும் உபநிடதப் பொருளை பாராய்ந்து தெளிவுற்றோர் சிவாகம நெறியடைவர் என்பது புலப்படுகின்றது. இவற்றின் வாயிலாக சித்தாந்த நூல்கள் வேதங்களையும் வேதத்தின் ஞானகாண்டப் பகுதியையும் விதந்தோதும் பாங்கினை உணரலாம். வேதவேதாந்தப் பொருளை வேறுபடச் சொல்லும மீமாம்சை போன்ற நூல்கள் வேதப் பொருளைச் சொன்னாலும் உபநிடதங்கட்கு மாறானவை என்பதால்; அவற்றைப் பூர்வ பக்கமாகவே சித்தாந்தம் கருதுவதும் வேதநூல்களின் ஞானபோதனைக்கு அதுவழங்கும் மேலான இடத்தினையும் புரிந்து கொள்ள ஏதுவாகிறது. இதனை,

> "பண்டைநான்மறைகளும் அதுதானே என்று
> பாவிக்கச் சொல்வது இப்பாவகத்தைத்
> தானே'' 103

'சிவம் + நான்' என்னும் சிவோஹம் பாவனை வாயிலாக பழைய வேத வேதாந்த நூல்களும் சிவோஹம் பாவனை

---

101. மேற்படி; பாயிரம், அவையடக்கம், பாடல் 5.
102. மேற்படி; 8.2.263.
103. மேற்படி; சிவோஹம்பாவனை, 9.2.298.

யையே 'அகம்+நான்' என்ற பாவனையில் சுட்டியுள்ளன எனச் சித்தாந்த நூல்கள் கூறுவதிலிருந்து சைவ சித்தாந்த முடிவுகள் வேதபாரம்பரியத்திற்கு மதிப்பளிப்பவையாக அமைக்கப்பட்டுள்ளன என்பதை அறிய முடிகிறது.

சார்பு நூலான சிவப்பிரகாசம் என்ற சித்தாந்த சாத்திர நூலும் சித்தியாரின் கருத்தைப் பின்பற்றியே வேத மரபின் பரிணாம வளர்ச்சி சைவசித்தாந்தம் என்பதைப் பின்வரும் பாடலால் உணர்த்தி உள்ளது.

**"வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன் தெரிக்கலுற்றும்**[104]

என்பதுடன்,

**'பல்கலையாகமம் வேதம் யாவையினும் கருத்துப் பதி பசு பாசம் தெரித்தலாம்''** 105

என்பதன் வாயிலாக வேதாகமங்களின் உட்பொருள் முப்பொருள் விளக்கம் பற்றியதாகும் என்பது பெறப்படுகின்றது அவற்றுள் முப்பொருளும் ஒரு பொருளில் அடக்கம் என விளக்குவது வேதாந்தமாகவும் முப்பொருளும் தனித் தனி உண்மை' என விளக்குவது சைவசித்தாந்தமாகவும் மலர்ந்தது.

வேதநெறிக்கும் சிவாகம நெறிக்கும் பேதமில்லை என்பதை பிரமசூத்திரத்திற்குச் சித்தாந்தபரமாக உரை செய்த நீலகண்ட சிவாச்சார்யார் என்பார் எடுத்துக்காட்டியுள்ளார்.

**'உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பது**

---

104. சிவப்பிரகாசம், திருவிளங்கம்புத்துரை, பாயிரம்: பாடல் : 7

105 மேறபடி; 'பதியிலக்கணம்,' பாடல் : 13.



**நிலவும் மெய்நெறிச் சிவநெறியதென்பதும்"** 106

**"யாம் வேதத்திற்கும் சிவாகமத்திற்கும் வேற்றுமை கண்டிலம் சிவனுற் செய்யப்படுதலில் வேதமும் சிவாகமம் எனப்படும்"**107

என வேதநெறி தான் காலத்தின் பரிணாமத்தைப் பெற்று தமிழ் நாட்டுச் சமயநிலைகட் கேற்ப மாற்றமடைந்து சிவாகமநெறியாகி காலப்போக்கில் சைவசித்தாந்தக் கோட்பாட்டமைப்பிற்கும் ஏதுவாயிற்று என கோடிட்டுக் காட்டுவது போலுள்ளது. சில சமயங்களில் மேற்குறிப்பிட்ட கருத்துக்கள் காலத்தின் கருத்து வளர்ச்சியையே ஒட்டி வலிந்து ஒருமைப்பாடு காண வினையும் ஒரு முயற்சியாகலாம் என்ற கருத்து வேறுபாடுகள் எழுந்தாலும், சைவத்தின் தொன்மையும் சிவ வழிபாட்டின் பழமையையும் வேதமரபு வளர்த்துக் கொடுத்துள்ளது என்றெண்ணுவது தவறாகாது. எனவே வேதங்களும் சிவாகமங்களும் சித்தாந்தக் கோட்பாட்டிற்குப் பிரமாண நூல்களாக விளங்குவதன் தாற்பரியமும் இங்கு புலனாகின்றது.

மேலும் வேதம் சித்தாந்தத்திற்குப் பிரமாண நூலன்று எனச் சிலர் மறுப்பினும் அது விவேகம் அற்றோர் சிந்தனை என்பதைச் சிவஞான முனிவர்;

"வேதாந்தத்தில் ஏகனே ஆன்மா என வேதாந்தத்தைப் புறச சமயத்தாரு எடுத்தோதி மறுப்பதால்வேதம்

---

106 சிவஞான சுவாமிகள்; சிவஞான மாபாடியம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1968, பக். 23.

107. மேற்படி; பக். 22.

> பிரமாணமன்று என (சிலர்) மறுப்பர். அது பகுத்தறிவிலாதோர் கூற்று''[108]

எனச் சுட்டிக் காட்டுவது பிரம சூத்திரத்தை மறுப்பது போல வேத நூல்களை நாம் தள்ள முடியாது என்பதனை இதைவிடச் சிறப்பாக விளக்குவது கடினமாகும்.

> **"வேதசாரம் சிவாகமம் ஆதலால்**
> **சைவாசாரத்திற்குரியோன் வைதிகன்''**[109]

என்று வைதிக சைவ நெறிக்கு மாறுபாடில்லாதது சித்தாந்த நெறி எனச் 'சிவஞான பாடியத்திறவுகோல்' என்ற நூல் வாயிலாக இதனை மேலும் புலப்படுத்தியுள்ளனர்.

இவர்களைப் பின்பற்றி பின்வந்த ஈழத்து அறிஞர்கள் பலரும் வேதபாரம்பரியம் சைவசித்தாந்தத்தின் தொன்மைக்குப் பிரமாணமாவது என்பதை தமது நூல்களிலும் வெளிப்படுத்தியுள்ளனர். இவர்களில் ஆறுமுகநாவலர், அவரைத் தொடர்ந்து வந்த சபாபதி நாவலர் இலக்கணம் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான், பண்டிதமணி கணபதிப் பிள்ளை போன்றவர்கள் சிறப்பானவர்கள் குறிப்பாகக் காசிவாசி செந்திநாதையர் என்பாரால் எழுதப்பெற்ற சைவவேதாந்தம் தேவாரம் வேதசாரம் போன்ற நூல்கள் இவ்வரிசையில் சிறப்பிடம் பெற்றுள்ளன.

வடமொழி நூல்களான வேத உபநிடதங்களிலிருந்து பிழிந்தெடுத்த சாரமான பிரமசூத்திரக் கோட்பாடு வட நாட்டிலே வேதாந்தக் கொள்கையாகப் பிறப்பெடுத்தது போன்று; தென்னாட்டிலும் வடமொழி நூல்களின் செல்வாக்கினாலும் வேத இலக்கியங்களின் படிப்படியான

108. சிவஞான மாபாடியம்; பக். 23.
109. மேற்படி; பக். 23.



கருத்துப் பரிமாற்றங்களாலும் வேதசிவாகம உண்மைகளைப் பிழிந்தெடுத்து அதன் சாரமாக சைவசித்தாந்தம் என்ற பெயரிலே ஓர் உன்னத தத்துவமாகப் பிற்காலம் அவற்றினைச் செப்பனிட்டனர் எனவும் கூறலாம். ஏனெனில்;

> **'வேதம் பசு அதன்பால் மெய் யாகம் நால்வர்**
> **ஓதும் தமிழ் அதனின் உள்ளுறுநெய்-போதமிகு**
> **நெய்யின் உறுசுவையாம் நீள் வெண்ணெய்**
> **- மெய்கண்டான்**
> **செய்த தமிழ் நூலின் திறம்'**[110]

என்ற மேல் வரும் பாடலானது அவ்வுண்மையினையே தெளிவாக உருவகித்துக் காட்டுகிறதெனலாம்.

**முடிவுரை :**

மொழிவேறுபாட்டினையும் இன வேறுபாட்டினையும் பெரிதுபடுத்தி நூல்களிலுள்ள சைவக் கருத்து வளர்ச்சியினைப் புறக்கணிப்பதன் இழப்பு நம்மவர்க்கேயன்றி வட மொழியாளர்க்கு அல்ல என்பதனால் அவற்றின்கண்ணுள்ள சித்தாந்தக் கருத்து வளர்ச்சியை அறியமுற்படுவதே அறிவுடைமையாகும். ஆங்கிலம் பொதுமொழி. அதனைப் படிக்கிறோம். அக்கருத்துக்களைத் தமிழில் வெளியிடுகிறோம். மொழி பெயர்க்கிறோம். அவ்வாறே சீனமொழி, ஜெர்மானிய மொழி, உருது மொழி எனப் பல மொழிகளில் பாண்டித்யம் பெற்ற தமிழ் அறிஞர்கள் அம்மொழிகளிலேயே சில ஆராய்ச்சிகளை வெளியிடுவதால் அவர்கள் தமிழ் மொழிப் பற்றற்றவர்கள் எனச் சொல்லுவதும் ஏற்புடைமையாகாது. அதுபோல வடமொழியில் பாண்டித்யம் பெற்ற அக்காலத் தமிழறிஞர் பலரும் தமிழ் மொழியில் மட்டுமின்றி வட

110. ராமானுஜாச்சாரி, ர., சைவ சித்தாந்தம், பக். 8

மொழியிலும் தத்துவ நூல்களை வெளியிட்டனர். அவை வடமொழியில் இருப்பதால் அவற்றினை மறுத்துவிட்டோமென்றால் உமாபதி சிவாச்சாரியாரின் சங்கற்ப நிராகரணம், சிவஞானமுனிவரின் நூல், சித்தாந்த சாராவளி, சிவாக்கிர யோகிகளின் நூல்கள் எனும் இவற்றிலேயுள்ள சித்தாந்தக் கருவூலங்களையும் நாம் அறிய முடியாது போகவும் வாய்ப்புண்டு

தமிழர்கள் பிறமொழிப் பாண்டித்யம் பெறுவதால் தாய்மொழிப்பற்று ஒரு போதும் மறைந்து விடுவதில்லை மாறாக அவர்களால் பிறமொழியிலுள்ள விஞ்ஞானக் கருத்துக்கள் முதல் சகல துறைகளின் அறிவு வளர்ச்சிப் பெருக்கமும் தமது மொழியிலும் வளருவதற்கு அவ்வறிவு ஏதுவாகிறது அதுமட்டுமின்றி வடமொழி இன்று பேச்சுவழக்கற்றுப் போன ஒரு மொழியானாலும்; ஆலயங்களில் மட்டும் பேணப்படும் தெய்வீக மொழியாக இந்தியாவில் மட்டுமின்றி, ஈழத்துக் கோவில்களிலும் செல்வாக்குப் பெற்றுள்ளது. 'ஞானமென்பது மோனநிலை' என்றவாறு உண்மையான உறுதிப்பொருளை அடைந்தவர்க்கு பேச்சு மொழியின் அவசியம் வேண்டப்படுவதில்லை. எனவே தான் அனுபூதி பெற்று மெய்ஞ்ஞானமடைந்த சில ஞானிகளை எந்தத் தத்துவக் கோட்பாட்டிலும் அடக்கமுடியாமல் ஆய்வாளர் சிந்திக்கின்றனர். ஏனெனில் அவர்களும் இறைவனைப் போன்று காலதேச வர்த்தமானங்களை கடந்த தத்துவாதீத நிலையடைந்தவர்களாயிருப்பதே அதற்கு காரணமாகும்.

பேச்சற்ற நிலையே ஒருமைத்தன்மை அடைந்தோரின் பூரணத்துவத்தைக் காட்டுவதால் அவர்களிடம் சாதி, மொழி, மத அபிமானம் எதுவுமே தனித்தன்மை பெற்று வெளிப்படுவதில்லை. மாறாக இவையனைத்தையும் கடந்தவர்களையே 'ஞானிகள்' 'அனுபூதிமான்கள்' மெய்யடியார்கள் என்றெல்லாம் போற்றுவதைப் பார்க்கிறோம்



எனவே 'சிந்தனையை அடக்கியே சும்மாயிருக்கும் திறத்தை'யே அவர்கள் நாடிநிற்கும்போது சாதாரண அறிவு நிலையில் நின்று தத்துவத்திற்காக மட்டும் மொழியுணர்வு என வாதாடுவது அத்தகைய மெய்யறிவாளரிடம் காணப்படாததொன்றாம். ஒரு சமயம் தத்துவ சிந்தனையாளர்க்கு மொழியுணர்வு தேவைப்படுவதாகத் தோன்றலாம் - ஆனால் மெய்யுணர்வு பெற்ற ஞான விழிப்புணர்வை அடைந்தோர்க்கு மொழியுணர்வு அவசியமற்ற ஒன்றென்றே கூற வேண்டும் 'சப்தம்' ஒன்றே அவனையறியப் போதுமானது. 'ஓசை ஒலி எலாம்' ஆன பரம்பொருளை எல்லா மொழியிலும் அறியலாம், என்பது அனுபூதிமான்கள் கண்ட உண்மையாகும். இந்தியாவின் சமயம் 'இந்து சமயம்' என்ற நிலையினை மறந்து இன, மத, மொழி பாகுபாடுகளைத் தூண்டுவதன் மூலம் சமய ஒருமைப்பாட்டிற்கே அவை சோதனைக்களமாகவும் மாறிவிட நேரிடுகிறது. இத்தகைய எண்ணப்பாங்கால், இந்து சமயத்தின ஒருமைப்பாடும், உயர்வான மானிடம் தழுவிய அருளையும், புதுமைக்குப் புதுமையாக மிளிரும் பண்பாடும், உலகளாவிய சமய சகிப்புத் தன்மையும் கொண்ட அதன் பரந்த நோக்கங்களையும், இலட்சியங்களையும் இக்கண்ணோட்டப் பாதிப்பதாகவும் அமையும்.

எனவே வேதாகம நூல்களின் தொன்மையினையும், பாரம்பரிய மரபுகளையும், பேணுவது மட்டுமின்றி 'சுத்தாத்வைத சைவ சித்தாந்தத்தை' தமிழ்நாட்டில் 13ம் நூற்றாண்டில் நிறுவுவதில் தமிழ்நாட்டுச் சைவமானது பெருவெற்றி அடைந்ததையும் மறுப்பதற்கில்லை. இத்தகைய உயரிய சைவசித்தாந்த நெறியானது உலகின் பல்வேறு மொழிகளில் அறிமுகப்படுத்தப்படும்போது மேலும் உயர்நிலையடையும் என்பது திண்ணம். இப்படியாக ஒரு சூழ்நிலையின்றும் தேசிய நிலைக்குச் சமயமோ, தத்துவமோ மாற்றமடைந்து மறுமலர்ச்சி அடையும்போது தான் மனிதகுலத்தின் 'அறிவு' 'பேரறிவுடன்' ஒன்றி விசாலமடைந்ததாகக் கருதுவதில் அர்த்தமுடையதாக ஆக முடியும்.'

-O-

# சைவ சித்தாந்தப் பதிக் கோட்பாடு

## — ஒரு கண்ணோட்டம் —

சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம், என வகுத்துக் கொண்ட அநாதியான மூன்று பொருட்களிலும் 'பதி' என்றழைக்கப்பட்ட 'சிவன்' என்னும் கடவுளே அனைத்தையும் ஆளுகின்ற தலைமைப் பொருளாகச் சித்தாந்தம் முதன்மைப்படுத்தியுள்ளது. சைவசித்தாந்தம் ஒரு பன்மைப் பொருட்கொள்கையெனில் (Puluralistic Realism) அதனூடாக சித்தாந்தம் சாதித்துக்காட்ட முயற்சிப்பது 'ஒரு கடவுட் கொள்கை' என்னும் மேலான திட்டமாகும். (Mono Thesism). அது 'சிவம்' என்னும் செம்பொருளாம். ஆன்மா தன்மையில் சிவத்தைப் போன்றதே தவிர சிவமாவதில்லை என்பதும், முப்பொருளும் உள்ளிட்ட முப்பத்தாறு தத்துவங்களும் என்றும் நிலைபேறுடையவை என்பதும் சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடாகும்.

இறையுண்மைக் கொள்கைபற்றிச் சித்தாந்தம் பல்வேறுவகையான அடிப்படைகளை அறிவியல் ரீதியில் அதிகார நூல்களின் வழியிலே பிரமாணங்கள் வாயிலாகவும் அதிக கவனத்துடன் நிறுவுவதற்குச் சித்தாந்த அறிஞர்கள் பலர் ஆய்வு முயற்சிகளை மேற்கொண்டு வந்துள்ளனர். சைவசித்தாந்தத்திலே முடிவான உள்பொருளாகவும், பரமதாரகமாகவும், பற்றுதற்குரிய முதற்பொருளாகவும் இருப்பது 'சிவம்' எனப்படும் சிவதத்துவமாகும். பிற பொருள்களின் ஆற்றலை விளக்கம் செய்து ஊடுருவி நிற்கும் பேராற்றல்; தன்னையே உயிர்கள் அனைத்திற்கும் வழங்கும் பேரருட்திறன்; முற்றறிவுடன் கூடிய மாறுதலடையாத தூய செம்பொருள் எனப்படும் சிவம் சைவந்



டன் தொடர்புடையதாகும். சைவத்தின் அகச் சமயப் பிரிவுகள் ஆறினையும் கடந்து அவற்றினின்றும் உயர்ந்து நிற்கும் சைவ தத்துவ சிந்தனை மரபு 'சைவ சித்தாந்தம்' எனப் போற்றப்படுகின்றது. இச்சித்தாந்தத்திலே 'கடவுட் கொள்கை' தொடர்பாக அது கொண்டிருக்கும் 'இரு விதமான கருத்தோட்டங்களை ஆராய்வதே இக்கட்டுரையின் முக்கிய நோக்கமாகும்.

1) 'கடவுள் உண்டு' என்று ஏற்றுக் கொண்ட பின்னர் அப்பொருளை நிறுவிக் காட்டுவதிலே சித்தாந்தம் கொண்டிருக்கும் நிலைப்பாடுகள்.
2) அப்படி ஏற்றுக் கொள்ளப்பட்ட கடவுளின் அதி உயர்வான 'இறைமைத் தன்மை' பற்றிய சித்தாந்த சிந்தனைகள்' (உருவ வழிபாடு)

என்பன அவையாகும்.

முதலாவது கருத்தோட்டமானது 'பிரமாணங்கள், எனப்படும் அளவையியல அடிப்படைகளைக் கொண்டு காட்சி, அனுமானம். ஆப்தவாக்கியம் ஆகியவற்றின் வழியாகக் 'கடவுட் கொள்கையை' நிலைநிறுத்தும் பொருட்டு அதனை நிறுவிக் காட்ட முற்படுதலாகும். இம்முயற்சியில் காட்சிப் பிரமாணம் முற்றுகப் போதுமானதல்ல, ஏனெனில் பிரத்தியட்சத் தோற்றமும் பொய்யாவதுண்டு. பொதுவாக சைவ சித்தாந்த மரபினை ஏற்றுக் கொண்டவர்கட்கு ஆராய்ச்சியாளராயினுஞ் சரி, சாதாரண அறிவுடைய மக்களாயினும் சரி அவர்கட்கு 'நம்பிக்கை' என்ற சாதனம் அடிப்படை ஏற்புடைமையாக உள்ளது. 'நம்பினார்க்குச் சிவம் 'நம்பாதவருக்கு சவம்' என்பது முதுமொழிகளில் ஒன்றாகும். 'சிவம்' என்ற சொல்லிலுள்ள 'சி' என்ற எழுத்தின் மேலுள்ள உயிர்குறி தான் ஆன்மாவைச் சிவமாந்தன்மை அடைவிப்பது - அக்குறி இல்லையேல் உயிரற்ற

உடல் 'சவம்' எனப்படுகின்றது. நம்பிக்கையின் ஓர் அடையாளமாக அமைவது இது எனலாம். தவிர அனுமானத்தின் வாயிலாக மூன்று வழிகளிலே கடவுள் உண்மைக்கு ஆதாரம் காட்டப்படுகின்றது. அவையாவன, உலகின் உண்மையைக் கொண்டு அதனை உற்பத்தியாக்கும் கருத்தாவையும், ஆன்மக் கோட்பாட்டின் மூலமாக படைப்பினது அடிப்படைகளை ஆராயும் நோக்கிலே கன்மக் கொள்கையினை முன்வைத்தும், குறைவுடைய பொருட்களின் மத்தியிலே குறைவிலா நிறைவுடைய பூரணப் பொருள் கடவுள் என்ற கண்ணோட்டத்திலும் வைத்து கடவுட் கொள்கை ஆராயப்பட்டுள்ளது.*

'உள்ளத்திற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையால் உலகிற்குச் செய்வோன் ஒருவன் உண்டென்பது மாத்திரையே பொதுவகையால் துணியப்படும்' என்பது மெய் கண்டசாத்திரமாகும். (சிவஞானமாபாடியம், பக். 89) சங்கார காரணனான சிவன் உலகின் முதற்காரணமவதால் சித்தாந்தத்திலே சிவன் உலகின் கர்த்தா எனப்பட்டான். பிரகிருதியை உள்பொருள் எனப்பேசும் சாங்கியம் அதனை 24வது தத்துவமாக கொண்டிருக்கின்றது. அந்த 24வது தத்துவத்துடன் சேர்த்து மேலும் பன்னிரண்டு தத்துவங்களின் தொடர்ச்சியையும் விரிவையும் சைவ சித்தாந்தம் கணக்கிட்டுக் காட்டுகின்றது. அவற்றின்படி சாங்கியத்திலே காணப்படும்,

* "இந்து தத்துவங்களான வேதாந்தமும் சைவ சித்தாந்தமும் காட்டும் கடவுட் கொள்கை- ஓர் ஒப்பீட்டு ஆய்வு" என்ற இது ஆராய்ச்சிக் கட்டுரையில் இவை தொடர்பான விளக்கங்கள் உள்ளன. முதுகலைமானிப் பட்டத்திற்காக கட்டுரையாளரால் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திற்கு சமர்ப்பிக்கப் பட்டது. (பிரசுரிக்கப்படாதது) 1981. பக். 210-220



இருபத்துநான்கு தத்துவமும் சைவசித்தாந்தத்திலே இருபத்துநான்கு ஆன்மதத்துவங்களாகவும் கலைமுதல் பிரகிருதிவரை உள்ள ஏழும் வித்யா தத்துவங்கள் அல்லது அசுத்தமாயா தத்துவங்கள் எனவும், சிவம், சக்தி, சதாசிவம், ஈஸ்வரம், சுத்தவித்தை எனப்படும் ஐந்து சிவத்தத்துவங்கள் அல்லது சுத்ததத்துவங்கள் சுத்ததத்துவங்கள் எனவும் விரித்து மொத்தமாக முப்பத்தியாறு தத்துவங்களை சித்தாந்தம் கூறியுள்ளது. 36 தத்துவங்கட்கும் நிலைமைப் பொருளாக அமைந்திருப்பது சிவதத்துவமாகும். 'சுத்த தத்துவங்கள் ஐந்து. அவற்றின் முதலாகவும் முடிவாகவும் உள்ளது சிவதத்துவம்' எனத் 'தத்துவப் பிரகாசம்' என்ற சித்தாந்த நூலும் கூறியிருக்கின்றது. 'ஈஸ்வரனும் மாயையும் உலகிற்கு மூலமான பொருட்கள். ஈஸ்வரன் மட்டும் தனியாகவோ, மாயைமட்டும் தனியாகவோ இப்பிரபஞ்சத்தை உருவாக்கமுடியாது' 1 என்பதுபோல உலகிற்கும் அதன் உற்பத்திக்கும் கடவுள் என்னும் கருத்தா இன்றியமையாது வேண்டப்படும் 'நிமித்த காரணன்' எனச் சித்தாந்தம் ஏற்றுக் கொண்டுள்ளது.

இரண்டாவது நிலைப்பாட்டிலே ஆன்மீக கொள்கையின் அடிப்படையிலே கர்மபலன்களை ஆராய்ந்து வெளிப்படுத்துவதன் மூலமாக அனுமானத்தின் துணைகொண்டு கடவுள் உண்மைக்கு காரணம் பேசப்படுகின்றது. மும்மல அழுக்கினை அகற்றி ஆன்மாக்களைத் தூய்மை செய்யும் பொருட்டு ஒடுங்கிய உலகினை இறைவன் மீளவும் தோற்றுவிப்பன். அதனால் உயிர்கள் இருவினைப்பயன்கள் காரணமாகப் பிறந்து இறக்கும் என்பதால் -கன்மபந்தமில்லாத சுதந்தி

1. Dr. G. சுந்தரமூர்த்தி; வடமொழி நூல்களில் சைவ சித்தாந்தம். பகுதி I தத்துவப் பிரகாசம் மூலமும் அதன் இரு உரைகளும் சர்வோதய இலக்கியப்பண்ணை மதுரை 1979 பக் 22.

ரன் ஒருவனால்தான் அவ்வவ் உயிர்கள் செய்த கன்மபலன்களை நியமிக்கமுடியும். அதன்வழி உயிர்களின் ஒய்வுக்காலங்களில் சங்காரத்தை இறைவன் மேற்கொள்கின்றான். உயிர்கட்கு இருவினைப் பயன்கள் இறைவன் ஆணையால் வரும் என்பது சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரத்தால் அறியப்படும், அறநெறிக் கோட்பாடும் ஒழுக்கநெறியும் சீரான ஒழுங்கு நியதியும் இயற்கைக்கு மட்டுமல்ல உயிர்கட்குமுண்டு. சடப்பொருளான இயற்கைக்கே பருவகாலங்கள் போன்ற பல ஒழுங்கு நியதிகளை ஏற்படுத்திய இறைவன் உயிர்களிடமும் அவ்வாறே ஒழுக்கநியதிகளின் பெறுபேறுகளை வற்புறுத்தும் பொருட்டு உயிர்கள் தாமாகச் செய்த கன்ம பலன்கட்கேற்ப ஒவ்வோர் பிறவியிலும் அப்பலன்களை பட்டும் நிர்ணயிக்கும் தலைமைத்துவத்தை விதிக்கின்றான். 'அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையில் அமர்ந்து செல்ல தலைவனாய்த் தானே நிலவு சீர் அமலனாகி'[1] நின்றனன் ஆன்மாக்கள் தாம் செய்த கன்மங்களினால் கட்டுண்டவை, அவை தமக்குத்தாமே விடுதலையளிக்கா.. இயல்பாகவே கட்டுக்களின் நீங்கியபேரறிவாளன் ஒருவனால்தான் உயிர்களின் பசுத்துவத்தை நீக்கி விடுதலையாக்க முடியும் என்பது சித்தாந்தக் கோட்பாடாகும். இறைவனால் கன்ம பலன்கள் நியமிக்கப்படுமானால் உலகியல் வாழ்விலே ஒழுக்கத்தை மீறும் பலர் உயர்வடையும் நிலை காணப்படுகிறதே என்ற சந்தேகம் எழுவது இயல்புதான் இதிலே இரண்டு நிலைப்பாடுகள் உள்ளன ஒன்று அத்தகையோர் பக்தியினால் இறைவனைச் சரணடையும்போது அவர்கள் இறைவனால் தூய்மைப்படுத்தப் படுகிறார்கள். இதற்கு அகலிகை, அருணகிரிநாதர் என இதிகாசபுராணங்களிலும் பல உதாரணங்களைக் காணலாம். ஆனால் ஒழுக்க மீறல்கள் தனிநபராலோ, சமூகத்தாலோ

1 சிவஞான சித்தியார், — சுபக்கம், 2. 2. 91.



உணரப்படாதவரை அவர்கள் போக்கிலே இன்பத்தை, மகிழ்ச்சியை அனுபவித்த பின்னர் இயற்கையே தன் ஒழுங்கு நியதிக்குப் பங்கம் ஏற்படும்போது தாங்கமுடியாது சீற்றம் கொண்டு, போராகவும், பூகம்பமாகவும், நோயாகவும் மாறி உயிர்களைப் பலிவாங்குவதை இன்று காண்கிறோம். தனிமனித ஒழுக்கம் சமுதாய ஒழுக்கமாக மாறும்படத்து ஒழுக்க மீறல்களை அனுமதிக்கும் மக்கள் கூட்டத்தையே ஒட்டு மொத்தமாக இயற்கை தண்டித்து விடுகிறது. இக்காரணங்களினாலேயே அறஒழுக்கங்கள் சித்தாந்த சாஸ்திரங்களில் கன்மக்கொள்கை ஊடாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன 'செய்வானும் செய்வினையும் சேர்ப்பயனும்-சேர்ப்பவனும் உய்வான் உளன் என்றுளர்' என்பது திருவருட்பயன் காட்டும் நீதியாகும்.[2] அதனால் உயிர்களைக் கன்மத்தளைகளின்றும் விடுவிப்பதற்கு சுதந்திரமாக இயங்கும் ஒரு நீதிமானின் தேவை அவசியம் என உணரப்பட்டதை சித்தாந்த கடவுட் கொள்கை புலப்படுத்துகின்றது.

காட்சிப் பிரமாணத்தாலும், அனுமானப் பிரமாணத்தாலும் அறிதற்கு அரிதான ஈஸ்வரனை சுருதிப் பிரமாணங்களை முன்வைத்து சித்தாந்தம் அறிவிக்க முயற்சிக்கின்றது. வேதாகமங்களே சிந்தாந்த சாஸ்திரங்களின முப்பொருள் கோட்பாட்டை அறிவிக்கும் ஆப்த வாக்கியப் பிரமாணங்களாகும். 'இறையுண்மை விடயத்திலே வேதாகமங்களே பிரமாணம்' அவை ஈஸ்வரனால் உரைக்கப்பட்டதாலும் ஆப்தவாக்கியமாவதாலும் பிரமாண வசனங்களாகின்றன. வேதாகமங்களால் ஈஸ்வரன் சிந்திப்பதில்லை, ஈஸ்வரன் உரைத்ததாலேயே அவை பிரமாணமாகின்றன'[1] என்பதனால் சித்தாந்

2. திருவருட்பயன் — அறியு நெறி, பாடல் 3.
1. வடமொழி நூல்களில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பகுதி II, பக். 26.

தம் வேதத்தைப் பொதுப் பிரமாணமாகவும், சிவாகமங்
களைச் சிறப்புப் பிரமாணமாகவும் ஏற்றுக் கொண்டுள்ளது
இதனால் வேதாகமங்கள் இறைவன் பற்றிய 'பரவித்தை'
எனப்படும் மேலான அறிவாம் மெய்ஞானத்தை தரமுடி
யுமே தவிர இறைவனை உள்ளது உள்ளபடி தரிசிக்கவேண்டு
மானால் அந்நூல்களில் கூறப்பட்ட ஒழுக்க நியமங்களை
அனுட்டானம் வாயிலாக சாதனைக்குக் கொண்டு வர
வேண்டும்.

**கடவுட் கொள்கையின் இருவேறு நிலைகள் : ***

சமயம் என்பது நம்பிக்கையினையும் தத்துவம் என்பது
அறிவாராய்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டிருப்ப
தால் சித்தாந்தக் கடவுட் கொள்கைத் திட்டத்திலே 'இரு
வேறு நிலைகள்' இறைவனை அறியும் பொருட்டுக் கொடுக்
கப்பட்டுள்ளன. ஒன்று உருவ வழிப்பாட்டை அடித்தள
மாகக் கொண்ட 'தடத்தநிலை' எனப்படும் 'பதி' கோட்பா
டாகும். இது நம்பிக்கையை மாத்திரம் கொண்டு செயற்
படும் சாதாரண மக்கட் கூட்டத்தினரின் தேவைக்கட்காக
ஏற்படுத்தப்பட்டதாகும். 'சமய நம்பிக்கை' என்பது சுயசிந்
தனைக்கும் சுயவிமர்சனத்திற்கும் எவ்வாறு இடமளிக்கும்
என்ற ஐயப்பாட்டை அறிஞரிடையே தோற்றுவிக்கும்
என்பதனால் தானோ என்னவோ சிவப்பொருளுக்கு 'ஸ்வ
ரூபநிலை' என்ற தன்னியல்பான நிலையினை சொருபலட்
சணமாகச் சித்தாந்தம் கற்றுக் கொடுத்துள்ளது. ஆதலால்
சமயம் சார்ந்த நம்பிக்கைகள் நிறைவேறாத விடத்து கட
வுட் கொள்கையிலே ஏற்படும் சந்தேகங்கள் ஆராய்ச்சிக்
குரிய தேவைகளை உணர்த்தி நிற்கின்றதெனலாம்.

---

* வேதாந்த-சித்தாந்த கடவுட் கொள்கை, பக். 230-240.
(முதுமாணிக்கான ஆய்வுக் கட்டுரை, Dissertation)



சைவசித்தாந்தம் அந்தவகையிலே சமயத்தையும் தத்
துவத்தையும் 'நம்பிக்கையினையும்-அறிவாராய்ச்சியினையும்
இணைக்கும் ஒரு திட்டமாகவே தனது கடவுட் கொள்கை
யினை அமைத்துத் தந்திருக்கின்றது. இதில் 'தடத்தநிலை'
எனப்படும் பதிக்கோட்பாட்டினை நம்பிக்கையின் அடை
யாளமாகவும், 'சொருபநிலை' எனப்படும், 'சிவதத்துவத்
தினை அறிவுத்துறையின் ஆராய்ச்சிப் படைப்பாகவும்
மதிப்பிடமுடியும். முன்னயது பொது இலக்கணம் பின்ன
யது சிறப்பிலக்கணம் எனப்படும். இறைவனின் பொது
இலக்கணமாவது 'ஈஸ்வரன்' என்ற காட்சிப்பொருள் நிலை
யிலேயே சகுணக் கடவுளர் தோற்றங்கட்கு முன்மாதிரியா
கவும்; தத்துவத்துறையிலே பதி எனப்படும் ஈஸ்வரன்
அந்த நிலையினையும் கடந்து மேம்பட்டு நிற்கின்ற அதி
உயர்வான மேல்நிலை எல்லையாக இருப்பது சொருபநிலை
எனப்படும் சிறப்பிலக்கணமாகவும் சித்தாந்தத்தில் காட்
டப்பட்டுள்ளது. அதுவே சிவதத்துவமாகும். இது சுத்த
தத்துவங்கட்கெல்லாம் தலைமைப் பொருளாக அமைந்தி
ருப்பதாகும்.

**கடவுட் கொள்கையில் சொருபநிலை :**

மெய்கண்ட சாத்திரங்களிலே சைவ சித்தாந்தத்தின்
பரம்பொருளாகிய சிவத்தினுடைய சொருபநிலை என்பது
'என்றுமுள்ள இயல்பான நிலை' எனப் பொருள்படுகின்
றது அந்த நிலையிலே சிவப்பொருளின் சிறப்பிலக்கணம்
சிவப்பிரகாசம் என்ற சித்தாந்த சாஸ்திர நூலிலே பின்
வருமாறு கூறப்படுகின்றது. "நிலவும் அருவுருவின்றி
குணம் குறிகளின்றி - நிர்மலமாய் ஏகமாய் நித்தமாகி -
அலகில் உயிர்க்குணர்வாகி அசலமாகி - அகண்டிதமாய்
ஆனந்த உருவாய் அன்றிச் - செல்வரிதாய் செல்கதியாய்

சிறிதாய்ப் பெரிதாய்த்-திகழ்வது தற்சிவம்"[1] இந்த நூலிலே சித்தாந்தப் பரம்பொருள் சொருபநிலையிலே சிவம் என்ற சொல்லாட்சியால் சுட்டியறியப் பட்டுள்ளது. சிவன் - சிவம் என்ற இரண்டு சொற்களுமே சித்தாந்தத்திலே முதல்வனின் தடத்த நிலையினையும் சொருபநிலையினையும் குறிப்பதற்கெழுந்தவை எனலாம். ஆகையினால் உருவ நிலையிலே இறைவனை 'சிவன்' என ஆண்பால் விகுதிசேர்த்தும் - அருவநிலையியே பரப்பிம்மாகிய சொருப நிலையினைக் குறிப்பிடுதற்குப்பால் வேறுபாடுகளைக் கடந்து 'சிவம்' என்பதைக் குறிக்க தற்சிவம் என்ற சொல்லாட்சினையும் சித்தாந்த நூல்கள் பயன் படுத்தியுள்ளதாக கூறலாம். இறைவனின் சொருபநிலை என்பது 'ஒன்றுமேயில்லாத நிலை' அன்று எனவும் சித்தாந்தம் கருதுவதனை 'நிலவும் அருவுருவன்றி' என்ற சொற்றொடர் வாயிலாக அறிய முடியும். எனவே அருவுருவினைத் தவிர மற்றும் 'குணம் குறிகளின்றி' என அப்பாடல் தொடர்ந்து அப்படியிருப்பது 'தற்சிவம்' என நிறைவு செய்யப்படுகின்றமை சிந்திக்க வேண்டிய விடயமாகும். இந்தக் கருத்தோட்டத்தை சித்தியாரில் பார்க்குமிடத்து ஆங்கு "அருவமு முருவாருபமானது மன்றி நின்ற உருவமும்" என இறைவன் மூன்று வடிவங்களும் கொண்டானுயினும் உண்மையில் இவை ஒன்றுமில்லாத சுத்த சைதன்ய சொருபலக்கணத்தை உடையவன் என இடம்பும்.[2] அன்றி என்ற சொல்லுக்கு 'அல்ல' என்பது பொருளாகுமாயினும் 'அதுதவிர' எனவும் சில இடங்களில் பொருள் படுமாதலால் இவ்வுரு

1. சிவப்பிரகாசம் பதி இலக்கணம், பாடல்; 13.
2. சிவஞான சித்தியார், சுபக்கம், பதி இலக்கணம், 1-2-99.



வங்களில் 'அருவுரு' தவிர எனவும் பொருள் கொள்ளலாமா எனவும் சிந்திக்கவேண்டும். 'அன்றி' என்பதற்கு 'அல்லாது' எனவும் 'இன்றி' என்பது 'இல்லாது' எனவும் சிவப்பிரகாசம் உரையாசிரியர் பொருள் கொடுப்பதால் அன்றி என்பது 'அதுவன்றி' எனவும் பொருள் படுதலால் அருவுரு அல்லது ஏனையவை இல்லாமல் இருப்பது எனவும் கொள்ளலாம். ஏனெனில் இவையொன்று மில்லாத ஆனல் சுத்தசைவதன்யவஸ்து என்னுமிடத்து ஏதோ ஒரு 'நிலை' என்பது முதல்வனை அறிதற் பொருட்டு அறிவிக்கப் பட்டுள்ளதை சித்தியார் உணர்த்துகின்றது எனலாம்.

ஆதலால் சிவத்தின் அருவுருவினை அறிவுருவாக சித்தியார் சிறப்பித்துள்ளது எனவும் கருதமுடியும். சித்தியார் முதலாம் அதிகரணம் இரண்டாம் பிரிவிலே 'பதி இலக்கணம்' பகுதியிலே 58ம் பாடல் முதல் 90 வரையுள்ள பாடல்கள் முதல்வனுகிய 'சிவத்தின்' பொது இலக்கணம், சக்தி இலக்கணம், முதல்வனின் சிறப்பிலக்கணம், சக்தியின் சிறப்பிலக்கணம் என்று நான்கு வகையாகப் பகுத்துக் கூறியுள்ளது இவற்றில் இருந்து முதல்வனுனவன் சொருபநிலையிலே ரூபாரூபங்களில் காணப்படுபவன் என்பதனையும் விளங்கவைத்துள்ளது. மேலும் பரம்பொருளின் தடத்த வடிவங்களைச் சொல்லுமிடத்து 'சிவன்' எனவும்[3] சக்திவடிவினைக் கூறுமிடத்து 'சிவம்'[4] எனவும் குறிப்பிடுவதும் அவதானிக்கத்தக்கது, எனவே சித்தாந்த முதல்வன் மூவகைத் திருமேனிகளுமாகின்முனே எனில் அவை மூன்று

3. சிவஞான சித்தியார், சுபக்கம், பதிஇலக்கணம், 1-2-90.
4. சிவஞான சித்தியார், சுபக்கம், பதிஇலக்கணம், 1-3-89.

மின்றி அம்மூன்றினுள் 'ஒன்றாய்க் கூடுவன் குறித்திடாய்' என சித்தியார் அறிவிக்கின்றது.[5] ஆதலால் தடத்தநிலையினிறும் மேலான சொருபநிலையிலே சிவப்பொருள் இலக்கணத்தைச் சொல்வந்த ஆகமமும் 'பரம்-அபரம் என்று சிவமிருவிதமானவைகள்-பகர் தூலசூக்குமாம் பரசொருப ——'[1] என்றவாறு 'சிவம்' என்ற சொற்றொடரினால் சொருபநிலையினை விளக்குவதுடன் தூலமாவது மந்திரத்தால் சிவனை வழிபடல் எனவும் சூக்குமமாவது ஞானக் கண்ணினால் கண்டு அறிவினால் சிவத்தை வழிபடுதலாகும் எனவும் கூறியிருப்பதும் மேற் சொன்னவற்றுடன் பொருந்துமாறு காணலாம். சிவப்பொருள் இலக்கணம் கூறுமிடத்தும் 'பரமசிவன் சதாசிவன் எனப் பதிக்கு மேலோன் பகர் நிரஞ்சனன் நிராமயன்-தருவருளாருப மில்லான், சர்வக்ஞன், சாந்தன்-சர்வ பரிபூரணன், சர்வான் மாவாயிருப்பவன்[2] என விபரிப்பதிலிருந்து தற்சிவமாகிய பரம்பொருள் 'பதி' எனப்படும் தடத்தநிலைக்கும் மேற்பட்ட சர்வான்மாவாயுள்ள அறிவே வடிவமான சர்வக்ஞன் எனப் புரிந்துகொள்ளலாம். இங்ஙனமாக சைவசித்தாநதக் கடவுட்கொள்கையிலே சொருபநிலையானது அருவநிலையினையோ அன்றி அறியமுடியாத அருவுருவநிலையினையோ வெறுமனே சுட்டுவதாக இல்லை என்பது பெறப்படுகின்றது.

---

5. சிவஞான சித்தியார், சுபக்கம், பதிஇலக்கணம், 1-2-63.
1. சர்வ ஞானோத்தர ஆகமம், முத்திரத்ன விருத்தி, பாடல் 17,
2. சர்வ ஞானோத்தர ஆகமம், முத்திரத்ன விருத்தி, பாடல் 9.
   "குறியும் குணமு ஒரு கோலமுமற்று எங்கும் செறியும் பரசிவமாய்" -கந்தர்கலிவெண்பா. 3-4





**கடவுட் கொள்கையில் தடத்த நிலை :**

சித்தாந்தக் கடவுட் கொள்கையிலே தடத்த நிலை' என்ற பகுதிதான் அதன் கடவுட் திட்டத்தை அற்புதமாக விளக்கி நிற்கும் சிறந்த பகுதியாகும். இப்பகுதி உருவவழிபாட்டின் ஆதாரமாக விளங்குவதுடன் அனைவருக்குமே எளிதில் வசப்படும் சகுணமாக விளங்கும் ஈஸ்வர நிலையாகும். இது கல்லார்க்கும் கற்றவர்க்கும் எளியார்க்கும், வலியார்க்கும் மற்றெல்லோர்க்கும் ஈஸ்வரன் தன்னை அறிவித்துக்கொள்ளும் பொருட்டு உருவம் கொண்டு திருமேனி தாங்கிவருகின்ற நிலையாகும். சித்தியாரில் முதல்வனின் 'பதி இலக்கணம்' என்ற பகுதியிலே 58 முதல் 75 வரையுள்ள பாடல்களில் ஈஸ்வரனின் பொது இலக்கணம் எனப்படும் அருவம்-உருவம்-அருவுருவம் என்று மூவகைத் திருமேனிகளின் தற்பரியம்பற்றியே பேசப்பட்டுள்ளன. 76 முதல் 80 வரையிலான பாடல்கள் முதல்வனின் உபசாரத்திருமேனிகளான அத்துவவடிவம், மந்திரவடிவம், பஞ்சப் பிரமந்திரவடிவம் என்பனவற்றைப்பற்றி விளக்கும். இதுவே இக்கட்டுரையின் ஆதாரமான பகுதியாகும். ஆதலால் சிவமாம் பரம்பொருள் தன்னியல்பான நிலையினின்றும் சாதாரண நிலைக்குகருணை மேலீட்டால் இறங்கி வந்து திருமேனிகளைத் தாங்கும் நிலையினை தடத்தநிலை' ஆகிய பொது இலக்கணம் எனச் சித்தாந்தம் குறிப்பிட்டுள்ளது. 'ஆரணமாகமங்கள் அருளினால் உருவு கொண்டு காரணன் அருளானாகில் கதிப்பவர் இல்லையாகும்'[1] என்பது போல முதல்வன் கருணையினால் உருவத் திருமேனி கொண்டு மகேஸ்வர மூர்த்தியாகி அனந்தேஸ்வரர் வாயிலாகவும் அவர்வழி ஸ்ரீகண்டநாதர் வாயிலாகவும் ஆன்மாக்கட்கு ஞானகுருவாகி நின்றும் வேதாகமங்களை உணர்த்தாவிடில் அதனை எங்ஙனம் அறிய முடியும்.

---

1. சித்தியார், பதிஇலக்கணம், 1.2,66.

பொதுவாக ஆலய வழிபாட்டிலே அனந்தேஸ்வரரையோ அல்லது ஸ்ரீகண்டநாதரையோ வழிபடு தெய்வங்களில் ஒன்றாக வைத்து எண்ணப்படுவதை நாம் வழிபாட்டு மரபிலே காண்பதில்லை ஆதலால் ஸ்ரீகண்ட சிவனார் தட்சணாமூர்த்தியாயிருந்து வேதாகமப் பொருளையும், உயிர்களுடன் சேர்ந்து போகமருளதற்கு உமா சகித மூர்த்தியாகவும், சிவயோகத்தை அறிவித்தற் பொருட்டு பசுபதியாகவும் ஈஸ்வரன் உருவத் திருமேனி கொள்ளானேல் இவை நிசமாவாம் என்பது சித்தியார் வாக்கு. "சிவப்பிரகாசமும் ஈஸ்வரன் உருவத் திருமேனி கொள்ளும் காரணத்தை பின்வருமாறு கூறுகின்றது. நாடரிய கருணை திருவுருமாகி-நவின்று பல்கலை நாதவிந்துவாதி கூடுமொளி-வளர்குடிலை மாயைமேவி-கொடுவினைகொள் தனு கரணபுவன போகம் பீடுபெற நிறுவி அவை ஒடுக்குமேனி-பிறங்கிய நிஷ்கள சகளப் பெற்றியாமே'[1] என சிவத்தின் அளவற்ற கருணையே உருவமாகி வருவதால் 'நாடரிய கருணை திருவுருவமாகி' எனப்பட்டது. அதனால் சிவத்தினது திருமேனிகள் மாயாவடிவங்கள் அல்ல எனவும் அவை அருள் வடிவங்களாகும் எனவும் சித்தாந்தம் கூறும். அங்ஙனமாக சிவப்பெருளானது தனது முச்சக்திகளைப் பொருந்தி சுத்த மாயையிலே சிவதத்துவங்களைத் தோற்றுவித்து, வேதாகமங்களையருளிச் செய்து தன் சக்தி வியாபாரத்தால் தனு கரண புவன போகங்களையும் தோற்றுவிக்குமுறைமைக்காக மூவகைத் திருமேனிகளை தாங்குகின்றது என்பது இங்கு விவரிக்கப்பட்டது. எனவே பரவெளியாகிய சிவதத்துவம் அணு என்றும் சக்தியைப் பொருத்துவதன் மூலமாக சூக்குமமான அணுக்கள்யாவும் தூலமாக்கப்படும் நிலையிலே பஞ்சபூதங்கள் தோற்றம் கொள்ளும் முறைமையானது விஞ்ஞான பூர்வமான அடிப்படையிலே சித்தாந்தத்தின் விளக்கமுறை அமைந்திருப்பதைக் காட்டுகிறது.

1. சிவப்பிரகாசம் பதி இலக்கணம்-பாடல். 16.



## நவபேதங்கள்

தடத்தத் திருமேனிகளாவன முறையே நிஷ்களம், நிஷ்களசகளம், சகளம் எனவும் இன்னோர் வகையிலே அவை அருவம், அருவுருவம், உருவம் எனவும் கூறப்படும். நிஷ்களத் திருமேனியில் சிவன்சத்தர் அல்லது இலயசிவன் எனவும் நிஷ்களசகளத்திலே சதாசிவன் உத்தியுத்தர் அல்லது போகசிவன் எனவும் சகள நிலையிலே மகேஸ்வரன் பிரவிருத்தர் அல்லது அதிகாரசிவன் எனவும் பெயர் பெறுவர். சுத்தத்துவம் எனப்படும் ஐந்திலே சிவம், சக்தி என்பது சிவத்தின் அருவ நிலையினையும் சதாசிவம் சிவத்தின் அருவுருவ நிலையினையும், ஈஸ்வரம் என்பது உருவ நிலையினையும், சுத்த வித்தையாகிய வேதாகம சாஸ்திரங்களை ஈஸ்வர தத்துவத்திலே மகேஸ்வர மூர்த்தியாகிய சிவன் அருளுவர் என்பதும் இவற்றிலிருந்து புலப்படும். அத்துடன் சிவம், சக்தி என்னும் இரண்டும் இறைவனின் சிறப்பிலக்கணமான சொருப நிலையினையும் ஏனைய ஈஸ்வரம், சதாசிவம், சுத்தவித்தை என்பவை ஈசனின் தடத்த நிலையின் பொது இலக்கணத்தை உள்ளடக்கியனவாகவும் நாம் கருத முடியுமா என்பதும் சிந்திக்கற்பாலது

'பரமசிவம்' எனப் பெயர் கொண்ட சிவதத்துவமானது 'ஒன்று' எனப்படும். அது சக்தி வியாபாரத்தால் மூவகைத் திருமேனிகளைத் தாங்கும் பேதங்களாக இடம்பெற்றது. சிவதத்துவம் சக்தி வியாபார பேதத்தால் மாறுபடும்போது கிரியா சக்தி மேலோங்குமாயின் ஈஸ்வர தத்துவம் பிறக்கிறது; ஞானசக்தி மேலோங்குமாயின் வித்யா தத்துவம் தோன்றுகிறது. கிரியையும் ஞானமும் சமப்படுமானால் சதாசிவ தத்துவம் ஆகின்றது.[1] இவற்றிலிருந்து கிரி

1. தத்துவப் பிரகாசம் (தமிழ் மொழி பெயர்ப்பு) பக் 28, 29, 30

யாசக்தி, ஞானசக்தி, இச்சாசக்தி என ஒரே சக்தியே தொழில் காரணமாக வேறுபடுவதால் மூவகைத் திருமேனிகள் இந்த சக்திகளால் பந்தப்படும் ஈஸ்வரனுக்கு உருவகப்படுதப்படுவது புலப்படும். இந்த சகள, சகளநிஷ்கள, நிஷ்கள நிலையிலே இறைவனுக்கு ஒன்பது திருமேனிகளும் உபகாரமாகக் கூறப்படுகின்றன.

அருவத்திருமேனிகளான சிவம், சக்தி, நாதம் விந்து என்பனவும் உருவத்திருமேனிகளான பிரம்மா, விஷ்ணு உருத்திரன் மகேஸ்வரன் (ஈஸ்வரன்) என்பனவும் அருவுருவத்திருமேனியான சதாசிவமும் சேர்த்து இந்த ஒன்பது திருமேனிகளும் நவபேதங்கள் எனப்படும். இந்த விளக்கத்திலிருந்து சொரூப நிலையிலுள்ள இறைவன் சக்தி தத்துவத்துடன் சேர்ந்ததும் ஈஸ்வர தத்துவமாகின்ற நிலையினை அடைவதனை உருவத்திருமேனிகளின் வைப்பு முறை விளங்குகின்றது. ஆதலால் 'பதி' எனப்படும் சிவன் ஈஸ்வரதத்துவத்திலே மகேஸ்வர மூர்த்தியாகின்றான். சுத்த தத்துவங்களில் ஈஸ்வர தத்துவமானது இவ்வாறு உருவத் திருமேனிகட்கு ஆதாரமாய் அமைகின்றது. சிவாகமங்களிலும் ஐந்தொழில்களை சிவன் அனந்தேஸ்வரரை இடமாகக் கொண்டு நடத்துவர் என்பதால் ஈஸ்வர தத்துவத்திலே அனந்தேஸ்வரர் 'பதி' எனப்படுவர் எனக் கூறினும் அனந்தேஸ்வரரை யாரும் பதி' எனக் கருதாது ஆதிசிவத்தையே அனைத்திற்கும் மூலமாகக் கொள்ளும் மரபு காணப்படுகின்றது. அனந்தர், வித்தியேஸ்வரர், மந்திரேஸ்வரர்களை ஏவல்பண்ணிச் சிவன் காரியமாற்றுதலால் பஞ்சகிருத்தியக் கடவுளரான பிரம்மா, விஷ்ணு, மால், ருத்திரன் மகேஸ்வரன் என்போர் உருவத்திருமேனிகளில் சிறப்பாகப் புகழ் பெற்றனர். ஏனெனில் அத்திருமேனிகள் யாவும் மகேஸ்வர மூர்த்தியாகிய சங்கார காரணனை முதலாக கொண்டிருப்பதனால் எனலாம். ஆதலால் 'சிவம் சக்தி நாதம் விந்து



சதாசிவன் திகழுமீசன்-உவத்தருளு ருத்திரன் தான் மால்
அயன் ஒன்றினொன்றாய் - பவந்தரு மருவ நாலிங்குருவநா
லுபய மொன்றாய் நவந்தருபேதமேக நாதனே நடிப்பன்'[1]

என்றவாறு பரமசிவம் புறப்பொருள் அறிவுமாத்திரையாய் நிற்குமிடத்து சுத்தசிவமாக இருப்பதால் பராசக்தியை நோக்குமிடத்து அந்நிலையிம் சக்தி வடிவாகவும் உயிர்களிடத்து வியாபரிக்கும்போது ஞானசக்தியாகவும் விளங்குவதால்-ஞானசக்தி நிலையிலே சிவம் 'பரநாதம்' எனப்பட்டது

அதனால் 'பரமசிவத்துடன் பிரிவின்றியிருக்கும் பராசக்தியிற் சிவமும், சிவத்திலே சக்தியும், சக்தியில் நாதமும் நாதத்தில் விந்துவும், விந்துவிற் சதாசிவனும் சதாசிவனில் உருத்திரனும் உருத்திரனில் விஷ்ணுவும் விஷ்ணுவிற் பிரமாவுமாக ஒன்பது பேதங்கள் ஒன்றிலொன்று தோன்றுகின்றன. 'எத்திறத்து ஈசன் நின்றான், அத்திறத்து அவளும் நிற்பள்'[2] என்றபடி ஒன்பதிற்கும் சிவம், சக்தி, நாதம் விந்து, மனோன்மணி, மகேஸ்வரி உமை, இலக்குமி, சரஸ்வதி என ஒன்பது பேதங்களிலும் அந்தப் பராசக்தியும் உடனிற்கும் என்பதாம். ஆகையினால சிவம், சக்தி, நாதம் விந்து என்பன அருவத்திருமேனிகள் எனவும், சதாசிவன் அருவுருத்திருமேனியாகவும், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன் என்ற நான்கும் உருவத் திருமேனிகள் எனவும் இவை ஒன்பதும் சிவனின் நவபேதங்கள் எனவும் சித்தாந்தத்தில் கற்பிக்கப்பட்டன.

**இலய போக அதிகார வடிவங்கள் :-**

ஆன்மாக்களை அநாதியே பற்றியுள்ள ஆணவத்தைப்

---

1. சித்தியார், 2 3. 164.
2. சித்தியார், 2. 3. 165.

போக்கித் திருவடிப்பேற்றைக் காட்டிப் பேரின்பப் பெரு
வாழ்வை அளிக்கத் திருவுள்ளம் கொள்ளும் நிலையே இறை
வன் பரநாதம் அதாவது உயிர்களிடம் வியாபரித்து ஞான
சக்தியாக நிற்றல் எனவும் இதனைக் கூறுவதுண்டு. அடுத்து
தொழிற்பட எண்ணம் கொள்ளும் நிலை பரவிந்து எனவும்,
அதனையடுத்து தனது வியாபகத்திலே அடக்கி சுத்த மாயை
யுடன் கூடியநிலை அபரநாதம் எனவும், சிறப்பாகத் தொ
ழிற் பட விரும்பும்போது அபரவிந்து எனவும் கூறப்படுத
லால் இவைநான்கும் அருவநிலையிலே அடக்கப்பட்டன. சக்தி
வியாபார பேதத்தால் அருவமான சிவப்பொருள் சிவன்,
சக்தி, சதாசிவன், ஈஸ்வரன் சுத்தவித்தை என ஐவகைப்
பட்டு இலய, போக, அதிகாரம் என்னும் மூவகை அவத்
தைகளை அடைய நேரிடுகின்றது. எனவே முதல்வனுக்கு'
சிவ தத்துவம் சுதந்திர வடிவமாகும்[1] சக்தி வியாபாரத்
தால் அவன் விகாரியாவதுமில்லை.

இலய போக அதிகாரம் என்பது அறிதல், விரும்புதல்
செய்தல் என்பதாகிய ஞான, இச்சா, கிரியா சக்திகளை
இறைவன் மேற்கொள்வதனைப் புலப்படுத்தும். சிவத்தை
உயிர்கட்கு அறிவிக்கும் உபாயங்களை அறிவித்தல் ஞான
சக்தி; அதனால் உயிர்களின் மலத்தை நீக்கி அவற்றிற்கு
சிவப்பேறளிக் விரும்புதல், இச்சா சக்தி; உயிர்கள் மலநீக்
கும் உபாயங்களை ஐந்தொழிலால் இறைவனுடன் கலந்து
பிரிப்பின்றி ஆற்றுதல் கிரியா சக்தி, எனப்படுதலால் சதா
சிவதத்துவம்-போகசிவனாலும், ஈஸ்வர தத்துவம்-இலய சிவ
னாலும் சுத்தவித்தை அதிகார சிவனாலும் அதிட்டிக்கப்படு
வதும் அவை முறையே இச்சா, கிரியா, ஞான சக்திகளாக
அமைவதையும் அத்தத்துவங்களில் சிவம்-சக்தி தத்துவமா
னது ஏனைய மூன்றுடனும் கலந்து நின்று காரியப்படும்
முறையும் இங்ஙனம் விளக்கபடுவதால் சக்தி காரியங்கள்

1. சித்தியார். பக் 154.



முதல்வனின் இலய, போக, அதிகார வடிவங்களாக அமை
யும் தன்மை இங்ஙனம் அறிவிக்கப்பட்டது, அதனால் சங்
கார்காரணை முதல்வன் சக்தி வியாபாரத்தால் ஐவகைப்
படுதலும் இலய போக அதிகார அவத்தைகளை அடையவும்
அதற்கு ஆதாரமான அத்தத்துவங்களை மேவும் படியுமா
யிற்று.[1]

மகா சங்கார காலத்திலே முதல்வன் தானேயாய் நிற்
பவன் சுத்தமாயையினை மீண்டும் காரியப்படுத்த வேண்டி
தன்னிடம் வெளிப்பட்ட ஞானசக்தி மாத்திரையை நோக்
குவன். அங்ஙனம் நோக்கிநின்றவழி சுத்தமாயை கலக்குண்
டமையால் (அதாவது தனது ஞானமாகிய அறிவினை ஞான
சக்தியாகக் கொண்டு சுத்தமாயையினை மீண்டும் தொழிற்
படுத்துகலாகும்). ஞானமாத்திரையாய் நின்றசிவம் அதிட்
டிக்கப்படுதலால் சிவதத்துவம் எனவும் இலயித்த மாத்தி
ரையால் இலயதத்துவம் எனவும், வடிவமின்மையின் நிஷ்
களம் எனவும். காரியப்படுதலினால் சக்திமான் எனவும்,
நால்வகை வாக்குகளில் சூக்குமையால் நாதத்திற்குப் பற்
றுக்கோடாதலின் நாததத்துவம் எனவும் அவ்வவற்றை
அதிட்டிக்கும்போது அவ்வப்பெயர் பெறுகின்றான்.[2] விந்து
வும் நாதமும் சதாசிவ தத்துவத்தைச் சார்ந்தவை. அனந்
தேஸ்வர வித்யேஸ்வரர்கள் ஈஸ்வரதத்துவத்தையும், சப்த
கோடி மகா மந்திரேஸ்வரர்கள் வித்யா தத்துவத்தைச்
சார்ந்தவர்கள்' என 'தத்துவபிரகாசமும்[3] கூறும் சிலர் நாத
மும் விந்துவும் தனியான தத்துவங்கள் எனவும் கூறுவர்.
தத்துவசங்கிரகம் என்ற சித்தாந்தநூலும் 'அனந்தர்' முதலிய
வித்தியேஸ்வரர்கள் பதியாயிருப்பதால் மந்திரர்களை ஏவு

1. சித்தியார். 1. 2. 85.
2. சிவஞானபாடியம் 2. 2. பக். 159.
3 தத்துவப்பிரகாசம், பாடல். 31.

கின்றனர், பரமசிவனது இச்சையால் ஏவப்பட்ட இவர்கள்
ஐந்தொழிற்றுகின்றனர்' என்பது மேலும் விளக்கமளிப்ப
தாக உள்ளது.

ஆதலால் சிவன் எனப்படும் பதியானவர் அனந்தர்
வாயிலாக ஈஸ்வர தத்துவத்திலே மகேஸ்வர மூர்த்தியாகி
பிரம்மா, விஷ்ணு ருத்திரன், மகேஸ்வரன் என்ற நிலையினை
அடைந்து ஐந்தொழிலாற்றுவது இங்ஙனம் கூறப்பட்டது.
அவ்வாறே சுத்தவித்தையிலே மந்திரர்களை இடமாகக்
கொண்டு சிவன் வேதாகமங்களை அருளுவதும் இவற்றிலி
ருந்து அறியப்படும். 'சுத்ததத்துவம், அசுத்ததத்துவம்
இரண்டிலும் அணுக்களும் அணுக்களின் பதிகளும் மந்தி
ரேசதத்துவமாகின்றனர். எனவே அசுத்ததத்துவாவில்
பிரமா, விஷ்ணு, முதலியோர் பிரதான மந்திரர்களாவர்
கள்.[1] என்பதிலிருந்து முதல்வனால் காரியப்படும் சுத்தாத்
துவாவிலிருந்து அசுத்தாத்துவாவிலே கலைமுதல் பிருதுவி
யீருகவுள்ள வித்யா தத்துவங்கள் ஏழினுடைய தோற்றம்
பேசப்பட்டது. இக்காரியங்களை பஞ்சகிருத்தியங்களில்
அடங்கும். அதனால் அசுத்த மாயையின் ஆதித்தோற்றம்
அணுவாக இருப்பதும் அவற்றினை காரியப்படுத்தும் பதி
களாக மந்திரேஸ்வரர்களும் கூறப்பட்டன நியாயகாரர்
பஞ்சபூதங்களை அணுக்கள் என்றனர். ஆனால் சைவசித்
தாந்திகளோ தன்மாத்திரைகளை அணுக்கள் எனவும் அந்த
அணுக்களின் விரிவே பஞ்சபூதம் எனவும் அணுக்களின்
சூக்குமவடிவம் தன்மாத்திரைகள், தூலவடிவம் பஞ்சபூ
தம் எனவும் அழகுற விளக்கமளித்திருப்பது சித்தாந்தம்
அணு விஞ்ஞான வாதத்தை அன்றே நன்கு புரிந்து கொண்
டிருப்பதை எடுத்துக்காட்டுவதாகவுள்ளது. மேலும் முதல்
வனின் நவபேதங்களும், மூவகை சிவபேதங்களும் உத்தி
யோக பேதமேயன்றி பொருட் பேதமல்ல எனவும் சித்

1. தத்துவசங்கிரகம், பாடல் 43. பக். கஉ0-க22.



தாந்தம் விளக்கியுள்ளது. அதாவது ஒரே மனிதன் தன்
பிள்ளைக்குத் தந்தையாகவும் தன் தந்தைக்குத் தான்மைந்
தனுகவும், தன் மனைவிக்கு கணவன் என்ற பெயரிலும்
மாமனுக்கு மருமகன் என்ற பெயரிலும், பிறருக்கு நண்
பன் என்ற பெயரிலும் உறவினர்க்கு சொந்தக்காரன்
என்ற பெயரிலும் தொழில் பார்க்குமிடத்து அதிகாரி
என்ற பெயரிலும் விளங்கினுலும் அவன் ஒருவனே மட்
டுமன்றி இவ்வுத்தியோக பேதங்களால் அவன் விகாரப்
படுவதுமில்லை என்பது போன்றதே முதல்வனுக்குள்ள
காரிய பேதங்களாகும். இதனையே சைவ சித்தாந்தம்
யதார்த்தமான முறையிலே விளக்கியுள்ளது.

சுத்த தத்துவம் ஐந்தினையும் இலய, போகம், அதி
காரம் என மூன்று எனச் சிலரும் சிவம், சக்தி சதாசிவம்
என மூன்றும் சிவத்தால் அதிட்டிக்கப்படுதலால் ஈஸ்வரம்,
சுத்தவித்தை என்பன அனந்தர் முதலியோரால் அதிட்டிக்
கப்படுவதெனக் கொண்டும், சுத்த தத்துவம் மூன்று எனவு
சிவம், சக்தி இரண்டையும் ஒன்ருக வைத்து அத்தத்து
வம் நான்கு எனக் கூறினும் விரிவின் அவை ஐந்தென்பம்
தே அவற்றிற்கெல்லாம் கருத்தாகும் என்பர் சிவஞானமுனி
வர்.[1] இத்தகைய விளக்கத்திலிருந்து சிவன், சக்தி, சதாசி
வம் மூன்றும் இலய, போக, அதிகாரங்கட்கு முறையே
இடமாகும் எனவும், ஏனைய ஈஸ்வரம், சுத்தவித்தை என்
பன விஞ்ஞானகலர், பிரளயகலர் பசுத்துவம் நீங்கி முதல்
வன் ஏவல் வழி நின்று ஐந்தொழில் நடத்தும் அனந்தர்
முதலியோர்க்கிடமாகும் எனவும் சிவாகமங்களும் கூறுவது
நோக்கத்தக்கது. இவற்றிலிருந்து சிவம் என்பதன் சொருப
லக்கணமும் பதி என்பதன் தடத்த இலக்கணமும் சித்தாந்தி

1. சிவஞானபாடியம், 2. 2; பக். 163.

லே சிறப்பு, பொது இலக்கணமாக வைத்துக் கூறப்பட்டுள்ளது.

**தடத்தநிலையும் உருவத்திருமேனிகளும் :-**

இதுவரை கூறப்பட்டவற்றால் சைவ சித்தாந்தத்திலே 'சிவம்' என்பது தற்சிவமான சொருபலக்கணம் என்பதும் 'சிவன்' என்பது 'பதி' எனப்படும் உருவத்திருமேனிகட்கு மூலமாக அமையும் தடத்தப் பொது இலக்கணம் எனவும் அறியலாம். ஆதலால் இறைவனால் அதிட்டிக்கப்படும் ஈஸ்வர தத்துவத்திலிருந்தே உருவத்திருமேனிகட்கான அடிப்படைகள் ஆரம்பமாகின்றன எனலாம். தடத்தநிலையிலே சிவனாகத் தன்னை வெளிப்படுத்தும்! இறைவன் பதியாக நின்று பஞ்சகிருத்தியங்களை ஆற்றும் பொருட்டு திருமேனிகளை எடுக்கவல்லவனாகின்றான். ஞானியர்க்கும், யோகியர்க்கும், சித்தர்கட்கும் சொருப நிலையிலே சைதன்யவஸ்துவாக விளங்கும் முதல்வன் சாதாரண பக்குவமில்லாத மக்களிற்கும் ஏனையோர்க்கும் தன்னை அறிவித்து அவர்களை ஆட்கொள்ளும் வண்ணம் கருணையினால் இறங்கி வந்து திருமேனிகளைத் தாங்குகின்றான் என்பதனை "நாடரிய கருணை திருவுருவமாகி ... நினைந்த உருநிறுத்திடுவன் நிமலன்" எனச் சிவப்பிரகாசம் கூறியிருப்பதையும் காண்க.

மால், அயன் முதலியோரை சிருட்டி காரியங்கட்காக சிவம் என்பதே படைத்துக் காத்து, துடைப்பதால் சங்காரகாரணனான முதல்வன் என சித்தாந்தத் சிவம் சிறப்பிக்கப்பட்டது. சங்காரத்தின் பின் மீளவும் யாவற்றையும் நிலைநிறுத்துவதால் சிவம் தனக்குத் தானே கருணையினால் மேற்கொள்ளும் வடிவங்கள் திருவுருவங்களாகின்றன. ஆதலால் முதல்வனுக்கு சிறப்பிலக்கணம், பொது



இலக்கணம் எனத்தனித்தனி பேசப்பட்டாலும் அவையிரண்டிற்கும் அதிக வேறுபாடில்லை எனச் சித்தாந்தம் கருதும். 'பதி என்று சொலற்குரிய தடத்தம் சிவம் என்று சொலற்குரிய செருபத்தினின்றும் வேறன்று' என்பது தோன்ற 'பதி எனவே சொலற்குரிய பரமன் என்றார்' என்பதனால் இவை நிலையிற்பேதமன்றிப் பொருட்பேதமன்றாம் என்க'.[1] என வரும் ஆகமவிளக்கம் இதற்கோர் உதாரணமாகும். பொருட்தன்மையினால் வேறாகவும் கலப்பினால் ஒன்றாகவுமுள்ள சிவத்தின் இருநிலைகளே சொருப - தடத்தலட்சணத்திற்குமுள்ள பொதுத்தன்மையாகும்.

சைவசித்தாந்தக் கடவுட் கொள்கையிலே 'ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதியாகிய சிவம்' மக்களின் பிரார்த்தனை வழிபாடு, வாழ்க்கைநெறி இவைபற்றிய சிந்தனைகளும் சித்தாந்தக் கடவுள் திருமேனி தாங்குவதற்கு ஒரு காரணமென்றால் மிகையாகாது. சித்தாந்தக் கடவுள் யாவற்றையும் 'கடந்தும்' யாவற்றிலும் 'கலந்தும்' நிற்பவர் என்பதால் கருணையே வடிவான முதல்வன் அறிவினால் தன்னை ஆராதிப்பவர்கட்கு சாயுச்சியமாகிய பரமுத்தியைக்கொடுத்து அந்நிலையில் இரண்டறக் கலந்து நிற்பன். ஆயினும் பெரும்பான்மையான மக்கள் கூட்டத்தினர் உலகவாழ்வின் இன்பதுன்பங்களால் அல்லற்பட்டு அஞ்ஞானத்திலே மயங்குவதால் அவர்கள் அனைவரையும் ஈடேற்றும் பொருட்டு சுத்த தத்துவங்களில் ஒன்றான ஈஸ்வரதத்துவ நிலைக்குத்' தன்னை உட்படுத்தி தனது பெருங்கருணை என்னும் 'பேராற்றலை' சக்தி எனப்படும் அம்பிகையாக உருவாக்கி அதன் துணையுடன்; அருவமாகிருக்கும் சிவதத்துவத்தை விடுத்து உரு

---

1) சர்வஞானோத்தர ஆகமம், பக். 30.

வநிலையிலே திருமேனிகளைத் தாங்கி வரும் அவசியத்தை சைவசித்தாந்தம் உருவாக்கியிருப்பது பாராட்டிற்குரியதாகும்.

'முப்பொருட்களும்' உண்மை எனச் சாதிக்கும் சித்தாந்தம் அவற்றினை நடைமுறைப்படுத்தும் உலகியல் அருளாட்சி அமைப்புத்தான் உருவக் கடவுள் வழிபாடென்றும் கூறலாம். உலகியல் நெறியிலே நிற்பவர்கட்கு வழிகாட்டும் வண்ணமாக சரியைகிரியை என்னும் வழிபாட்டு முறைகளை அறிமுகம் செய்தது. அவ்வழிபாட்டினை ஏற்கும் நிலையங்களாக ஆலயமும் உருவத்திருமேனிகளும் அமைக்கப்பட்டன பொய்யான உடம்பிற்கும் சித்தாந்தம் 'மெய்' என்று பெயரிட்டிருப்பதைக் காணுமிடத்து பொய்யாகும் உடலிற்குள் மெய்ப்பொருளாம் சிவம் அந்தர்யாமியாக - அணுவாக உறைகின்றமையினால் 'மெய்' என்று பெயரிட்டிருக்க வேண்டும். அந்த மெய்ப் பொருளில் ஆன்மா லயம் அடையும் இடமாகவும்; ஆலயங்களையும் - உருவக்கடவுளர்களையும் உருவாக்கியிருக்கின்ற ஆழம் அருமையான சிந்தனை வெளிபாடாக சித்தாந்தத்திலே இடம் பெற்றிருக்கின்றது. இதனால் தான் சொருபமான கடவுள் தன்னை அறிவிக்கும் பொருட்டுத் திருமேனிகளைத் தாங்குவார் என்பதனை 'அருவாகி நின்றானை யாரறிவார் தானே உருவாகித்தோன்றானேலுற்று'[1] எனச் சிவஞானபோதமும் உணர்த்திற்று அத்துடன் 'அகளமாய் யாரும் அறிவரிது- அப்பொருள், சகளமாய்த்தான் வந்தது'[2] என்பதனாலும் சிவபெருமான் எடுக்கும் உருவத்திருமேனிகளின் நோக்கம் சித்தாந்த நூல்களில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது

1. சிவஞானபோதம், சிற்றுரை, 8. 2 .3.
2. திருவுந்தியார், பாடல்—1.



**அனுக்கிரகமூர்த்தங்களும் கடவுட் கொள்கையும்:**

இறைவன் ஆன்மாக்கள் மேல் கொண்ட கருணையினால் அவர்களை ஆட்கொள்ள வேண்டிக் கருணைமேலீட்டால் பல திருவிளையாடல்களை மேற்கொண்டவிடத்து - அவரால் மேற் கொள்ளப்பட்ட வடிவங்கள் திருவுருவங்களாக ஆயின. இவற்றிலே அட்ட வீரட்டமூர்த்தங்கள் சிறப்பானவை. இறைவனின் திருவிளையாடல்களாக இவை போற்றப்படுவன. உருவத்திருமேனிகள் பல உருவாவதற்கு இறைவனால் நடத்தப்பட்ட திருவிளையாடல்களும் ஒரு காரணமானதுடன் இதிகாச புராண மரபுகளும் இத்தகைய அனுக்கிரகமூர்த்தங்கள் உருவாவதற்குப் பெருமளவு பங்களிப்புச் செய்துள்ளன. இறைவன் பண்பினால், தொழிலினால், லீலாவினோதங்களை வெளிப்படுத்தும் பொருட்டு திருவிளையாடல்களை மேற்கொண்டமையினை 'திருவிளையாடற் புராணம்' வாயிலாக அறியலாம். சிவத்திற்குத் தனிப்பட்டரூபம் எதுவும் கிடையாதாகையால் தன் சிற்சக்தியாற்றலை அன்னையாக்கி உயிர்கள் மேல் கொண்ட கருணையினால் பல்வேறு வடிவங்களை அது மேற்கொள்ளுகின்றது.[1] சிவம் ஒரு போதும் அவதாரம் எடுப்பதில்லை, பல்வேறு யோனிகளிற் பிறந்திறந்து வேதனைப்படுவதுமில்லை சொருபநிலையோ தடத்தநிலையோ மாயாகாரிய வடிவமில்லை என்பதும் சித்தாந்தத்தின் உறுதியான நிலைப்பாடாகும். வைணவக் கடவுளான விஷ்ணுமூர்த்தி 'அவதாரக் கடவுள்' என்றால் சைவத்திற்குரிய தனிமுதலான 'சிவம்' 'லீலாமூர்த்தி' எனவும் பொதுவாகக் கருதப்படும்.[2] ஆகவே சிவன் திருவருள் வாயிலாக விரும்பிய

1. Mahadevan, T. M P., The Idea of god in Saiva Siddhatha P. 19.
2. Ibid; P. 5.

திருமேனிகள் எடுப்பதன்றி கருவிலே உருவாகிப் பிறப்பதில்லை என்பது சைவசித்தாந்தம் காட்டும் உண்மையாகும்.

சிவனின் அனுக்கிரகமூர்த்தங்கள் பல புராணவரலாறுகளை ஆதாரமாகக் கொண்டு உலகியல் தேவைகளின் யதார்த்த நிலைப்பாட்டினை ஒட்டி உருவாக்கப்பட்டவையாகும். இவ்வகையிலே உலகவாழ்வின் இன்பதுன்பங்களை நுகரும் மக்கட் கூட்டத்திற்கு ஒரு ஆறுதலையும் மனச் சாந்தியையும் எதிர் காலவாழ்விலே ஒரு நம்பிக்கையினை ஊட்டுவனவாகவும் இந்த அனுக்கிரகமூர்த்தங்கள் அவ்வப்போது மக்களின் மனத் தேவைகளை நிறைவேற்றி வைப்பனவாக அமைந்திருக்கின்றன. தெய்வீகக் கதைவடிவனூடாக ஒழுக்கப்படித்தரத்திலே அமைந்த அறிவியல்கோட்பாடுகளையும், தன்னடக்கம்; பக்தி, வைராக்கியம், என்பனவற்றையும் சித்தாந்தம் தமிழ் உலகிற்கு வழங்குவதற்கு இம்மாதிரி உருவான மூர்த்தங்கள் பெருமளவிலே உறுதுணை செய்துள்ளன. இறைவனின் திருவிளையாடல்களிலிருந்து அறுபத்து நான்கு மூர்த்திபேதங்கள் கடவுளர் உருவங்களாக அங்கு கூறப்பட்டுள்ளன. அவற்றிலே எண்வகை வீரச்செயல்கள் 'அட்டமூர்த்தங்கள்' எனத்தனிச் சிறப்பினைப் பெற்றன. அவையாவன காமதகனமூர்த்தம், சம்ஹாரமூர்த்தம், திரிபுராந்தக மூர்த்தம், அந்தகாசுரசம்ஹார மூர்த்தம், கஜாசுரசம்ஹார மூர்த்தம், பிரமசிரச்சேத மூர்த்தம், தக்ஷாரிமூர்த்தம், கஜாசுரசம்கார மூர்த்தம் எனப்படும்.[1] இது தவிரக் 'காரணாகமம்' இரண்டாம் பிரிவிலே இம்மூர்த்தங்களின் விளக்கமும் உருவ

1. Kailasanathakurrukal, K. K., 'A study of saivaism of epic and Puranic penlods' (thesis for Degree of Doctor of Philosophy). P P. 266 — 285.



அமைப்புக்கட்குரிய அளவைகள் போன்ற விபரங்களையும் காணலாம்.[2] இவற்றினை 'அட்டவீரட்டச் செயல்கள்' எனக்கூறுவதும் மரபு

மும்மலங்களில் முதன்மைபெற்று விளங்குவது ஆணவமலமாகும். இதுவே தீமைகள் அனைத்தினதும் பிறப்பிடம் எனப்படும். அத்தகைய பல அழுக்காகிய ஆணவமலத்தினைச் சுத்திகரிப்பதே அட்டவீரட்டச் செயல்களின் தலையாய நோக்கமாகும். சித்தாந்த நோக்கிற்கேற்ப ஆணவமலத்தினைப் பக்குவப்படுத்தும் நிகழ்ச்சிகள் ஆங்கு கதாரூபங்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன எனலாம். அசுரர்கள் அனைவரும் 'நான்' என்ற அகங்காரம் கொண்டு போரிடச் சென்றபோதும் கருணாமூர்த்தியாகிய இறைவன் அவர்களது ஆணவமலத்தினை மட்டும் களைந்ததுடன்; அசுரர்கள் அனைவருக்கும் உயர்ந்தபேற்றினை வழங்கியதிலிருந்து தவறு செய்தவரைத் 'திருத்துவது' தான் இறைவனின் நோக்கமே தவிர 'வருத்துவது' அல்ல என்ற திருவருள் நோக்கினையும் விளங்க வைக்கின்றது. அழுக்குத் துணிகளைச் சலவைப்பவுடரில் ஊற வைத்து பின்னர் அழுக்கு நீங்கும்வரை அவற்றை கல்லின்மேல் நன்றாக அடித்துத் துவைப்பது அவற்றிலுள்ள அழுக்கினை நீக்கி சுத்தமாக்குவதற்கேயன்றி அவற்றினை அடித்துத் துன்புறுத்திக் கிழித்துப் போடுவதற்காகவல்ல. அதுபோன்றே இறைவனின் அட்டவீரட்டகச் செயல்களும் பிறவும் 'மறக்கருணை' என்ற பெயரிலே சித்தாந்தக் கோட்பாட்டிலே சிறப்பிக்கப்பட்டன.

## சிவலிங்க மூர்த்தியும் அக்கினி வழிபாடும் :

சிவனின் அட்டமூர்த்திகளைவிட வேறு பல மூர்த்தங்

2. காரணாகமம், II 60. 1. 5 ; II : 60. 1. 40 ; II : 70.1-2; II : 61. 2-6; II : 77. 1-7.

கள் அனுக்கிரக மூர்த்தங்களாக அமைந்து சைவசித்தாந்த
தத்துவார்த்தப் பின்னணியிலே அதன் கடவுட் கொள்கைக்கு
மேலும் மெருகூட்டுவனவாகக் காணப்படுகின்றன. இவற்
றிலே சில மறக்கருணையினுலும் வேறு பல 'அறக்கருணை'
யினுலும் எழுந்தவையாகும். ஆனுல் சிவனுக்குரிய அடை
யாள ரூபமான சிவலிங்க மூர்த்தம் சுயம்பு லிங்கவடிவமாக
விளங்கும் ஒன்ருகும். இறைவன் 'சோதிவடிவானவன், அல்
லது ஒளிரூபமானவன் என்றநம்பிக்கைஆதிகாலமுதல்எல்லா
இனமக்களிடையேயும் நிலைபெற்று வந்துள்ளது. வேதநூல்
களிலும் அக்கினி வரைத்தல், ஆகுதி செய்தல், வேள்வித்தீ
ஓம்புதல் என்பன முக்கியமான வழிபாட்டு மரபுகளாகப்
போற்றப்பட்டுள்ளன. உணவுப் பொருள் உற்பத்திக்குக்
கூட இன்றியமையாது வேண்டப்படும் நிலம், நீர் காற்று
என்பவற்றுடன் நெருப்பும் இன்றியமையாது வேண்டப்
படுவதாகும். உணவைப் பக்குவப்படுத்தும் அக்னிபோல
உள்ளத்தைப் பக்குவபடுத்துவது ஞானக்கினி எனப்படும்.
இன்றைய விஞ்ஞான உலகிலே அக்னியானது மின்சாரம்
என்ற உருவடைந்து தனது மாபெரும் சக்தியை நிருபித்து
கொண்டிருப்பினும் ஆக்குவதற்கும் அழிப்பதற்கும் கூட
மின்சார பயன்பாடும் காரணமாயிருப்பதில் இருந்து ஆக்
குவதும் அழிப்பதும் ஈஸ்வரனுல் ஆவது என்பதனை உணர
முடியும்.

இயற்கை அழிவுகள் பாரிய அளவில் நேருமிடத்து
மின்சாரம் கூட பயனற்றுப் போவதால் இயற்கையின்
உதவியே மக்கட்கு நித்தியமாக கைகொடுப்பதனைக் காண
லாம். இயற்கையும் இறைவனின் அம்சம் என்றவாறு இரு
ளிலே கஷ்டப்படும் மக்கட்கு இருள் நீக்கியாகவும் சந்திர
னுகவும், பகலிலே உற்பத்திக்கு உதவும் சூரியனுகவும்,
இரண்டுமேயில்லாதவிடத்து கைவிளக்குப் போல்-அக்னி
ரூபமாகவும் ஒளிகொடுப்பது இயற்கை ஒளியாகும். அத



னுல் மக்கட்கு பேருதவியாக விளங்கும் இந்த சூரிய, சந்திர
அக்னி வழிபாட்டிற்கு சைவம் முதலிடம் கொடுத்துள்ளது
இம்மூன்றும் சிவனின் 'திருக்கண்கள்' என சிவாகமங்கள்
கூறும். உருவவழிபாட்டு வரிசையிலே இக்கருத்தை விளக்
கும் சிவலிங்க மூர்த்தம் சைவத்தில் முக்கிய இடத்தினை
வகிக்கின்றது. சிவலிங்க வழிபாட்டிற்கு வேறு பல கார
ணங்களும் ஆதாரமாயமைந்த போதும் ஜோதி வழிப்பாட்
டை அம்மூர்த்தம் பின்னணியாகக் கொண்டிருப்பதனை
மறுக்க முடியாது. அருவமான இறைவன் தம் சொரூப
நிலையினின்றும் இறங்கி தேவர்களையும் ஆகர்ஷிக்கும்
ஜோதியான லிங்க மூர்த்தமாக நின்ற வரலாற்றை புரா
ணங்கள் கூறும் 'அடிமுடிதேடிய' வரலாறு மூலம் அறிய
முடியும்.

சிவாலய வழிபாட்டு நெறியிலே சிவம் லிங்கமாக
ஜோதி ரூபமாக நின்ற இத்தகைய இயல்பினைச் சிறப்பிப்ப
தாக 'சிவராத்திரி' வழிபாட்டு மரபு அமைந்திருக்கின்
றது.[1] சிவாலயங்களிலுள்ள கருவறையிலே சிவமூர்த்தங்
களில் சிவலிங்க மூர்த்தமே 'மூலமூர்த்தி' என்ற விசேடத்
தைப் பெற்றுள்ளது ஏனைய மூர்த்தங்கள் சிவாலயக் கரு
வறையிலே இடம்பெறும் மரபு கிடையாது சிவப்பொரு
ளின் அருவுருவத் திருமேனியாகத் தத்துவநிலையிலே சதா
சிவமூர்த்தி சிறப்பிக்கப்படுமாறு போல; உருவவழிப்பாட்
டிலே சிவத்தின் இருவேறு நிலைகளை விளக்குவதற்குப் போ
லும் சிவலிங்கமூர்த்தம் அருவுருவத் திருமேனியாக வழி
பாட்டு மரபிலே அமைக்கப்பட்டுள்ளது. சித்தாந்த சாஸ்
திரங்களில் சிவலிங்கத் திருமேனியின் சிறப்பினை சித்தியா

---

1. Kurukal. K.K. A study of Saivaism of epic and puranic period, P..263.
காரணாகம்ம; II:69, 1-5.

ரும் விளக்கியிருக்கின்றது. அத்துடன் காலம் செல்லச் செல்ல அறிவராய்ச்சி விரிவடைவது போல தத்துவராய்ச்சியும் வளர்ந்து கொண்டு போவதனை விஞ்ஞான பூர்வமாக சிவலிங்க மூர்த்தத்திற்கு கொடுத்துள்ள விளக்கத்தினின்றும் அறியலாம்.

சிவலிங்க வடிவத்தின் அமைப்பு எவ்வாறு உருவானது என்பதனை இலஞ்சி ஆ. சொக்கலிங்கம் பிள்ளை என்பார் வெகுசிறப்பாகவும் நுணுக்கமாகவும் விளக்கியுள்ளமை கண்டு குறிப்பிடத்தக்கது. 'பெண் தன்மையுடைய குண்டலினி சக்தியானது பூமியின் உள்நடுமையத்திலிருந்து மனிதனுடைய முதுகுத் தண்டுவழியின்னுள்ள மூலாதாரத்துள்ளே புகும். அங்கிருந்து முதுகுத் தண்டுவழியாக மேல் நோக்கி ஏறும் போது மனித உடம்பிலுள்ள ஆறு தாமரைகளும் அவனுடைய பிராணமய கோசத்தின் மேற்புறத்திலே அமைந்திருப்பனவாயினும் அவற்றின் தண்டுகள் முதுகுத் தண்டிலே இணைக்கப்பட்டிருக்கும். (Medulla) இந்த இணைப்பு அல்லது முடிச்சு இரத்தத்திற்கு வந்ததும் அச்சக்தியின் ஒவ்வொரு பகுதியும் அந்தந்த நாளங்கள் வழியே ஓடி ஆதாரத் தாமரைகளில் வந்துச் சேரும். அங்கு ஆண் தன்மையுள்ள ஜீவசக்தியானது (Primary Force) புறத்தேயிருந்து தாமரையின் உள்ளே வந்திறங்கும். அப்போது இரு சக்திகளும் ஒன்றை ஒன்று எதிர்த்து மோதி ஒன்றாகக் கலந்துவிடுகின்றன. இந்த இருசக்திகளின் சேர்க்கையிலேயே உடம்புகள் உயிர்வாழ்கின்றன. அந்த அணுக்கூடு குண்டலினி சக்தி எனப்படும். புறத்தேயிருந்து வந்து சேருவது ஜீவசக்தியாகும். இந்த இரண்டு சக்திகளின் கலப்பே சிவாலயங்களில் காணப்படும் சிவலிங்க வடிவமாகும்.[1] இதிலி

1. சொக்கலிங்கம், இலஞ்சி. ஆ., ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், முதற்புத்தகம், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்பகம், சென்னை 1987, பக் 314-15.



ருந்து குண்டலினி சக்தி என்ற அணுக்கூடு சைவத்திலே சக்தி எனவும் புறத்தேயிருந்து வந்துகூடும் ஜீவசக்தி சிவம் எனவும் பெயரிட்டு சித்தாந்தம் தத்துவ விளக்கம் கண்டமை அறிவியல்ரீதியான அதன் தத்துவவளர்ச்சிக்கு சிறந்த சான்றாக அமைகின்றது. சிவலிங்கவழிபாட்டை ஒரு காலம் கேலிகுரியதாகக் கருதிப் பேசிய மேனாட்டாருக்குரிய கருத்தையும் இவ்விளக்கம் மறுத்துரைப்பதாக அமைந்துள்ளது. 'சக்தியும்'' சிவமுமாயதன்மை இவ்வுலகமெல்லாம்-ஒத்தெவ்வாணும் பெண்ணும் உயர்குண குணியுமாக-வைத்தனன் அவனால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை எல்லாம் இத்தையுமறியார் பீடலிங்கத்தினியல்பு மோரார்'[2] என மேற் குறிப்பிட்ட விளக்கத்தின் உட்பொருளாக சித்தியார் பாடல் அமைந்திருப்பதும் உணரத் தக்கதாகும்.

## குருமூர்த்தம் அல்லது தட்சணாமூர்த்தி வடிவம் :

அருவுருத் திருமேனியின் அடையாளமாக சிவலிங்க மூர்த்தம் அமைந்திருப்பது போல உருவக் கடவுள் வழிபாட்டிலே அனேகதிருமூர்த்தங்கள் வழிபாட்டிலே அமைந்துள்ளன. உருவத் திருமேனிகள் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன் என சித்தாந்தம் வகுத்துள்ளபோதும் ஒருவரே அனைவரையும் அதிட்டித்து நின்று செயற்படுத்துவர் என்ற ஆகமக் கருத்துக்களை ஆலயங்களில் உருவத் திருமேனிகள் வழிபாட்டு முறை வாயிலாக சித்தாந்தம் நடைமுறைப்படுத்தி வருகின்றதெனலாம். அப்படியான சிவனது உருவத்திருமேனிகளில் தனித்துவம்பெற்று விளங்குவது குருமூர்த்தமாகும். எல்லாம்வல்ல பரம்பொருளை குருமூர்த்தமாகக் கொள்வது வடமொழி, தமிழ்மொழிக்குப்பொது என்றாலும் ஞானசிரிய மரபு பண்டைக்காலம்

2. சித்தியார், 7.2.89.

முதல்தமிழ் மரபில்தான் புகழ்பெற்று வந்துள்ளது. ஆலின் கீழ் அறம்போதிக்கும் சங்ககால மரபு பிற்காலம் சித்தாந்தத்திலே தட்சணாமூர்த்திக் கோட்பாடாக வளர்ச்சி பெற்றதாகக் காணப்படுகின்றது.[3] நாயன்மார் காலம் இம்மரபு பெரிதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. மகாபாரத காலம் அர்ச்சுனன் பாசுபதம் பெற்றதும், கண்ணன் உபமன்யு முனிவரிடம் உபதேசம் பெற்றதும் அனுசாசன பருவம் 45-ல் வருகின்றது. இவ்வாறாக தென்முகக் கடவுளான தட்சணாமூர்த்தி யோகிகட்கு யோக நுட்பத்தையும் நாற்பொருளையும், மனமொங்கும் உபதேசத்தையும் அருள்பவராகவிருந் சிந்து வெளியிலே கிடைத்த இலச்சினைகளுள் யோகியின் வடிவத்தைக் கொண்ட இலச்சினையும் இத்தகைய குருமூர்த்தத்தின் எச்சமாகலாம்.

சித்தாந்த சாஸ்திர நூல்களும் இந்த மூர்த்தத்திற்கு மரபு ரீதியான அங்கீகாரத்தை வழங்கியிருக்கின்றன. 'ஸ்ரீகண்டசிவம் தட்சணாமூர்த்தியாக இருந்து வேதாகமங்களை அருளியதுடன் உபதேசம் செய்தார் என்பதும் பொருந்துவதாம் என மெய்கண்ட சாஸ்திரங்கள் கூறியுள்ளன.[1] சிவாகமங்களின்படியும் சுத்ததத்துவங்களில் ஒன்றான சுத்தவித்தையிலே' இறைவன் அனந்தரை அதிட்டித்தும் அனந்தர் வாயிலாக ஸ்ரீகண்டரை அதிட்டிதும் வேதாகமங்களை அருளினார்' என கிரணாகமம் முதலியன கூறியுள்ளன. தத்துவசங்கிரகம் என்ற சித்தாந்த நூலும் 'சிவம் ஈஸ்வரதத்துவத்திலே அனந்தரையும், சுத்தவித்தையிலே வித்தியேஸ்வரரையும்' அதிட்டித்து ஞானநூல்களை அருளினார் எனக் கூறும்.[2] இவ்வாறான மரபு வழியிலே ஆன்மாக்கட்கும்

3. சுந்தரமூர்த்தி, டாக்டர், G.S., சைவசமயம், பக். 78.
1. சித்தியார் 1.2.74.
2. தத்துவசங்கிரகம், பக். 96.



முறையே விஞ்ஞானகலர், பிரளயகலர் சகலர்க்கும் அந்தந்த நிலையிலே குருவடிவு கொண்டு உபதேசிப்பர் எனச் சித்தாந்த நூல் வாயிலாக அறியலாம்.[3]

சிவனின் குருமூர்த்தத்திற்கு சிவாலயங்களிலே பிரத்தியேகமான இடமுண்டு. 'தட்சணாமூர்த்தி' என்ற பெயரிலே ஆலயக் கருவறையின் தென்புறச் சுவரிலே இம்மூர்த்தம் இடம் பெற்றிருக்கும். 'குருவே' சிவம் எனக் கூறினன் நந்தி' என்பது போல 'இன்னருட் சக்தி குருவென வந்து குணம் பல நீக்கும்'[4] எனத் திருமந்திரத்திலும் இம்மரபு சுட்டப்பட்டுள்ளது. தட்சணாமூர்த்தி வடிவமானது ஆலின் கீழ் சுகாசனத்திலே அமர்ந்தவாறு வலதுகரத்தை உயர்த்தி சின்முத்திரையிலே அமர்ந்திருப்பதானது நீண்டு இருக்கும் மூன்று விரல்களும் மும்மலங்களையும் மடித்த விரல்களில் சுட்டுவிரல் ஆன்மாவையும் கட்டை விரல் சிவத்தையும் குறிக்கும் எனலாம். மும்மலங்களை விடுத்து ஆன்மா சிவத்துடன் ஒன்றியிருக்க வேண்டுமென மடித்து ஒன்றாகச்சேர்த்திருக்கும் இரண்டுவிரல்களும் ஞானோபதேசத்தின் மூலமாக உணர்த்தி நிற்பது சித்தாந்ததிலே அதற்குரிய பொருளாகக் கொள்ளவேண்டும். இதனால் மலபந்தத்திலிருந்து விடுபட்ட ஆன்மாவிலே சிவத்தின் திருவருட்சக்தி அருள் வடிவாகப் பதிகின்றது. அத்திருவருளை சக்திநிபாதத்தில் ஆசாரியராகவந்து 'தீட்சை' கொடுத்து சிவ சாரூப்ய பரத்துவத்திலே ஆன்மாக்களை அடைவிக்கிறது சிவன் குருவாக வருவதன் பிரதான இலட்சியம் இதுவாகும். சிவமூர்த்தத்திலே 'தட்சணாமூர்த்தமானது' அனுக்கிரக மூர்த்தங்களின் வரிசையிலே இடம் பெறுகின்றது.

3. சிவஞானபோதம், (அதிகரண வெண்பா). 8.2.1.
   திருவருட்பயன், அருளுருநிலை, பாடல். 5.
4. திருமந்திரம், 1527, 4581.

**அர்த்த நாரிமூர்த்தம் :**

இம்மூர்த்தத்தை அனுக்கிரகமூர்த்தம் என்பதனைவிட சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையாகவுள்ள 'அத்வைதக்கோட்பாட்டின்' வெளிப்பாடாக அமைந்துள்ள ஒரு வடிவம் எனவும் கருதலாம். சிவசக்தி தத்துவத்தில் பிரிக்க முடியாத பண்பினை மட்டுமன்றி உலக வாழ்வின் அர்த்தத்தையும், ஆண் பெண் இருபாலரின் சமத்துவத்தையும் எடுத்துக்காட்டியுள்ளது. புருடார்த்தங்களில் ஒன்றான இல்லறவாழ்வின் புனிதத்தன்மையையும், இல்லற தர்மத்தையும் வற்புறுத்தும் நோக்கமும் அர்த்தநாரி மூர்த்தம் அமைவதற்கு ஒரு தேவையை ஏற்படுத்தியிருக்கவேண்டும். குடும்பத்திற்கும் குழந்தைகட்கும் தலைவராகவும் பெற்றோராகவும் விளங்குபவர்கள் தாய் தந்தையர் ஆவர். உலகமாகிய குடும்பத்திற்கும் உயிர்களாகிய குழந்தைகட்கும் தாய் தந்தையராக விளங்கும் பண்பினால் அர்த்தநாரீஸ்வரராக விளங்கும் 'அம்மையப்பர்' உமாமகேஸ்வரராக, பார்வதி பரமேஸ்வரராக கௌரி சந்திரசேகரராக, விசாலாட்சி விஸ்வநாதராக, காமாட்சி ஏகாம்பரரேஸ்வரராக, அகிலாண்டேஸ்வரி ஜம்புகேஸ்வரராக மீனாட்சி சுந்தரேஸ்வரராக இன்னும் பல திருமூர்த்தங்களிலும் உலகினர்க்கு தம்மை வழிபடும் வண்ணம் காட்சி கொடுத்திருக்கின்றார். 'அம்மையப்பரே உலகிற்கு அம்மையப்பர் என்றறிக்' என்றவாறு 'அறிவினில் அருளால் மன்னி அம்மையோடப்பராகி செறிவொழியாது நின்ற சிவன்' என்பது சித்தியார் பரசிவ வணக்கப்பாடலாகும்.

அர்த்தநாரீஸ்வர் மூர்த்தமானது தேவாரகால நாயன்மார்களாலும் சிறப்பிக்கப்பட்ட பெற்றி வாய்ந்தது. முதல்

1. சித்தியார், பாயிரம், பர சிவ வணக்கம், பாடல். 2



வனை சக்தியுடன் ஒன்றுபடுத்துவதற்கு ஐந்தொழிலும் ஒரு காரணமெனலாம். சுத்த சிவசக்தி தத்துவத்தின் நிலைப்பிலே பிரிவின்றிக் கலந்துநிற்கும் அத்துவிதமாகவுள்ள பண்பையும் இம்மூர்த்தமானது தன்னுள் கொண்டிருப்பதால் அர்த்தநாரீஸ்வர மூர்த்தம் அத்வைதக் கலப்பின் ஆதாரமாகவும் சித்தாந்தத்திலே விளங்குகின்றது. 'சக்தியும் சிவமுமாய தன்மையிவ்வுலகமெலாம் - ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குணகுணியுமாக வைத்தனர்' என்பதன்வழி இருமைத்தன்மையின் ஒருமைப்பாடு புலப்படுத்தப்பட்டது. இக்கருத்தினை வெளிப்படுத்தும் இன்னொருவடிவமாக சிவலிங்க மூர்த்தத்தையும் கூறலாம்.' இறைவனின் உடனுறையும் ஆற்றலை, கருணையை, அருளை, அன்பினை, தாய்மையை, தியாகத்தைப் என்றிவ்வாறு மென்மையான பண்புகளை எல்லாம் 'சக்தி' யாக்கி அதற்கும் 'தெய்வத்தன்மை' வழங்கியுள்ளது சித்தாந்தம் உலகியல் உண்மையை ஏற்றுக்கொள்ளும் சித்தாந்தம் அக்காரியங்களை ஆண் பெண் இருபாலரும் இணைந்து நடத்திவருவதால் ஒன்றில்லாமல் ஒன்றில்லை' என்றவாறு அருவமான உயர்பண்புகளையெல்லாம் இறைவன் இறைவிக்களித்து 'சிவமின்றி சக்தியில்லை - சக்தியின்றி சிவமில்லை' என்ற கருத்தினை வலியுறுத்தியது.

உயிர்கள் மீது அன்பு செய்யும் போது அருட்சக்தி; உலகினைப் படைத்தழிக்கும் போது ஆற்றல்சக்தி, உயிர்கட்கு ஞானமுபதேசிக்போது ஞானசக்தி, தொழிலாற்றும் போது கிரியாசக்தி; போகமூட்டும் போது இச்சா சக்தி என 'எங்கெங்கு காணினும் சக்தி 'யெடா' என பாரதியாரையும் பாடவைத்த சிவசக்தி இறைவனிடம் பேரறிவாக விளங்குமிடத்து அறிவுருவாகவும் அமைவதால் 'சக்தி தன் வடிவே தடையிலா ஞானமாகும்' [1] என

1. சித்தியார், உயிர்கள் வினைப்பயன் நுகரும்முறைமை, 22.82.

வும் 'அருளது சக்தியாகும் அரன்தனக்கு அருளையின்றி தெருள்தரு சிவமுமில்லை அந்தச் சிவமின்றிச் சக்தியுமில்லை' [2] எனப்படும். விளக்கமாகவும் சித்தாந்த சாஸ்திரங்களில் போற்றப்படுகின்றது. அணுக்கொள்கை பற்றியும் இந்துதத்துவங்களில் நியாயதரிசனம் பல கொள்கைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளதாயினும் சைவத்தில் பல இடங்களில் ஈஸ்வான் அணுத்தத்துவங்களுடன் தொடர்புபடுத்திக் காட்டும் பகுதிகளை பாக்கக் காணலாம்.

பொதுவாக ஒரு பொருளை எடுத்துப் பகுதிகளாககிக் கொண்டே செல்லுமிடத்து இறுதியே பகுக்க முடியாதவாறு மிகச்சிறிய நுண்வடிவாக இருப்பது எதுவோ அதுவே அணுப்பொருள் எனவும் 'பரமாணு' எனவும் பெயர் பெறும் பரமாணு என்பது ஒருநுண்ணிய மூலக்கூறு. விஞ்ஞான உலகிலும் எலக்ட்ரோன், புரோட்ரோன், நியூட்ரான், என மூன்று 'துகள்' இணைந்த ஒன்றே பரமாணு எனபடும். ஒவ்வொருஅணுவிலும் நடுவில் சூரியன்போன்று 'நியூகிளியஸ்' (Newclear) என்ற அணுக்கரு ஒன்றும் அதனுல் வசிகரிக்கப்பட்டு அதனைச்சுற்றி ஆண்மின்னுரு (எலக்ரான்) பெண்மின்னுரு (புரோட்ரான்) அலியுரு நியூட்ரான் என்ற பலவகைக் கிரகங்கள் உள்ளன என்று ஜீன்ஸ் (Jeans, ரூதர்போர்ட் போன்ற விஞ்ஞானிகள் பலர் கூறியுள்ளனர்[1] தேவார திருவாசகங்களும் இறைவனை 'அருமறையின் அசத்தானை-அணுவை யார்க்கும் தெரியாத தத்துவனை' எனவும் 'ஆணுகிப் பெண்ணுகி அலியாய்ப் பிறங்கொளியாய்' எனவும் பலவிதமாக போற்றிப் பாடியுள்ள கருத்துக்கட்கும் இந்த அணுவிஞ்ஞான விளக்கத்திற்குமுள்ள ஒற்றுமையும் யாவர்க்கும் தெற்றென விளங்கும்.

---

2. சித்தியார், 6.2.239.
1. சொக்கலிங்கம், இலஞ்சி, ஆ., 'ஆலய உட்பொருள் விளக்கம்' (முதலாம் புத்தகம்), பக். 317.



நுண்ணியக்கங்கட்கெல்லாம் காரணமான பரமாணுவே விண்ணுகி, மண்ணுகி, ஆகாசமாய், ஆற்றலாய், உயிராகிப் பலவாறு அணுக்களின் விகிதார சேர்க்கைகேற்ப பல்வேறு நாம ரூபங்களையும் அடைகின்றது. அதன் இயக்கம் நிறுத்தப்பட்டால் அது சூன்யமாகி விடுகின்றது. சூனியம் என்பது பரவெளியாகும். புத்தர் இதனை நிர்வாண நிலை என்றுர்; சங்கரர் இதனை நிர்குண ரூபம் என்றுர். சித்தாந்தம் சிவரூபமாக நிஷ்கன ளாகக் கொண்டது. பஞ்சபூதங்களில் சிதம்பரம் பரவெளியினையும், மனித உடலிலே இருதயத் தானத்தையும் சுட்டுவதாகும் பிரபஞ்ச ரகசியத்தை ஆராய்ந்து பார்த்த ஞானிகள் சிலர் இறுதியாக இருப்பது 'இரண்டு பொருட்கள்' என்றுர்கள். அதனை ஒன்று 'அணு', மற்றது 'வெளி' என்று விஞ்ஞானிகள் விளக்கினர் பொருளும் (Mutter) சக்தியும் (Energy) என்பது அயனஸ்ரீனின் (Eienstean) விளக்கம் என்பது குறிப்பிடத்தக்கது. சக்தியும், சிவமும் என்று அவற்றை தத்துவ ஞானிகள் விளக்கம் கண்டனர் 'வெளி' எனபடுவதே இந்த அணுக்களை மூடிக்கொண்டிருக்கின்றது 'வெளி' என்பது எங்கும் நிறைந்து, எல்லாமாய், பரமாய் இருப்பதால் அணுவும் பரமும் பிரபஞ்ச இயக்கங்களும், உயிரியக்கங்களும் உண்டாகின்றன. ஆதலால் தத்துவ ஞானிகள் பரவெளியைப் 'பரமசிவமாக்தி' ஆக்கி ஆண் என்றும் பெண் என்றும் இருகூறுக்கி வழிபாட்டிற்குரியதாக்கினுர். இரண்டு பொருட்களும் இணைந்து தத்துவக் கூட்டங்களை உற்பத்தியாக்கிநிலைபெறச் செய்வதனை சைவ சித்தாந்திகள் இறைவனின்' ஐந்தொழில்களாக வகுத்து முப்பத்தாறு தத்துவங்களாக அவற்றின் இயக்கங்கள் செயற்படும் முறையினை விபரித்துக் காட்டினர். அன்று மெய்ஞானிகள் அகக்கருவிகளால் கண்டு வெளிப்படுத்திய பிரபஞ்ச ரகசிய உண்மைகளை; இன்றையவிஞ்ஞானிகள் புறக்கருவிகளின் துணைகொண்டு பலரும் கண்டு புரிந்து கொள்ளுமாறு படம் பிடித்துக் காட்டியுள்ளனர்.

பிரபஞ்சம் என்ற பேரியக்க மண்டலங்களும் ; அங்கு தங்கி வாழும் உயிரினங்களும் மேற்குறிப்பிட்ட இரண்டு பொருட்களாலும் ஆளப்படுவனவாதலால்; உலகிலும் உயிரினங்களிலும் இவ்விரண்டு தன்மைகளும் அடங்கப் பெற்றிருததால் 'சக்தியின்றி சிவமில்லை-சிவமின்றிச் சக்தி யில்லை' எனவும் சித்தாந்தின் சிந்தனை தத்துவ வெளிப் பாடாக அமைந்தது பெருமைப்படத்தக்க விடயமாகும்

**நடராஜ மூர்த்தம் :**

இறைவனின் அனுக்கிரக மூர்த்தமானது சைவசித் தாந்த தத்துவத்தின் சிறந்த தத்துவக் கலைப்படைப்புகளில் உன்னதமானது. அது உலக அறிஞரும் வியந்து பாராட்டும் பெற்றி வாய்ந்தது. நடராஜ வடிவம் முதல்வனின் ஐந் தொழில்களை வெளிப்படுத்துகின்ற ஒரு திருமூர்த்தமா கும்' உலகினை ஒடுக்குதற் பொருட்டும் உயிர்களை இளைப் பாறச் செய்தற் பொருட்டும் அவரவர் கன்மங்களைப் புசிப்பித்தற் பொருட்டும், உயிர்கட்கு மலபரிபாகம் ஏற் படுத்துதற் பொருட்டும் இறுதியில் உயிர்கள் அனைத் திற்கும் பேரின்பத்தை வழங்கும் பொருட்டு ஐந்தொழில் கள் இறைவனால் ஆற்றப்படும்.[1] இத்தொழில்களைக் காட்டும் அமைப்பிலுள்ள நடராஜ மூர்த்தம் சிவா லயங்களில் சிவலிங்கமூர்த்தத்திற்கு அடுத்ததாகச் சிறப்புப் பெற்றது' 'தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்-சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் ஊற்றமா ஊன்றுமலர் பாதத்தில் உற்றதிரோதனம் முத்தி-நான்ற மலர்பதத்தே நாடு'[2] எனச் சித்தாந்த நூல்களிலே நட ராஜ வடிவத்தின் தத்துவம் விளக்கப்பட்டுள்ளது.

1. சித்தியார், 1.2 57.
2. உண்மை விளக்கம், பாடல். 35
திருமந்திரம், பாடல், 2799.



ஐந்தொழிலில் ஒன்றான 'அருளல்' என்பது அனுக்கிரகத் தின் ஒரு அம்சமாகும். அதனால்தான் 'அரனடி என்றும் அனுக்கிரகம் தானே' என திருமந்திரம் கூறிற்று. நட ராஜ வடிவம் ஐந்தொழிலாற்றும் தத்துவத்தை மட்டு மல்ல, உலகமக்களின் அபிலாசைகட்கேற்ப கலைவடிவம், போக வடிவம். தத்துவ வடிவம் என்ற அனைத்தையும் உள்ளடக்கி நிற்பதொன்றாகும். உருவத் திருமேனிகளில் சைவ சித்தாந்தத்தில் அதியுயர் சிறப்புடன் திகழ்வது இத்திருமூர்த்தமாகும்.

நடராஜவடிவத்தின் உருவமும் உள்ளடக்கமும் கூட விஞ்ஞானப் பார்வையில் ஆழமான தத்துவார்த்த ஞானப் பின்னணியைக் கொண்டுள்ளது. இலங்கையைச் சேர்ந்த டாக்டர் ஆனந்தகுமாரசாமி என்பவரால் எழுதப்பட்ட (Dance of Siva) 'சிவானந்த நடனம்' என்ற நூலானது இத்திருமூர்த்தத்தின் அனைத்துச் சிறப்புக்களையும் மொத்த மாகவிளக்கும் நூலாகக் காணப்படுகின்றது. உருவவழிபாட் டிலே அதிசிறப்பிடம் பெற்றுள்ள நடராஜமூர்த்தத்திற்கும் மார்கழியிலே வரும் திருவாதிரைத் திருவிழாவிற்கும் நெ ருங்கிய தொடர்புண்டு. ஆதிரை தரிசனமே நடராஜனின் ஆனந்ததாண்டவம் எனச் சைவம் குறிப்பிடும். சிவனுக்கு 'ஆதிரையான்' என்ற சிறப்புப் பெயரும் இதனால் உண் டானது. பரவெளித் தத்துவத்தைக் குறிக்கும் சிதம்பரத் திலே விசேடமாக நடராஜர் கோயில் கொண்டிருப்பதனால் அத்தலத்திலே தமிழ்நாட்டில் உள்ள சகல திருக்கோயில் களையும் விடத் திருவாதிரைத் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெறுவதுண்டு. (இதனை எழுதிக்கொண்டிருந்த வேளை யிலே என்ன பொருத்தமோ - இப்போது சிதம்பரத்தில் இன்று நடராஜருக்கு ஆதிரைத் திருவிழா கோலாகலமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. எழுத்தினால் இன்று அந்த அண்ணலை ஆராதிக்கும் பாக்கியம் எனக்கும் கிட்டி

யது 21-12-1991.) 'ஆலய உட்பொருள் விளக்கம்' என்ற நூலிலே அதன் ஆசிரியர் C. சொக்கலிங்கம் பிள்ளை என்பார் நடராஜவடிவம், சிவலிங்க வடிவம் என்பவற்றுக்கு விஞ்ஞான பூர்வமான ரீதியிலே சில அரிய விளக்கங்களைக் கொடுத்துள்ளார். அது தத்துவ சிந்தனையாளரின் சிந்தனைகளை அளவிடக் கூடியவாறு அமைந்துள்ளது. ஆசிரியர் அவர்களின் நூலிலிருந்து அறிந்து கொண்டவற்றை விளக்கத்திற்காக இங்கு சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளோம்.[1]

முன்னோர் பண்டைக்காலம் 27 நட்சத்திரங்களைக் கொண்டு காலங்கணிக்கும் முறையினைக் கற்றிருந்தனர். பழைய நாடோடிப் பாடல் ஒன்றிலே நட்சத்திரங்கள் பற்றி குறிப்பிடும்போது 'ஆதிரை ஒருமின் செந்தீப்போல' எனக் கூறப்பட்டுள்ளது. அச்சுவினி, பரணி, கிருத்திகை ரோகிணி போல 'ஆதிரை' ஒரு நட்சத்திரக் கூட்டாக அமைவதில்லை. அது ஒரு தனியான விண்மீன் எனவும் அதாவது, 'மிகச்சிறந்த பெரிய விண்மீண்' எனக் கூறுவதுண்டு திருவாதிரை என்பது சூரியனைப் போல ஒரு லட்சம் சூரியன்களை விழுங்கி உள்ளடக்கவல்லது என்பது தற்கால வானியல் விஞ்ஞானிகள் கருத்தாகும். கோயில் திருவிழாக்கள் எல்லாம் அனேகமாக பௌர்ணமி தினத்திலே முடிவு பெறுவது வழக்கம். அவ்வாறே ஆருத்ரா தரிசனத்திலன்றும் பூரணச் சந்திரன் திருவாதிரை நட்சத்திரத்திலே இருக்கக் காணலாம். அந்த செந்தீ போன்ற நட்சத்திரம் நிலவினை அடுத்து வானத்திலே காணப்படும். அதற்கு நேர் மேற்கிலே ஒரு வெள்ளிமீனும் இரண்டிற்குமிடையே சற்று வடக்கிலே மிருகசீரிட நட்சத்திரமும் விளங்கும். இந்நட்சத்திரம் நிலவொளியிலே வெளிப்படை

1. சொக்கலிங்கம், ஆ, ஆலய உட்பொருள் விளக்கம் பக், 310-320.



யாகத் தெரிவதில்லை. ஆனால் சாதாரண நாட்களில் நன்கு புலப்படும் இந்த அமைப்பிலே செந்தீ நட்சத்திரமான ஆதிரை நடராஜப் பெருமானின் ஒரு திருக்கரத்திலேயுள்ள அக்கினி போலவும் மறுதிருக்கரத்திலே மற்ற வெள்ளிமீன் 'டமருகமான' அமைப்பிலும் (உடுக்கு) இரண்டிற்கும் நடுவே முகம் போன்ற அமைப்பிலே மிருகசீரிடமானது நடராஜக் கடவுளின் திருமுகம் போன்ற அமைப்பின் தோற்றத்திலும் இருக்கும். சற்றுக் கீழ்நோக்கினால் ஊன்றிய திருவடியும், அதனடியிலே முயலகன் அமைப்பு போன்ற ஒரு சித்திரமும் தெரியும். முயலகன் என்பது ஒரு ஒளிவீசும் நட்சத்திரங்களில் ஒன்றாகும். இதன் பெயர் (Rigel) 'ரைநகல்' எனப்படும். வானத்திலே அதிபிரம்மாண்டமாக விளங்கும் இந்நட்சத்திரத் தொகுதி முழுவதும் மேனாட்டிலே கிரேக்கபுராணங்களில் 'ஒரையன்' (Orion) என அழைக்கப்பட்டது. இந்துக்களால் அது ஆ-ருத்திர நட்சத்திரம் என அழைக்கப்பட்டது. உலகம் முழுவதையும் ஆட்டிப் படைக்கும் சக்திவாய்ந்த இந்த நட்சத்திரத்திற்கு இரண்டு பகுதி மக்களாலும் பொருத்தமான பெயரே அக்காலம் வழங்கப்பட்டதாக உள்ளது. மேனாட்டாரின் 'ஓரையன்' என்ற உருவத்திற்கும் இந்துக்களின் நடராஜ உருவத்திற்குமுள்ள ஒற்றுமை மிகவும் வியக்கத்தக்கது.[1] (அடுத்துள்ள பக்கத்திலே இரண்டு படங்களையும் காணலாம்.)*

இந்துக்கள் இந்த நட்சத்திரத்தின் தோற்றத்தினையும் செயல்களையும் நடராஜ தத்துவமாக்கி - தாண்டவ மூர்த்தமாகக் கொண்டு ஆடவல்லானாக உருவாக்கியதுடன்; ஏழு தாண்டவங்களாகப் பகுத்தனர். அத்துடன் உடம்பிலே ஆறு ஆதாரங்களாக வகுத்து - சிரசினை ஏழாவது ஸ்தான

1. சொக்கலிங்கம், ஆ., ஆலய உட்பொருள் விளக்கம் பக். 311-12; படம்—பக். 313.

* அந்த நூலிலே உள்ள படப்பிரதி இங்கு இணைக்கப்பட்டுள்ளது.



1) தாண்டவ மூர்த்தி



2) இடக்கால் தூக்கிய அணு ஆண் அணு

3) ஆருத்ரதாண்டவ நக்ஷத்திரம் (ஓரையன்)



4) வலக்கால் தூக்கிய அணு பெண் அணு



மான 'சகஸ்ராரம்' அல்லது 'பிரம்மத்தானம்' எனவும் விளக்கி அண்டத்திலும் பிண்டத்திலும் உள்ள இறைமை அமைப்பினை விளக்கி வைத்தனர். இந்த சக்திகள் ஒன்றும் கண்கட்குப் புலப்படுவதில்லை. மின்சாரத்தைப் போல, அவற்றின் இயக்கங்களைக் கொண்டே அவற்றினது இருப்பினை அறிய முடியும் இந்த நட்சத்திரங்களைப் பூலோக அணுக்கள் எனவும் 'குண்டலினி' எனப்படும் சக்தியினால் இந்த ஏழினையும் ஒருமித்த வட்டமாக்கி அதனைத் திரிகை மூடிபோல அந்த வட்டமான அமைப்பு சுழன்று கொண்டிருப்பதாக விஞ்ஞான அறிவியலும் கூறுகின்றது. அந்த ஏழுஅணுக்களின் கூட்டமே 'குண்டலினி யாலான உடம்பு எனப்படும். முன்னர் குறிப்பிட்ட ஜீவசக்தி என்ற அமைப்பும் மூன்று அல்லது ஐந்து அணுக்களை ஒன்றாக்கி திரிகை அமைப்பிலே சுழன்றவாறு ஓயாது ஆடிக்கொண்டிருக்கின்றது. இதுவே பிரபஞ்ச இயக்கத்தின் ஓயாத ஆட்டமாகும் என்பது விஞ்ஞானக் கணிப்பாகும். அந்த ஆட்டத்தினை நடராஜ வடிவத்தின் ஐந்தொழில் அமைப்பாகக் கொண்டு உலக உற்பத்திக் கிரமத்திலே ஆனந்த தாண்டவ மூர்த்தமாக்கியது மெய்ஞானம். மேற்கூறப்பட்ட திரிகை போன்ற அமைப்பின் வடிவத்தைக் கொண்டதே குண்டலினி சக்தியினதும் ஜீவசக்தியினதும் இணைப்பாக விளங்கும் சிவலிங்க வடிவம் என்பதும் இவற்றிலிருந்து புலப்படும். சைவ சித்தாந்த தத்துவம் தன் நுண்ணுணர்வாலும் அகக்காட்சியிலே உதித்த ஞானக் காட்சியினாலும் இந்த உண்மைகளை அறிந்து கொண்டு சிவலிங்கத் திருமேனியை அருவுருவத் திருமேனியாகவும், நடராஜ வடிவத்தினை தாண்டவ மூர்த்தமாகவும் தத்துவார்த்தமாக உருவாக்கிக் கொண்ட சிறப்பு வியத்தகு விடயமாகும். இவ்வாறு இன்றைய விஞ்ஞான விளக்கங்களை சூட்சுமமாக அன்றே தத்துவஞானத்திற்குள் அடக்கி விளக்கிய பெருமையுடையவர்களாகவும் வானியல் அறிஞராகவும் இந்திய

தத்துவஞானிகள் விளங்கினர் என்பதற்கு இவ்விரு மூர்த்தங்களும் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

சித்தாந்தம் மட்டுமன்றிப் பொதுவாக இந்து தத்துவ ஞானமானது இயற்கையின் ரகசியத்தை 'சிவம்' என்றும், 'சக்தி' என்றும் உருவகப்படுத்தி அவற்றினை ஆக்கத்திற்கும் அருளுக்கும் உரியனவாகும் பொருட்டு; வாழ்க்கையிலே வழிபாட்டிற்குரிய கருவிகளாகக் காட்டியது. அதன் பயங்கர எதிர்விளைவுகளை மறைமுகமாக ஆணவம், அகங்காரம் என்ற ஆதிக்க சக்திகளாக்கி, அசுர சக்திகளின் விளக்கமாக்கி இயற்கையின் இறைமையை மீறுவோர் படும் துன்பங்களை இதிகாச புராணக் கதை வடிவிலே உருவகப் படுத்தினர். அதனால் ஆதியில் 'பக்தி' என்பதனைப், பயத்தினடிப்படையாக வளர்க்கப்பட்ட ஒரு விடயமாகவும் கருத வேண்டியநிலை இருந்து வந்தது. என் இந்த பயம்என்பதனைத்தான் இன்று விஞ்ஞானம் 'அணுகுண்டு' வடிவிலே வெளிச்சம் போட்டுக் காட்டியுள்ளது. எனவே அழிவிற்குரியவற்றைத் தவிர்த்து ஆக்கத்திற்குரியவற்றை விளக்கியது மெய்ஞானம், பக்தியினால் எதனையும் வசப்படுத்தலாம் என்பதனை ஆலய, உருவவழிபாட்டிலே விளக்கியது சித்தாந்தம் எனலாம். விஞ்ஞானிகள் அத்தகைய இயற்கை சக்திகளின் வலிமையினைப் பொருளாதாரத் திற்குரிய தாக்கினர் - தத்துவங்கள் அவற்றினை அருளின் ஆதாரமாகக் காட்டின. வழிபாட்டின் உயர்வினைவிட வாழ்க்கையின்பங்களின் உயர்வினைப் பெரிதாக மக்கள் மதித்தனர். விஞ்ஞானம் இரகசியங்களை வெளிச்சம் போட்டுக் காட்டியதன் பயன் இதுவாயிற்று. பொருளாதார அடிப்படையிலே பெரும் பயன்பாட்டிற்குரியதான விஞ்ஞான அறிவானது உலகவல்லரசுகளின் பேராசைகளின் காரணமாக அழிவுப்பாதைக்கும் வழிவகுப்பதாக அமைந்தது. 'ஆவதும் அழிவதும் அறிவினால் ஆகும்' என்பதனைத்தான் 'விஞ்ஞான



ரகசியங்கள் வெளிப்படுத்துவன என்று மக்கள் தவறாகவும் புரிந்து கொள்ள முற்பட்டனர். ஆனால் அன்றைய மெய்ஞானத்தில் 'சிவம், சக்தி' என்ற பிரபஞ்ச இயக்கத்தின் பெரும் ரகசியங்கள் 'மறை' எனப்பட்டு மகத்துவமானதாகப் பாதுகாக்கப்பட்டதுடன் அச்சக்திகளை மனித பண்பாட்டுத் துறையுடன் தொடர்புபடுத்தி ஆணாக்கி, பெண்ணாக்கி ஆக்கத்திற்கும் அருளுக்கும் உரியனவாகும் பொருட்டு வழிபாட்டிற்குரிய சாதனங்களாக்கியது மெய்ஞானத்தின் அன்றைய பணியாக இருநததை எளிதிலே மறந்துவிட முடியாது. இவற்றிலே சித்தாந்தத்தின் பயன்பாடு குறிப்பிடத்தக்க செல்வாக்கினை பெற்றுள்ளது என்றால் மிகையாகாது எவற்றிலுமே பயன்பாட்டைப் பொறுத்தளவிலே பாதை மாறலாம் எனவும் பாதை மாறினால் பயணமும் மாறலாம் என்பதனை இந்த விஞ்ஞான மெய்ஞான அறிவியல் வெளிப்பாட்டிலிருந்து புரிந்து கொள்ள முடியும்.

தாண்டவமூர்த்தியாகிய நடராஜ வழிபாடும் தட்சணாமூர்த்தி வழிபாடு போன்று தென்னாட்டுச் சிவாலயங்களிலேயே மிகப் மிகப் பிரபல்யமடைந்து காணப் படுகின்றது. ஆதிரை வழிபாடும் பண்டைச் சங்கத் தமிழ் இலக்கியங்களிலே பெரிதும் போற்றப்பட்டுள்ளதனால் பாரத நாடு முழுமைக்கும் பொது வழிபாடாக விளங்கும் சிவலிங்க வழிபாடானது நடராஜ மூர்த்தமாகவும் பல்வேறு மூர்த்தங்களிலும் மகிமையும் பெருமையும் பொருந்தியதாக தென்னாட்டிற்கே சிறப்பு வழிபாட்டு முறையாகப் பின்பற்றப்பட்டு வந்துள்ளன. இப்பண்பினை 'தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன்' என மணிவாசகர் சிறப்பித்தருளியுள்ளமையினையும் இவ்விடத்தில் நினைவு கூரலாம்.

தடத்த வடிவினரான மகேஸ்வர மூர்த்தியின் உருவத் திருமேனிகளில் இருபத்தைந்து மூர்த்தி பேதங்கள் சிறப்புப் பெற்றவையாகும். சபாபதி முதல் லிங்கோற்பவர் வரை அவை இடம் பெறும், போகியாய் இருந்து உயிர்கட்குப் போகத்தை ஊட்டுபவர் யோகியாய் இருந்து முத்தியினையும், வேகியாய் இருந்து வினைகெடுத்தலையும் செய்தருளுகின்றார். போகி எனப்படுவது உமா மகேஸ்வர மூர்த்தம், யோகி எனப்படுவது தட்சணா மூர்த்தி வடிவமும், வேகியாய் இருப்பது காமாரி மூர்த்தம் எனவும் படும்.[1] உருவம் என்ற தூல நிலைக்கும் அருவம் என்ற சூக்கும நிலையுண்டு என விளக்குவதும் சைவ சித்தாந்தத்திலே சத்காரிய வாதத்தின் ஒரு நோக்கமாகும் உருவத் திருமேனி இருந்தால் சூக்குமமான அருவத் திருமேனியும் இருக்கும் இந்த இரண்டிற்குமிடையிலே அருவுருவத் திருமேனி சித்திப்பதாகச் சித்தாந்தம் கூறுகின்றது[2]. உருவத் திருமேனிகளில் முக்கியமான சிவமூர்த்தங்கள் சில சித்தாந்த வழக்கிலே மேலே எடுத்துக் காட்டப்பட்டன. வேறு சிலவற்றையும் இறைவனுக்குரிய பண்புகளாக சித்தாந்தம் கூறியிருப்பதனை அடுத்து சுருக்கமாக நோக்கலாம்.

**அத்துவாவடிவங்கள் :**

முதல்வனுக்குச் சித்தாந்தம் தத்துவ நிலையில் அருவமான நிலையிலே பல வடிவங்களைக் கற்பித்துள்ளது. இவை சித்தாந்தத்திலே இறைவன் பிரபஞ்ச இயக்கத்தை நிர்வகிக்கவும் உயிர்களின் மீது தன் அருளைச் செலுத்துவதற்காகவும் பிரபஞ்ச நிலைக்கு மேலுள்ள தத்துவ

---

1. சித்தியார், பதி இலக்கணம், 1-2-70.
2. மே கு நூ. பக். 140.



உலகங்களில் ஈஸ்வரனால் அசுத்தாத்துவாவின் மேற்கோள் எப்படும் வடிவங்களாக கூறப்பட்டுள்ளன. எனவே அத்துவா வடிவங்கள் எனப்பட்டன. இவை ஆறு எனப்படும். இவ்வடிவங்களில் பஞ்சப்பிரம மந்திர வடிவம் மிக முக்கியமானது. அவையாவன ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்பனவாகும். இவற்றிலே தற்புருடமாவது தேவர்களதும், மானிடர்களதும் சரீரங்களை அதிட்டித்தல், அகோரமாவது சாந்தமாய் கோரமற்றதாயிருத்தல், வாமதேவமாவது - நான்கு புருடார்த்தங்கள் எனப்படும் அறங்களை வளர்த்தல். அவற்றை விளக்குதல், சத்யோ ஜாதமாவது உடம்பினை உயிர்கட்குத் தோற்றுவித்தல் என்பதனால், இவை ஐந்தும் போகசிவனின் திருமுகங்கள் என பௌஷ்கராகமம் பதி படலமும், மிருகேந்திராகமம் பதிலட்சண படலமும் விளக்கியுள்ளன.[1] ஆதலால் தடத்த நிலையிலுள்ள உருவத் திருமேனிகட்கும் சொரூபநிலையிலுள்ள சிவத்திற்கும் இடைப்பட்ட ஒரு நிலையினை இந்த அத்துவவடிவங்கள் நிறுவுகின்றன. அதே போன்று சித்தாந்தத்தின் அத்துவிதக் கொள்கையினையும் தடத்த - சொருப நிலைகளில் வைத்துப் பிரதிபலிப்பதனையும் ஓரளவு உணரமுடியும்.

**உலகுடன் அத்துவிதமான நிலை :**

சொருபநிலையிருக்கும் சிவம் உலகுடனும், உயிர்களுடனும் பிரிவின்றி வியாபகத் தன்மையினாலே தடத்த நிலையில் 'பதி' எனப்பட்டு அவற்றுடன் ஒன்றாயும் வேறாயும் நிற்கின்ற தன்மையன் ஆகின்றான். பிரபஞ்ச தத்துவத்திலே முதல்வன் 'பதி, பசு, பாசம் என்னும் முப்பொருட்களில்: பதிக்கு வியாபகத் தன்மையால் பசு, பாசங்களுடன் கலந்து அதுஅதுவாய் நிற்கும் நிலையும்; பொ

---

1. சித்தியார், பக். 145.

ருட் தன்மையால் அவற்றினின்றும் வேறாய் நிற்கும் நிலையும் என இரு நிலைகள் உண்டு என சித்தாந்தம் விளக்குகின்றது.[1] இவ்விளக்கத்திலிருந்து முதலில் கூறப்பட்ட நிலை தடத்தம் என்பதும் அடுத்துக் கூறப்பட்டது சொருபம் என்பதும் பெறப்பட்டது. தடத்த நிலையிலே ஐந்தொழில்லாற்றுதற்கு சங்கார காரணனான முதல்வன் சக்தியுடன் சேர்ந்து பதிப்பொருளாகி உலகினை இயக்குவிப்பன். 'உலகெலாமாகி வேறாயுடனுமாகி ஒளியாய் ஓங்கி தலைவனாய் இவற்றின் தன்மை தனக் செய்தலின்றித் தானே நிலவு சீர் அமலனாகி நின்றனன் எங்கும்'[2] என்றிவ்வாறு முதல்வன் உலகுடன் அத்துவிதமாகவும் அதனின்றும் வேறுபட்டும் நிற்கும் இரு தன்மைகள் இங்கு கூறப்பட்டன.

**உயிர்களுடன் அத்துவிதமாயுள்ள நிலை :**

ஆன்மா உடலுடன் சம்பந்தப்படுகின்றவிடத்து உயிர் அல்லது 'பசு' என்ற தன்மையினை அடைகின்றது. ஆன்மாவிலே அந்தர்யாமியாக 'அறிவு' என்னும் குணத்தினால் அத்துவிதமாயுமுள்ள முதல்வன் ஆன்மாக்கள் பந்தங்களினால் கட்டப்பட்டு பிறப்பிற்கு உட்பட்டு பசுத்துவநிலையினை அடையும்போது தன்னை மறைத்துக் கொண்டு நிற்பதால் 'அந்தர்யாமியாக' உள்ளவன் எனப்படும். சன்ம பந்தங்கட்குட்பட்ட நிலையிலே சார்ந்ததன் வண்ணமான ஆன்மா சதசத்து என்ற பெயர் பெறுகின்றது. அது ஆணவத்துடன் அநாதியாய் அத்துவிதக் கலப்பிலே இருப்பதால் ஆன்மாவின் அறிவென்ற இயல்பான குணம் மலத்தால் மறைக்கப்படலாயிற்று. அறிவினை ஆணவ மலம் அணுத்தன்மையாக்குதலால் உயிர்களின் மெய்ஞ்ஞான அறிவு

---

1. சர்வஞானோத்தராகமம், பக். 6.
2. சித்தியார், பதி இலக்கணம், 1-2-91.



என்ற முதல்வனின் இருப்பு உயிர்களில் விளங்கித் தெரிய முடியாது போனது. ஆன்மாக்கள் முதல்வனை அறிந்த ஞானவிளக்கமடையும் போது பேரறிவான ஈஸ்வரன் ஆன்மாவிலே கலந்து நின்று ஆன்மாக்கட்குப் பேரானந்தத்தை வழங்குவன். இந்தப்பேரறிவும் ஆன்மாக்கட்கு முதல்வனாலேயே அறிவிக்கப்படுதலால் 'அறிவிக்க அறிவது ஆன்மா' எனச் சித்தாந்த நூல்கள் குறிப்பிட்டுள்ளன. ஆகையினால் மல நீக்கம் பெற்ற ஆன்மாவிற்கு முதல்வன் ஞான குருவாகி வந்து மெய்ஞான முணர்த்துவன் என்பது 'தவத்தினிற் தம் முதல் குருவுமாய் வந்து' என்ற சிவஞான போத வாக்கினால் உணரலாம். இவ்வாறு அறிவிலே ஆன்மா முதல்வனுடன் ஒருமைத் தன்மையடைதலே சித்தாந்தத்தில் அத்துவிதக்கலப்பு என விளக்கப்பட்டுள்ளது.

**அறியுநெறியும் சித்தாந்தமும்**

வேதநூல்கள் அறிவினை பரவித்தை-அபரவித்தை அல்லது பரஞானம்-அபரஞானம் என இரண்டு வகையாப் பேசுகின்றன. ஒன்று பேரறிவு, ஏனையது சிற்றறிவு என இவற்றினைக் கருதலாம். அறிவு நிலை வெளிப்பாட்டினை சித்தாந்தம் மூன்று நிலைகளிலே வைத்து ஆராய்கின்றது. அவையாவன பசுஞானம், பாசஞானம், பதிஞானம் எனப்படும். பசுஞானம் என்பது உயிர் தன்னையும் தன்நிலை உணர்வு பற்றிய தத்துவக் கூட்டங்களையும் அறிவது; தான் தங்கியுள்ள இந்த உலகினையும் அதன் இயக்கங்களையும், இயற்கையுண்மை பற்றி அறிகின்ற அறிவும் பாசஞானத்தின் பாற்படும் ஆயின் இவ்வாறு அறிகின்ற சாத்திர அறிவினால் உலகவாழ்வின் இன்பங்களையும், பொருள் வீட்டையும், விஞ்ஞான தொழில் நுட்பங்களையும் மட்டுமே கற்று அக்கல்வியறிவை ஊதியத்திற்காகவும் சீவனோபாயத்திற்காகவும் வளர்த்துக் கொள்ளலாமே தவிர இத்தகைய அறிவு உயிர்

கட்கு முதல்வனை அறிவிக்கமாட்டாவாம் என்பது தத்துவ ஞானிகள் கணிப்பாகும். விஞ்ஞானம் மாறுகின்ற அறிவு, மயக்க அறிவு, எனலாம். இவை பலவகைப்படும். இதனை சித்தாந்தம் மாயை எனப்படும் சடசப்பர்தமான அறிவு எனவும் - சிற்றறிவு எனவும் கூறும், உலகின் வியத்தகு ஆற்றல்களை வெளிப்படுத்தி உலகியல் முன்னேற்றங்களை வளர்த்துக் கொடுக்கும் இந்த சடசப்பந்தமான ஆற்றலினை விஞ்ஞான வளர்ச்சியிலே கண்டு திகைக்கிறோம், இதனால் பசு பாசஞானம் - சிற்றறிவு எனப்பட்டது. அத்துடன் விஞ்ஞானம் என்னும் புறப்பொருள் அறிவையும் வளர்ப்பது இத்தகைய அறிவியல் ஆற்றலாகும்.

இத்தகைய அறிவிற்கெல்லாம் ஆதாரமாயுள்ள 'பேரறிவினை' அறிவதே மெய்ஞ்ஞானம் அல்லது பதிஞானம் எனப்பட்டது. இந்த அறிவானது இயல்பாகவே அறியும் குணமுடைய ஆன்மா மெய்ஞ்ஞானச் சார்புற்றபோது முதல்வன் அவற்றினை 'பக்குவப்படுத்தி' அந்தர்யாமியாக உள்நின்று உணர்த்துமிடத்து உருவாவதாகும். 'பக்குவம்' அல்லது ஞானம் என்பது சாதாரண அறிவு வளர்ச்சியையோ அல்லது உடலின் வயதையும் வளர்ச்சியையும் பொறுத்ததோ அல்ல. அது ஆன்மாவின் வயது முதிர்வையும் அறிவு முதிர்ச்சியையும் பொறுத்ததாகும். சங்கரரையும், சம்பந்தரையும், மெய்கண்டாரையும், மெய்ஞ்ஞானிகள் என்று கருதுவது அவரவர்களின் உடலின் வயதைக் கொண்டல்ல - அறிவின் வயதாற்றலைக் கொண்டுதான் இவ்வாறு மதிப்பிட்டோம். ஆதலால்தான் கல்வியறிவிலே பெரும் புலமை பெற்றவர்களை மேதைகள், அறிஞர்கள், நிபுணர்கள், விஞ்ஞானிகள் எனவும் ஞானநிலை அடைந்த பக்குவான்மாக்களை மெய்ஞ்ஞானிகள் எனவும் உலகம் போற்றுகின்றது. பத்தாம் வகுப்பிற்குத் தகுதியான அறிவுநிலை பெற்ற மாணவன் ஒருவனை எவ்வாறு மருத்துவமோ அல்லது அதற்கு மேற்பட்ட துறையைச் சார்ந்த கல்விக்கோ அரசாங்கம் அனும



திப்பதில்லையோ, அவ்வாறே உலகியல் அறிவினிலே மூழ்கி மயக்கமுற்றிருக்கும் சிற்றறிவுடைய உயிர்களையும் உடனடியாக 'ஞானம்' என்ற பேரறிவின் ஜோதியில் சேர்த்து வளர்ப்பது கடினமானதாகும். சாத்திர நூல்பயிற்சியினால் பசுஞானத்தைப் பெற்றுக் கொண்ட ஆன்மா தன்னைச் சிவஞானத்திற்குத் தகுதியானவராக ஆக்கும் போது பதியானவர் குருவாக வந்து 'தீட்சை' என்ற பரீட்சையினால் சுத்திகரித்து பதிஞானத்தை உபதேசிப்பர் என்பது சித்தாந்த உபாயமாகும். 'பாத்திரமறிந்து பிச்சையிடுக' என்பது தானத்திற்கு மட்டுமல்ல அறிவுத்தானத்திற்கும் பொருந்துவதாகும். எனவேதான் ஆன்மஞானம் உயிர்களின் வயதைப் பொறுத்தல்ல - அவர்களின் அறிவுத்தரத்தினை பக்குவத்தினைப் பொறுத்து சிறியவர்களாயினும் சரி, இளைஞர்களாயினும் சரி, முதியவர்களாயினும் சரி - ஜாதி பேதமில்லாது எவருக்கும் குருவருளால் கிடைக்கப் பெறும். சித்தாந்த ஞானாசிரியர்களான உமாபதி சிவாச்சாரியார் மறைஞான சம்பந்தரது சீடரானதும், அருணந்தி சிவாச்சாரியார் மெய்கண்டார் சீடரானதும் இவற்றிற்கு நல்ல உதாரணமெனலாம். பதியே இவ்வாறு பக்குவான்மாக்கட்கு ஞானத்தை உபகரிப்பதனை 'செறி தரும் சிவனருளே அறிந்திடும் சிவனைக் காணு-அறிதரும் சிவனே எல்லாமறிந்து அறிவித்து நிற்பன'[1] என்பது சித்தியாரில் விளக்கப்பட்டுள்ள உண்மையாகும். ஆன்மாக்களிற்கு அறிவு இறைவனால் உபகரிக்கப்படுவதாயின் அனைவர்க்கும் அறிவு ஏன் ஒரு படித்தரமாயிருப்பதில்லை என்ற வினா எழுவது இயற்கைதான். 'வினை நிலம் அவரவர் விதைப்பு என்ற செயலுக்குத் தக்க பலன் தருவதுபோல, ஆதித்தன் பக்குவமான தாமரைகளை மலர் வித்தல்போல, முதல்வனும் அவரவர் கன்ம

---

1 சித்தியார், பதி உயிர்கட்கு உபகரித்தல், 5.1.231

பலன்கட்கேற்ப ஏற்றத் தாழ்வான அறிவினையும் பக்குவப் பட்ட ஆன்மாக்கட்கு வியாபகமான அறிவினையும் கொடுத்திடுவான்'[1] என்பது சித்தாந்த விளக்கமாகும். இவற்றிலிருந்து அவரவர்களது கர்மமும், தர்மமும் தான் மனிதர்களை ஆட்சி செய்கின்றதென்பதால் இறைவனானவன் கருணைகொண்டு அவ்வான்மாக்களை பக்குவமுற்ற வேளையில் அருளாட்சிப்படுத்துகின்றான் என உணர்த்தியது. ஆதலால் பசுஞானம், பாசஞானத்தால் ஆன்மா தன்னையும் உலகினையும் அறியுமேதவிர பதிப்பொருளை அறியமாட்டா என்பது 'பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரியபரன்'- என்ற சித்தாந்த சொற்றொடரால் அறிவிக்கப்பட்டது.[2]

விஞ்ஞானம் என்ற அறிவினை மனிதன் புறக்கருவிகளைப் பயன்படுத்தி அறிவிப்பதால் உலகமும் அதனை அறிந்து கொள்ள வாய்ப்புண்டாகின்றது. பதிஞானம் என்ற மெய்ஞானத்தையும் மனிதனானவன் பொறி, புலன்கள் என்ற அகக்கருவிகளைப் பரிசோதனை செய்வதன்மூலம் யோகக்காட்சியிலும் ஞானக்காட்சியாலும் அந்தமெய்ப்பொருளைத் தரிசிக்க முடியும் என்பதே மெய்ஞானம் காட்டுகின்ற உண்மையாகும் 'பரஞானத்தால் பரத்தைத் தரிசித்திருப்பார் பரமே. பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்'[3] என்பதன் பொருள் இதுவேயாகும். அறிவுநெறி பற்றிய சித்தாந்தக் கருத்தோட்டங்களை சித்தியாரிலே ஆறும் சூத்திரம் 'பசு இலக்கணம்' பற்றிக் கூறப்படும்

1. வட. மொ. நா. சித்தாந்தக் கருத்துக்கள், பகுதி. II, பக். 25 - 26
2. சித்தியார், உபாய நிட்டை, 9. 1. 292.
3. சித்தியார், பரஞானத்தியல்பு 11.1.311



பகுதியிலே மேலும் அறிந்து கொள்ளலாம்.[1] ஈற்றிலே சிவம் தன்னையறியுமாறு அறிந்த ஆன்மாவுடன் அத்துவிதமாய் நிற்கும் பெற்றி வாய்ந்ததாகி பேரானந்தம் அனுபவிக்கும். ஆன்ம அறிவின்கண் சிவத்தின் அறிவு வியாபகமாய் நிற்றால் ஒன்று ஒன்றன் வயப்பட்டு நிற்கும்நிலை அத்துவிதமாகும். 'சண்டு இவ்வான்மாக்கள் முதல்வன் தானேயாய் நிற்கும்'[2] என்ற சூத்திரத்தால் இறைவனுக்கும் ஆன்மாக்கட்குமுள்ள நெருக்கம் சுட்டப்பட்டது. அத்துவிதம் என்ற சொல் ஆன்மாக்கட்கும் இறைவனுக்குமுள்ள நெருக்கத்தைச் சுட்டுதலால் இரண்டு பொருட்களின் அன்னியமின் 'அத்துவிதம்' என்பது சித்தாந்தத்தின் பொருளாக உள்ளது. 'முதல்வனேயாகும்' எனச் சுட்டாது 'முதல்வன் தானேயாகும்' என்ற சொற்றொடர் வாயிலாக சித்தாந்தம் அத்துவிதக் கலப்பினை 'ஏகம்' என்று சுட்டாது 'அத்துவிதம் என்ற சொல்லினால் சுட்டுவது அவதானக்கப்படவேண்டிய அம்சமாகும். 'அத்துவிதம்' என்ற சொல்லை ஏகம் என்னில் 'ஏகம்' எனச்சுட்டுவதுண்மையின் அத்துவிதம் என்ற சொல்லை அன்னிய நாஸ்தியை உணர்த்துமாயிட்டு' என சிவஞானமுனிவர் விளக்கியுள்ளமையும் காண்க.[3]

### அறநியதியும்சித்தாந்தமும் -

சைவசித்தாந்தம் பதிஞானத்தினால் அடைகின்ற தீட்சை முறைகளிலிருந்தே ஆன்மாவுக்கு முக்தி அல்லது விடுதலை கிடைக்க முடியும் என்பதனை அழுத்தமாக வற்புறுத்திருக்கின்றது. பாச ஞானம், பசு ஞானம் என பேசப்படும் விஞ்ஞான அறிவியலினாலோ வெறும் சாஸ்திர ஞானத்தாலோ ஒருவன் ஆத்ம விடுதலை அடைய முடி

1. சித்தியார், பசு இலக்கணம், 6.?.244-49
2. சிவஞானபோதம், சிற்றுரை, பக். 33
3. சிவஞானமாபாடியம், பக். 113

யுமென்ருல்; உலகிலே அறநியம ஒழுக்கங்கட்கு என்ன மதிப்பிருக்க முடியும் என்ற கேள்வி எழுவது இயற்கையா னதே; அறிவிஞல் எல்லாம் ஆகுமெனில் உலகிலே அறிவு பெற்ற சகல மேதைகட்கும் விஞ்ஞானிகட்கும் சுலபமாக வே ஆன்ம விடுதலை கிடைக்க வேண்டுமல்லவா! அதனுல் தான் சித்தாந்தம் ஞான குருவையும் தீட்சா விதிகளையும் ஒழுக்க நியதிப்படி அறிமுகப்படுத்தியுள்ளது. ஒழுக்க விதிக்குரிய நியமங்கள் பலவற்றையும், தீட்சை முறைகளை யும் ரௌரவம், சுவாயம் புவம் மிருகேந்திரம், பௌஷ்க ரம் முதலிய சிவாகமங்களில் இருந்து சித்தாந்த நூல்கள் சுருக்கமாக அறிமுகப்படுத்தியுள்ளன. தீட்சாமுறை ஆன் மாக்களை மலபந்தங்களிலிருந்து விடுதலையடைவிக்கின்றது என்பது சுவாயம்புவாகமக் கருத்தாகும். ஒழுக்கநியமங் களைப் பெரிதும் போற்ருவிட்டாலும் கூட எந்த மார்கத் திலும் அறிவுத்துறையில் முன்னேற்றமடைந்த ஒருவனுல் பொருளீட்டமுடியும். ஆனுல் பொருளை அறவழியிலே ஈட்ட லும் ஈட்டியபொருளை அறவழியிலே செலவிடலும் அற நியமங்கட்குட்பட்ட செயலாகும். இந்த நடவடிக்கைக ளில் இருந்து ஒருவனது கர்மம் தருமமா-அதருமமா என் பது சதாரணமாகத் தீர்மானிக்கப்படுவதுண்டு. இதனைச் சித்தாந்தக் கர்மக்கோட்பாடு நியதிக் கொள்கைவழி வ்ப ரித்துள்ளது. (அது இங்கு விபரிக்கப்படவில்லை.) ஆனுல் பொருளீட்டல் வேறு - அருளீட்டல்வேருகும். அருளீட்ட லிற்கு ஒருவனுக்குத் திரிகரணசுத்தியும் நியம; நிட்டைகள் உட்பட நால்வகை மார்க்கங்களில் ஒன்றையேனும் அவன் அனுசரித்து நடக்கவேண்டும் என சாஸ்திரங்கள் எதிர் பார்க்கின்றன. சித்தாந்தத்தின் 'சாதனையியல்' இவற்றின் பெறுபேறுகளையே வற்புறுத்திவந்துள்ளது. ஒருவனுக்கு மனம், வாக்கு, காயம் என்ற மூன்றினுலும் திரிகரண சுத்தி உண்டாயின் காரியசித்தி நிச்சயம் என்பது வெளிப்



படை, அதனுல் சித்தாந்தநூல்கள் ஒழுக்கத்தை வெளிப் படையாக வற்புறுத்த விரும்பாது கர்மக்கோட்பாட்டின் வழியாக எடுத்தியம்பியுள்ளன. ஒழுக்கக்கொள்கையின் வெளிப்பாடே கர்மக்கோட்பாடு எனவும் கூறலாம். ஆகவே ஒருவருக்கு காரிய சித்தியும், ஆத்மவிடுதலையும் அவசியம் என விரும்பினுல் அருளுலகினையடைதற்குரிய அறநியமங் களைப் பின்பற்றியொழுகுதல் அவசியமாகும். சரியை, கிரி யை மட்டுமன்றி யோகமும் ஞானமும் கூட மெய்ஞானத் தை அடைவிக்கும் பாதைகளாக சைவசித்தாந்தம் காட்டு கின்றது. ஆரோக்கிய வாழ்விற்கும் நிலைத்தகாரிய சித்திக் கும் இவ்வுலகிலேயே இவை உதவக் கூடியவையாகும். இத் தகைய அற நியமங்களைப் பின்பற்றி சித்தியடைந்தோருக்கு முதல்வன் ஞான குருவாகி வந்து தீட்சையளித்து விடுதலை யளிப்பான் என்பதால் இறைவனின் உருவவழிபாட்டிலே தட்சணுமூர்த்திக் கோட்பாடும், சிவகுருநாதன் என்ற முருக மூர்த்தியின் மூர்த்தமும் ஆலயவழிபாட்டு மரபிலே பிரசித்தம் அடைவதாயிற்று.

**சிவவழிபாட்டு மரபும் சித்தர்களும்:**

சைவசமயவரலாற்றிலே சிவவழிபாட்டு வளர்ச்சியிலே தடத்தநிருமேனி கொள்ளும் சிவனுனவன்' சித்தராக' வந்து பலதிருவிளையாடல்கள் புரிந்ததாகவும் ஒரு மரபு வளர்ச்சி யடைந்து காணப்படுகின்றது. சைவசித்தாந்த சாத்திரங் கள் சித்தர்களைவிட சீவன் முத்தர்களைப்பற்றியும் சிவனடி யார்களைப்பற்றியுமே அதிகமாகப் பேசுகின்றன. சிவஞானி யர்கட்கு வினைப்பயன் நுகர்ச்சியும், வினை விளைவும் மலக்குற்றமும் நீங்கினமையால் பிறவியற்றவர்கள் என்ப தும்[1] இத்தகையோர் சீவன்முத்தர்கள் ஆதலால் அவர்

1) சித்தியார், சிவஞானிக்கு வினைப்பயன், நுகர்ச்சி, 10ம் சூத்திரம் பார்க்க

கட்கு உடம்பழியவும் பரமுத்தி கிடைப்பதும், அவ்வாறு கிடைக்கும் பரமுத்தி அத்துவிதப் பேரின்பவியல்பும் சித்தாந்த நூல்களில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.[1] இறைவனைப்போல யோகசித்தர்கள் தாம்பெற்ற அட்டமாசித்திகளால் விரும்பிய வடிவினை எடுக்க வல்லவராயினும் யோகசித்தர் தாம் விரும்பிய வடிவத்தை சிவனருளினாலேயே மேற்கொள்கின்றனர் எனவும் சித்தியார் குறிப்பிடும்.[2] எனவே சைவ சமயத்தில் சித்தர்கள் பலரது அருட் செயல்கள் போற்றப்பட்டுள்ளது வியப்பல்ல. திருமூலரும், பட்டினத்தாரும், இன்னும் பலரும் பன்னிரு திருமுறை நூல்களில் சிவனடியார்களாகப் போற்றப்படும் பெற்றிவாய்ந்தவர்களாக உள்ளனர். அறுபத்திநான்கு திருவிளையாடல்களைச் செய்த சிவனார் அறுபத்திமூன்று நாயன்மார்களை ஆட்கொள்ளும் பொருட்டு எத்தனையோ அருள்வடிவங்களை எடுத்துவந்து அவ்வடியார்களை ஆட்கொண்டருளிய விளையாட்டினைப் பெரியபுராணமும் விவரித்துக்கூறும்' அவ்வாறு சிவனார் மேற்கொள்ளும் வடிவங்கள் அருள்வடிவங்களாகும். யோகசித்தர் வடிவங்களோ ஈசன் அருளினால் பெறப்படும் வடிவங்களாதலால் இரண்டிற்குமுள்ள வேறுபாட்டை இவற்றினால் உணரலாம் சிவஞானியர் அட்டமாசித்திகளில் வல்லவராயினும் அவர்கள் சித்துவிளையாட்டில் ஈடுபடுதலைவிட ஞானமார்க்கப் போதனைகட்கே அதிமுக்கியத்துவமளித்துள்ளனர். யோகநிலை கைவந்த சித்தர்களோ அட்டமாசித்தியின் பயனாக சகலவிதமாக உயர்காரியங்களையும் உலக சமுதாய நன்மைக்காக பல சமயங்களில் ஆற்றிக் கொடுத்தபேரருளாளராகக் காணப்படுகின்றனர். திருவிளையாடற் புராணமானது சிவனார் 'அட்டமாசித்தியுரைத்த படலம் ஒன்றிலே சகல சக்திகளையும் விளக்குவதுடன் சிவ

1. சித்தியார், பரஞானத்தியல்பு, 11ம் சூத்திரம். (சீவன் முத்தர்க்குப் பரமுத்தியாமாறு இயல்பு)
2. சித்தியார், பக். 118.1-9.



னது சித்து விளையாட்டுக்களையும் சித்தரித்துள்ளது. ஆயினும் இந்தத் திருவிளையாடல்கள் அனைத்தும் சிவாலயங்களில் திருமூர்த்தமாவதில்லை என்பதனையும் அறியலாம்.

சிவன் சித்தராக வந்து பலதிருவருட் செயல்கள் புரிந்த காரணத்தால் சித்தர் நெறிக்கும் சிவவழிபாட்டிற்குமுள்ள தொடர்பினை இந்த இடத்திலே சிறிது சுருக்கமாக எடுத்துரைப்பது சித்தாந்த கோட்பாட்டினை சிறந்த முறையில் அறிவதற்குரிய ஒரு விளக்கமாகவும் அமையும். 'சித்தத்தின் முடிவு சித்தாந்தம்' எனப்படுதலால் சித்தநெறிக்கும் சித்தாந்தத்திற்கும் ஏதாவது தொடர்பிருக்க முடியுமா எனச் சிந்தித்துப் பார்க்கலாம். 'மோட்ச காரிகை' என்ற சித்தாந்த நூலில் 'சித்தர்களது சக்தி சிவசாமியத்தை அடைந்திருத்தலால் தொழிற்படுவதில்லை, எனவும் சித்தனுடைய சக்திக்கு மேம்பட்ட சக்தியில்லாமையால் அதுமறுக்கப்படுவதில்லை' எனவும், சித்தரது சக்தி மலமறைப்பில்லாமையால் எக்காலத்தும் எவ்விடத்தும் எல்லாவற்றையும் அறியவும் செய்யவும் கூடியது எனவும் பாசங்களைச் தோல்வியடையச் செய்யும் ஞானக்கிலியை என்னும் பெயர் கொண்ட சக்தியானது சித்தர்கட்கு இருப்பதால் பாகக் கூட்டங்களால் உண்டான சம்சார விடளங்களிலே ஆசையினை சித்தர் அடைவதில்லை எனவும், ஈஸ்வரனது சக்தியால் வித்தியேஸ்வரரது சக்தி தொழிற்படுமாறு போல சித்தனுடைய சக்தி தொழிற்படுதலை அடைவதில்லை. ஏனெனில் அவர்கள் சிவசாமியத்தை அடைந்திருத்தலால் தொழிற்படும் சக்தி தேவையில்லை எனப்படுகின்றது. சிவசக்தியின் சன்னிதானத்தை சித்தனது சக்தி எப்பவும் தரிசித்துக் கொண்டிருப்பதால் சித்தனது சக்தி நாசமடைவதில்லை. ஆதலால் மலஅழுக்கினை முற்றாக நீக்கி பரமேஸ்வரன் சித்தாந்த ஞானத்தின் தோற்றத்தைச் செய்வதால் சிவனைப்போலிருக்கும் சித்தனுக்குள்ள தோற்றத்தை சமவாயசம் பந்தத்

தால் சிவசம்பந்தமாயுள்ள தனக்குச் சமமான ஞானக்கிரியாசக்திகளைச் சித்தரிடமும் தோற்றுவிக்கின்றார். அதனால் சித்தசக்தி நசிப்பல்லை. பசுசக்தியினின்றும் இச்சக்தி வேறுபட்டது என்பதும் மேற்குறிப்பிட்ட சித்தாந்த நூலிலிருந்து அறியக் கிடக்கின்றது.[1] ஆக சித்தனுக்குச் சிவனாலே சித்தசக்திகள் தோற்றுவிக்கப்படுவதால் சித்தர்கள் சிவமாவதில்லை - சிவத்தன்மையடைந்தவர்கள் என்பதும்- சிவன் சித்தனுகலாம் என்பதும் பெறப்படும் உண்மையாகும்.

'சிவனுக்குச் சித்தன் என்ற பெயருமுண்டு' என மதுரைச் தமிழ்ச் சங்க அகராதிகூறும்[2]. சித்தீஸ்வரம் எனப்படும் சிவன்கோயில் ஒன்று திருநறையூரில் அமைந்துள்ளது. இத்தலம் சம்பந்தரால் பாடல் பெற்ற சிறப்புடையது. அங்கு கோயில் கொண்டிருக்கும் சிவன் 'சித்தன்' என்றழைக்கப் படுவதனைத் தேவாரப் பதிகங்களிலிருந்து அறியலாம்.[3] சேலம் மாவட்டத்திலுள்ள கஞ்சமலை என்ற இடமானது சித்தர்கோயில் எனவும், அங்குள்ள ஈசன் 'சித்தேஸ்வரன்' எனவும் அழைக்கப்படும்' கடலுடன் கலந்த மழைத்துளி கடல்நீராவது போல சிவன் அருள் பெற்ற ஆன்மா சித்தனுக சிவனுல் ஆக்கப்படுகின்றது. சக்தியை வழிபடுவோர் சாக்தர், புத்தரை வழிபடுவோர், பௌத்தர்; கிறிஸ்துவை வழிபடுவோர் - கிறிஸ்துவர்; விஷ்ணுவை வழிபடுவோர் வைஷ்ணவர் சிவனை வழிபடு

1. கிருஷ்ணசாமி சாஸ்திரிகள், நா, (மொழி பெயர்ப்பு) சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம், தேவகோட்டை, 1927, மேட்சகாரிகை, பா 57-63
2. மதுரைச் தமிழ்ச்சங்க அகராதி, இ. மா. கோபால கிருஷ்ணக் கோன் பதிப்பு, பக். 907
3. சம்பந்தர திருமுறை. I, பா. 423.




வோரில் ஒரு பிரிவினர் சைவர், இன்னொர் பிரிவினர் சித்தர் என்று ஆகியிருக்கலாம் என்பர் அறிஞர். இரா.மாணிக்கவாசகம்.[1] தடத்தநிலை கொள்ளும் சிவனார் நடத்தும் திருவிளையாடல்களுள், அற்புதங்களுள் 'சித்தர்' ஞானப்பிரிவும் அடங்கும். சிவன் சித்தராவதும் சித்தர் சிவனார் போல் தம்மைப் பாவிப்பதும் கூட ஈசனாரின் திருவிளையாடல்களாகக் கொள்ளப்படும் பசுத்துவ நீக்சமும் சிவத்துவ விளக்கமும் என்றும் கொள்ளலாம். சித்தாந்ததிலே சொரு பசிவத்தினை இந்நிலை எந்நிலையிலும் பாதிப்பதில்லை.

சிவனின் பண்டைக்கால வடிவம் என்று ஆய்வாளரால் கருதப்படும் இலச்சினை ஒன்றிலே சிவன் விலங்குகள் சூழப் பத்மாசனத்திலே இருப்பதாகவும் அவரைப் பசுபதி எனவும் மகாயோகி எனவும் கருதும் மரபு புராதனகாலம் வளர்ச்சியடைந்திருநதமைக்கு இது ஒரு ஆதாரமாகும் நால்வகை மார்கங்களில் யோகமார்க்கமும் சித்தாந்தம் காட்டும்ஆன்மவளர்ச்சிப் படிகளில் ஒரு பயிற்சி நெறியாகும். மேலும் சித்தர் மரபிலேமூலமரபு, பாலமரபு, கைலைமரபு என மூன்று பிரிவுகள் காணப்படுகின்றன. இவற்றிலே கைலைமரபினைச் சேர்ந்த சித்தர்கள் சிலரைச் சித்தாந்த ஆசிரியர்களாக சாஸ்திரங்கள் போற்றும். அவர்களில் திருமூலர், பரம்சோதி முனிவர் என்போர் சிலராவார். ஆயினும் சித்தாந்தம் சித்தர்களின் இலக்கணவிரிவுகளைவிட அநாதி முத்தர்களின் தன்மைகட்கே சிறப்பிடம் அளிப்பதிலிருந்து அதியுயர்ந்த சொருப சிவத்தையடையும் பரமுத்திதரும் சிவஞானப்பேறே சித்தாந்த லட்சியம் என்பது புலப்படும். சித்தர்களது தோற்றமும் ஆதியில் ஒளியுடன் தொடர்பு

1. மாணிக்க வாசகம், இரா. நம் நாட்டுச் சித்தர்கள், பக். 44.

படுத்தப்படுகின்றது. உலகம் தோன்றுவதற்கு முன்னர் இருளே இருந்தது என்றும் ஒளியில்லை என்பதும், பின்னர் பரவெளியிலே அணுத்துகளும் அவற்றிலிருந்து வாயுவும் அக்கினியும், நீரும், பிருதுவியுமாக விரிந்து ஐம்பூதங்களின் தோற்றம் உண்டானது என்பதும் சிந்தனையாளர்களின் கருத்தாகும். இந்த ஐம்பூதங்களின் தோற்றத்திற்குப் பூரணஒளியே ஆதிகாரணம் என்பதால் பரவெளியும் அணுசக்தி ஒளியும் சேர்ந்து இயற்கைத் தோற்றங்களாக உருவடைந்தன எனப்படுகின்றது.

பூரண ஒளி என்பதே முதல் சித்தர் எனப்படுகின்றது. யோனிகளில் பிறக்காது உடல்களிலே புகுந்து உலவும் தன்மையுடையவர்கள் இடைச்சித்தர் எனப்படுவோர்; கருவிலே உருவாகி யோனிகளில் பிறந்து தவத்தினால் யோக சித்தி பெற்றவர்கள் கடைச்சித்தர் எனவும் சித்தர் மரபானது வகுக்கப்பட்டுள்ளது. இந்த சித்தர் மரபிலே மூலமரபினைச் சேர்ந்த முதல் சித்தர் முருகக் கடவுள் எனப்படும் ஒரு கருத்தும் சில ஆசிரியர்களிடையே நிலவுகின்றது. குமரக் கடவுளின் பிறப்பு சிவன் எனப்படும் பூரணஜோதி வடிவிலிருந்து வெளிபட்ட ஆறுகதிர்களாகத் தோன்றிய ஜோதி சரவணப் பொய்கையில் உள்ள ஆறு தாமரைகளில் வளர்த்தது எனவும் அந்தஜோதி தோன்றியதினம் கார்த்திகை நட்சத்திரத்தில் ஆதலால் அவன் கார்த்திகேயன் எனப்பட்டான் என்பதுடன் அவனே மூலமரபில் தோன்றிய முதல்வன் எனவும் கருதப்படும் மரபு காணப்படுகின்றது.[1] சித்தாந்த சிவாகமப் பொருளைக் கேட்பதில் அதிவிருப்பமுடையவன் சிவசுப்பிரமணி

1) கேசவபிள்ளை, டாக்டர், P., சித்தர்காப்பியம், நெல்லை, 1982, பக். 55



யக் கடவுள் என்பதும் சிவமைந்தனான அவன் தந்தைக்கு குருவாக வந்த மரபும் ஆலய வழிபாட்டில் அதிவிசேஷம் வாய்ந்தவை. 'இரத்திரனத்திரயம் என்ற சித்தாந்த நூலின் நூல் மங்கலப் பகுதியிலே 'ஆகமசங்கிதைகள் அனைத்திற்கும் குருவான ஸ்ரீகண்ட நாதரையும் விக்கினங்களைப் போக்கும் விக்கினேஸ்வரரையும் எப்போதும் சித்தாந்த சாத்திரங்களைக் கேட்டு விசேட ஞானமடைந்த கார்த்திகேய சுப்பிரமணியரையும் இப்பிரகரணம் நிறைவேறும் பொருட்டு வணங்குகிறேன்' என்பது அதன் இறைவணக்கப்பாடலாகும்.

அசுத்த மாயையில் இருந்து புருடதத்துவம் தோன்றும் என்றும் சித்தத்திலிருந்து ஐம்பொறி, புலன்கள், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், தன்மாத்திரைகள் ஆகியவை தோன்றி ஒடுங்கும் என்பதும் சித்தாந்த விளக்கமாகும். சித்தத்தின் சலனமே அனைத்து தத்துவங்களின் தோற்றம் எனலாம். சித்தத்தை வெல்லுதல் என்பது மேற்குறிப்பிட்ட தத்துவக் கூட்டங்களைத் தன்வயப்படுத்தலாகும். சித்தத்தின் சலனம் அல்லது அசைவு பிராணனின் அசைவையும் பிராண வாயுவின் அசைவையும் பொறுத்தது. பிராணனின் அசைவே சித்தத்தின் சலனம் என்பதை உணர்ந்த சித்தாந்தம் பிராணயாமப் பயிற்சியினை யோக முறைகளில் வலியுறுத்தியது. பிராணனும் சித்தமும் ஒடுங்கிய நிலையே சிவநிலை அல்லது சித்தநிலை என்பர் சிவயோகியர்.[1]

தமிழகமெங்கும் புராதன ஒளிவழிபாடு சிவவழிபாடானது போன்று 'சித்தர்' வழிபாடும் பல சிவாலயங்

1) சித்தர்ஞானக் கோவை, சிவயோகசாரம், பக். 48

களில் தெய்வ வழிபாடானது என்பதற்கு பல ஆலயங்கள் சான்றாக விளங்குகின்றன. மதுரையிலே சிவன் சொக்கநாதச் சித்தரானார். மதுரைக் கோயிலில் சோமசுந்தரர் சன்னிதியின் வடக்குப் புறத்திலே மூலவருக்கு அருகிலே இச் சித்தரின் திருவுருவம் அமைந்துள்ளது. மணிவாசகர் தில்லையிலும், ஆண்டாள் ஸ்ரீரங்கத்திலும் சோதியில் கலந்தமை ஒளி வழிபாட்டின் மூலத்தை உணர்த்துவதாகும். தமிழ் நாட்டின் எல்லையில் உள்ள திருப்பதியிலும், மற்றும் மருதமலை, தில்லையம்பலம், தஞ்சாவூர், மதுரை, திருப்பரங்குன்றம், பழனி முதலிய கோயில்களில் எல்லாம் சித்தர்களின் சமாதிகள் இருக்கக் காணலாம். 'சித்தி' என்றால் 'அடைதல்' என்பது பொருள். காரியசித்தி, பரீட்சையில் சித்தி என சதாராண வழக்கிலும் இச்சொல் இடம் பெற்றிருக்கும். ஞானிகள் இதனை அடையதக்கபேறு அல்லது பெறத்தக்க பேறு என்ற பொருளிலே 'சாயுச்சிய மூத்தி' என்று குறிப்பிட்டனர். சாயுச் சிவநிலை வந்தோரில் சித்தர்களும் சிவஞானிகளாகின்றனர். இறைவனை அடையும் இப்பேறு சச்சிதானந்தப் பேறு எனவும் கூறலாம். சத் - Reality; சித் - Intelligence; ஆனந்தம் - Bliss எனப் பொருள்படுவதால் இத்தகைய சிவப்பேறு சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்று நான்காக சித்தாந்தம் வகுத்துள்ளது. முதல் மூன்றும் பதமுத்தி அடைவிக்கும் பேறுகளானதால் சாயுச்சியம் எனப்படும் சச்சிதானந்தப்பேறே பரமுக்தி எனப்படும் சுத்த அத்வைதசித்தி என்பதாகும்.[1]

சித்தாந்த மரபிலே சித்தர்களது மரபிற்குக் எத்தகைய முக்கியத்துவமுள்ளதென்பது சிந்திக்க வேண்டிய விடய

1. திருமந்திரம், பா. 2485.



மாகும் சித்தாந்தத்தின் இறுதி நிலையாம் சிவசாருப்பிய நிலையினை நிலை நிறுத்துபவர்கள் சித்தர்கள் என்பது தெளிவு. ஆனால் கடவுட் கொள்கையைப் பொறுத்த வரை சித்தர்கள் உருவ வழிபாட்டை கடந்த அருவமான சிவசொருப நிலையினை தொழுபவர்களாவார்கள். சைவர்களில் பக்தர்களோ பாமரர்களோ நால்வகைப் படிநிலைகளில் சரியை, கிரியையை உள்ளடக்கிய உருவ வழிபாட்டினைக் கடைப்பிடித்து ஞானநிலையடைய முயற்சிப்பவர்கள் எனலாம். சித்தாநத நூல்கள் சிவஞானியர்களையும் சிவ வேடம் கொண்டவர்களையும் 'ஆலயம் தானும் அரன் எனத் தொழும்' பெற்றி வாய்ந்தவை. சிவஞானிகள் வேறு சிவயோகியர் வேறு என்பதும் ஞானநிலையின் வளர்ச்சிப்படிகளை விளக்கி நிற்கும். சித்தாந்தக் கோட்பாடுகளை சிவாகம மரபிலே முதல் முதல் அறிமுகம் செய்து வைத்த தமிழ் நூலான 'திருமந்திரம்' திருமூலர் என்னும் சித்தரால் செய்யப்பட்டதாலோ என்னவோ அது மெய்கண்ட சாத்திரங்களில் ஒன்றாக இடம் பெறாமல் போனது. சித்தாந்த சாத்திரங்கள் சித்தர்கள் சமயவாதிகளாக இருப்பதைவிட ஆன்மீகவாதிகளாக விளங்குவதனால் அவர்தம் சிந்தனைகளும் செயல்களும் மரபுகட்கும் அப்பாற்பட்ட தொலைநோக்குடன் விளங்குவதனைக் கருத்திலே கொண்டு, அவர்கட்குத் தனியொரு சிறப்பினை அளித்திருத்தல் வேண்டும். உலகியல் நெறியினைப் போற்றும் சித்தாந்தம் சித்தபுருஷர்களை மிகவும் உயர்நெறி வாய்ந்த உத்தம புருஷர்களாகப் போற்றியது. சித்தர்கள் பெரும்பாலும் 'வேதாந்த சித்தாந்த சமரச நிலை கண்ட வித்தகச் சித்தர்களாகவும்' மருத்துவம், சோதிடம், சமூக சீர்திருத்தம், சமூகப்புரட்சி, உருவ வழிபாடு போன்றவற்றிலே மரபு மீறிய சிந்தனையாளர்களாகச் செயற்பட்டுள்ளனர். அத்தகைய ஆன்மநேய ஒருமைப்பாடுகண்ட சமயப்புரட்சி மிக்க சீர்திருத்

ச் சிந்தனையாளர்களாக விளங்கிய சிவயோக சித்தர்களை குறிப்பிட்ட ஒரு 'சித்தாந்த' திட்டத்திற்குள் அடக்கி வைத்தெண்ணுவதும் மிகக் கடினமான காரியமாகும்.

சித்தர்களைப் பற்றிய இன்னொர் கருத்தினையும் இங்கு குறிப்பிடுவது அவசியமாகும். அற்புதங்களைச் செய்து பல சித்து வேலைகள் செய்வதில் ஆற்றல் வாய்ந்த இவர்களை 'மந்திரவாதிகளோ' எனத் தவறாகக் கருதும் நிலையும் சிலரிடையே காணப்பட்டது ஆங்கிலத்திலே சித்தர்களை மிஸ்டிக்ஸ் (Mystics) என்பார்கள் - மந்திரவாதிகளை (Magi cians) மாஜிசியன்ஸ் என்பார்கள் [1] மாஜிக் எனப்படும் மந்திர சக்திகளால் உடலையும் உள்ளத்தையுமே கட்டுப் படுத்த முடியும். அதுவும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்சே சாத்தியப்படும். ஆனல் 'மிஸ்டிக்' என்பது ,அனுபூதி' எனப்படும் ஆன்ம சாதனையால் விளைவதாகும். அவை உடல் உள்ளம் இரண்டையும் கடந்த ஆன்மீக தொடர்பான சாதனைகளாகும். மக்களை ஆன்மீக ஈடேற்றத்தில் ஈடுபடுத் துவதற்கு சமூகத் தொண்டுகளையும் அற்புதங்களையும் ஒரு கருவியாகக் கையாண்டு வந்தவர்கள் சித்தர்கள் இவர் கள் வாதம், வைத்தியம், மந்திரம் இம்மூன்றிலும் வல்ல வர்களாதலால் நோய் நீக்கும் பாணியிலே சில மந்திரங் களையும் சித்துக்களையும், அற்புதங்களையும் வைத்திய முறையிலும் அறிமுகப்படுத்தினர். 'ஆன்மீகக் கல்வி' என் ருல் பலருக்கும் அதில் நாட்டமிருப்பது குறைவு-ஆதலால் லௌகீக விடயங்களை அற்புதங்களாக்கி முதலில் மக்களை வைத்திய முறையிலே தம்பால் ஈர்த்தனர் சீடர்களாகக் கொண்டனர். பின்பக்குவமுணர்ந்து தம்மீது மக்கட்கு

1. நம் நாட்டுச் சித்தர்கள், என்ற நூலினைப் பார்க்கவும்



நம்பிக்கையுண்டாகும் வண்ணம் மக்களை வசியப்படுத்தி னர் பின்னர் தாமறிந்த வைத்தியக் கலையுடன் ஆன்மிக தத்துவக் கலைகளையும் சேர்த்து அம்மாணவர்கட்கும் போதிக்க முடிந்தது. சித்தர்கள் சித்து முறைகளைக் கை யாண்டதற்கு இதுவும் ஒரு காரணமாகலாம்.

சமய இதிகாச அகராதியின்படி[1] மிஸ்டிசிஸ்மஸ் (Misti-zismus) என்பதும் (Mystic) மிஸ்டிக் என்ற சொல்லும் ஜெர் மானியச் சொற்களுடன் தொடர்புபட்டவை. முதற்சொல் லான மிஸ்டிசிஸ்மஸ் என்பது இயற்கைக்கு அப்பாற்பட்ட (Supernatural) செயல்களைச் செய்யும் ஆன்மீகவாதிகளின் வழி எனவும், இரண்டாவதான 'மிஸ்டிக்' என்பது இறை வனுடன் ஆன்மா இரண்டறக் கலக்கும் அனுபூதி நிலை என்பதும் பொருளாகும்.[1] இதிலிருந்து 'சித்து அல்லது அனு பூதிநிலை என்பது ஆன்மா இறைவனுடன் இணையும் அனு பவம்' என்பதை உணர்த்துவதென்பது பெறப்பட்டது. சித்தர்கள் சடங்குகட்கும் சமயங்கட்கும் கட்டுபட்டவர்கள் அல்ல, அவர்கள் எக்காலமும் எந்நாட்டிலும் தோன்றலாம் அத்துடன் உருவ வழிபாட்டை ஏற்காதவர்கள், தம்முள் இருக்கும் இறைமையை உணர்ந்தவர்கள், அருளையும் அன்பையும் சமரசத்தையுதம போற்றுபவர்கள், சமூகத் தொண்டிலே நாட்டமுள்ளோர். அவர்களிடையே மேற்கு நாடுகள், கிழக்கு நாடுகள் என்ற வேறுபாடுகளும் எழுவ தில்லை.[2] ஆதலால் 'சித்தர்கள்' என்ற ஆன்மீகவாதிகளை 'சிவதத்துவம்' பற்றிய கோட்பாடுகட்கு மதிப்பளித்துள்ள

1. Encyclopeadia of Religion and Ethics, Ed: James Hestings, Newyork, Vol. V, 1912, P. 83.
2. An encyclopedia of Religion and ethics; ED: Vergilus Fern P. 511.

சித்தாந்தம்; அவர்களை 'சித்தாந்தம்' என்ற ஒரு தத்துவதிட்டத்துள் சித்தாந்த சிந்தனையாளர்களாக மட்டும் கருதாது; சர்வ சமயவாதிகளாக—சமரச சன்மார்க்க சிந்தனையாளர்களாக சைவ சமய உலகிற்கு அளித்துள்ளதெனலாம்.

**சித்தாந்தமும் அருவுருவக் கடவுட் கொள்கையும் :-**

சைவசித்தாந்தத்திலே சொருபநிலையிலுள்ள சிவமே தடத்தநிலையிலே 'பதி' எனப்பட்டு 'சிவன்' என்ற பெயரிலே உருவக்கடவுளர் வழிபாட்டிற்கு அடித்தளமாக அமைக்கப்பட்டுள்ளது. வேதாகமங்கள் அருவநிலையிலேயுள்ள சிவத்தினை அத்துவாமூர்த்தியாக உள்ளவர் எனச் சிறப்பித்துள்ளன. அவையாவன: மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை முதலிய ஆறு வகைப்படும். அவையாவும் முதல்வனுக்குரிய அத்துவா வடிவங்கள் எனவும் இறைவனது அவயவங்கள் எனவும் கூறப்பட்டன ஈஸ்வரனின் திரோதன சக்தியுடன் கலந்து எல்லாமாகியும்; பொருட்தன்மையால் வேறாகியும்; செலுத்துதலால் உடனாகி நிற்பதாலும், அவற்றுடன் உள்ள தொடர்பினாலும் அவை உபசாரமாகக் கூறப்பட்டனவாம்.[1] பரமாணுக்கள் பகுதிகளாகப் பிரிந்தும் சேர்ந்தும் உருமாறுவது போல முதல்வனுக்கும் அத்துவா வடிவங்கள் பகுதிகளாக் கூறப்பட்டனவாகலாம். பகுதிகளின் பாதிப்பு முதல்வனுக்கில்லையாமோ எனில், பகுதிகள் ஒடுக்க காலத்திலே மீண்டும் பரமாணுவிலே ஒடுங்குவதைப் போலவே இதுவும் எனவும் குறிப்பிடலாம். ஏனெனில் இவையாவும் ஈஸ்வர தத்துவத்திலே உண்டாகும் காரியங்களாக ஏற்கனவே சொல்லப் பட்டுள்ளன. சுத்தாத்துவாவிலே 'சிவதத்துவம்' இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டதாகும்.

---

1. சித்தியார், பதி இலக்கணம், 1.2.77; 78.



ஈஸ்வரனின் ஆறு அத்துவவடிவங்களிலே மந்திர வடிவமே சிறந்தது என்பது சாஸ்திரங்களின் உட்கருத்தாகும். மந்திரங்களிலே ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம், இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அந்தரம் என அவை பதினொன்றாகும் எனப் பௌஷ்கராகமம் கூறும்[1] இவற்றிலே ஈசானம் முதலிய ஐந்தும் பஞ்சப்பிரமமந்திரம் அல்லது பஞ்சாட்சர மந்திரம் எனச் சிறப்பிக்கப்பட்டவை எனப்படும் மற்றய ஆறும் 'ஷடங்கமந்திரம்' எனப்படும்.[2] சிவம் மந்திரங்களானே பஞ்சமந்திரவடிவாகவும் 'சிவாயநம' என்ற மந்திரத்திருமேனி உடையவர் என்பதும் பொருள்படும்.[3] இது தூல சூக்கும திருமேனி அல்லது சூக்குபஞ்சாட்சரம் எனவும் 'நமசிவாய' மந்திரம் தூலபஞ்சாட்சரம் எனவும் கூறுவம் மரபு இவையனைத்தும் அருவமான பதங்களாக இருப்பதால் முதல்வனின் அருவநிலையின் சிறப்பிலக்கணமாகவும் கொள்ளலாம். இந்த வகையிலே இறைவனின் நிர்குண சொருபநிலையின் சிறப்பம்சங்களை சைவசித்தாந்தம் மந்திரங்களின் வடிவிலே உருவ வழிபந்ட்டிற்குரிய பிரார்த்தனைகளின் உட்பொருளாகக் கொண்டிருப்பது சிறப்பான தன்மையாகும். ஈஸ்வரனின் சர்வேஸ்வரத் தன்மையும் வேதங்களின் 'நேதி'-'இதுவல்ல அதுவல்ல'

---

1. பௌஷ்கராகமம், பதிபடலம், பா. 54.
2. மேற்படி, பாடல், 66, 67. ; சித்தியார், பக். 143.
3. சித்தியார், பதி இலக்கணம், 1.2.79.

என்ற கருத்தும்[1] இறைவன் அருவமான நிர்குணநிலையிலும் என்றும் தனக்கென ஒரு இயல்பான 'ஸ்வரூப நிலை'யினை உடையவன் என்பதனைத் தெளிவுபடுத்துகின்றன. சகளநிலை எனப்படும் உருவத் திருமேனிகள் யாவும் ஆலய வழிபாட்டின் தேவைகளை உணர்த்தவும், பஞ்சகிருத்தியத் தொழில்களை நடத்தவும் மேற்கொண்ட தற்காலிக வடிவங்கள் என்பது சித்தாந்தக்கடவுட் கொள்கையினை ஆராய்வோருக்கும் புலனாகாமற்போகா. இருந்தும் சித்தாந்தத்தின் அரும் சிறப்பாக அமைந்துள்ள தனது பரம்பொருட் கொள்கையினை முற்று முழுதான அருவமாகவோ அன்றி நிர்குணமானதாகவோ அது வற்புறுத்தவில்லை என்பதேயாகும். இது சைவ சித்தாந்தத்தின் அதி விசேடப்பண்புகளில் மிக உயர்ந்த தத்துவப் படைப்பு என்றால் மிகையில்லை.

ஏனெனில் சித்தாந்தம் ஒருமைக் கொள்கையல்ல (monism) என்பது வெளிப்படை. ஆனால் 'ஒருகடவுட் தத்துவத்தை' வரைப்படுத்தும் ஒரு புதிய சிந்தனை வார்பா

---

1. 'விரிகதிர் ஞாயிறல்லர் வேத விதியல்லர் விண்ணும் நிலனுமல்லர்
திரிதருவாயுவல்லர் செறும் தீயுமல்லர் தெளிநீருமல்லர்
- அப்பர் தேவாரம், பன்னிருமுறைத் திரட்டு.
'பரனல்ல நீடுபராபரனல்ல மதுனர் ஒண்சுடரல்ல—
தானல்ல தான் அவையாய் அல்லவாகும்-
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே'
திருமந்திரம்; 2861.
'விறகிற் தீயினனன் பாலிற்படு நெய்யினன், மறைய நின்றமாமணிச்சோதியன்' அப்பர் தேவாரம், பன்னிரு திருமுறைத் திரட்டு.



கும் (monuthesism) அப்படியானால் சித்தாந்தம் 'உருவக் கடவுட் கொள்கையினை' இறுதி முடிவாகக் கொண்ட ஒரு தத்துவ சிந்தனையா என்ற சந்தேகம் எழுவது இயல்பாகும். அருவ நிலையிருப்பதால் தான் உருவநிலை பேசப்பட்டதாகையால் - அருவமான உயிரினை உருவமான உடம்பு தாங்குவது போல - உருவங்கள் யாவும் உலகின் ஒடுக்கக் காலத்திலே அருவநிலையிலே - பரவெளியிலே சங்கமமாகி விடுகின்றன. எனவேதான் அறத்தினால் விளைவதாயுடலுயிர்கண் கண்ணறிவொளி போற் பிறிவருமத்துவிதமாகும். சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ-சித்தாந்தத்திறன் தெரிக்கலுற்றார்[1]. உமாபதி சிவாச்சாரியார் என்பது ஏனென்பது புலனாகின்றது. அதனால் உருவத்திலே அநலமும் அருவத்திலே உருவமும் கூட அத்துவிதமாயமைந்தனவேயாகும். உருவங்கள் சங்கார காலத்திலே சிவசொரூபத்திலே சங்கமமாகின்றன. ஆலய வழிபாட்டிலே பாமர மக்களை ஈடுபடுத்தி நல்வழியிலே அறநெறிப்படுத்தும் நோக்குடன் கற்பிக்கப்பட்டவை பதிப்பொருளின் திருமூர்த்தக்கள் என்பதே சித்தாந்தம் காட்டும் உண்மையாகும். அவை சாதாரண அறிவுடைய மக்கட்கு சமயப் பள்ளியிலே ஆரம்பப் பாடத்திட்டங்களைப் போதிப்பனவாகும். அந்த ஆலயப்பள்ளியிலே பயின்று பயிற்சியும் முதிர்ச்சியும் பெற்று சரியை, கிரியை வகுப்புக்களில் சித்தியடைந்தோர் சிலர் யோகியராகவும், சிலர் ஞானியராகவும் வெளியேறுவர். சிலர் போதிய பக்குவமின்மை உண்டாகாதவிடத்து தொடர்ந்தும் அப்பள்ளியிலே பயின்று கொண்டுமிருப்பர். அத்தகையோர் மீட்சிக்காக ஆலயப்பள்ளியும் உருவழிபாட்டுப் போதனையும் என்றும் நடைபெற்றுக்கொண்டே இருக்கும். இத்தகைய மக்களை ஏற்றி விடும் ஏணிகளா

---

1. சிவப்பிரகாசம், பாயிரம்; பாடல் 7.

கவும் கரைசேர்க்கும் ஓடங்களாவும் விளங்குவன ஆலயங்களாகும். முதிர்ச்சி நிலையடைந்து ஞான நிலையென்னும் பதவியேற்றம் பெற்றோர் மலபரிபாகமுற்றோர் சத்தினிபாதம் என்னும் பரீட்சைக்குட்பட்டு விடுதலை 'நிலைக்கோ அன்றிப் பதமுத்தி நிலைக்கோ' சேரக்கூடும். ஒரு சிலர், பக்குவான்மாக்கள் ஆலயவழிபாடு என்ற ஆரம்பப் பள்ளியைக் காணாமலே அனுபூதிநிலைக்கு சென்ற மகான்களாகவும் விளங்குவர். அவர்கள் வாயிலாக சித்தாந்தம் ஞான பீடங்களை ஏற்படுத்தி தத்துவ சாஸ்திரப் பயிற்சிகளை அளித்து தீட்சை என்னும் இறுதிப் பரீட்சை மூலம் உயர் பதவியாகிய (Promotion) பரமுத்தி நிலையினை அடைவிக்கின்றது. இப்படியான ஆசிரியர்கள் குருபீடங்கட்கு முதல்வனால் அனுப்பப்படும் ஞானகுருவாக வருபவர்களாவர். அவர்களில் சித்தாந்த மரபிலே முதன்மையானவராக மெய்கண்ட தேவநாயனார் போற்றப்படுகின்றார். அவர் ஏற்படுத்திய சித்தாந்த ஞானப்பள்ளியிலே பயின்றவர்கள் உருவவழிபாட்டின் அடிப்படையினை உணர்ந்து அறியாமை நீங்கப் பெறுவர் என்பது மெய்கண்ட சாத்திர போதனைகளின் உருவமும் உள்ளடகமுமாகும்.

அப்படியாயின் சித்தாந்தப் பரம் பொருட் தத்துவம் அருவமாயின் அதனை அறியவும் அடையவும் வாய்ப்பு எங்ஙனம் உருவாகும் என்ற கேள்வியினால் ஏற்பட்ட சிந்தனை வெளிப்பாடே, சைவ சித்தாந்தத்தின் பரம் பொருட் கோட்பாடாக 'இரு வேறு' நிலைகளிலே வைத்து சிற்றறிவாளருக்கும், பேரறிவாளருக்குமாக உபதேசிக்கப்பட்டுள்ளதை இவற்றிலிருந்து அறிய முடியும். அதன் படி ஆகை அருவநிலைக்கும் உருவநிலைக்கும் இடைப்பட்ட ஒரு 'பரம்பொருட் தத்துவத்தை' உருவகப்படுத்துவதிலே சிவாகம சித்தாந்த சாத்திரங்கள் வெற்றி கண்டுள்ளன எனக் கொள்ள வேண்டும். எனவே 'அருவுருவக்' கொள்கை நிலையினை இந்த வரையறைக்குள் வைத்தும் நாம் சிந்தித்துப் பார்க்கலாம். 'அருவமும் உருவமும் ஆனாய் போற்றி,' எனவும் 'அருவும் உருவும் உருவோடருவும் - மருவு பரம சிவன்'[1] எனவும் 'உலகினில் ஒருவன் என்பர் உருவினை உணரார் எல்லாம்'[2] எனவருவதெல்லாம் உருவத் திருமேனிகள் தற்காலிகமானவை - கீழ் நிலை உண்மைகள் என்பதனை விளக்கி நிற்கும். அருவமற்ற பரசிவவடிவமே நித்ய வடிவமெனப்படும் "சத்திய நிலை" என்பது சித்தாந்தம் விளக்க விரும்பும் உண்மை நிலையாகும். "சித்தாந்தம் கடவுள் என்பவர் ஒரே சமயத்திலே உருவமுடையவராயும் அருவமுடையவராயும் இருக்கின்றார் என்பதனை எடுத்துக் காட்டும். கடவுள் உருவங்களைக் கூடுமானவரை சக்தியானது அறிமுகப்படுத்துவதாக இருக்கின்றது"[3] என்ற சித்தாந்த ஆய்வாளர் கருத்தும் இவ்விடத்து சிந்திக்கற்பாலது.

சர்வ வல்லமையுடைய சர்வேஸ்வரன் அருவமும் உருவமும் இணைந்த 'அருவுருவானவர்' என்பதே சித்தாந்தம் கடவுட் கொள்கை பற்றிக் கொண்டிருக்கும் உட்பொருளாகின்றது. முதல்வனின் அருவமும் உருவமும் கடந்த அருவுருவ நிலையானது பிற்காலம் 'அருவமும் உருவமுமாய் அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய் - பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பு......" எனக் கந்தபுராணச் செய்யுளிலும் உறுதிப்பாடு பெற்றுள்ளதை அறியலாம். ஆதலால் அருவுருவாகிய சதாசிவபரப் பிரமம் என்னும் பரம்

---

1) திருமந்திரம், 1763.
2) சித்தியார் பதி. இ. 1.2.68.
3) Paransothy, Vriot., Saivasiddhanta in the Maikanda Sastra, London, 1938, P. [illegible]7.

பொருளை சிவலிங்கத் திருமேனி வடிவிலே சித்திரித்து மிகப் பெரியதொரு தத்துவ இலக்கணத்தை அந்த அருவுருவ நிலையிலே அடக்கியிருக்கின்றது. அதனை நோக்குமிடத்து - சூக்குமமாகவுள்ள அணுவானது எவ்வாறு சக்தியுடன் கலந்து தூலமாகிய தனுகரண புவன போகங்களின் உற்பத்திற்கு மூலமான வஸ்துவாய் அமைந்திருக்கும் அற்புதத்தையும் சைவ சித்தாந்தம் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டியுள்ள தன்மை; அதிசயமான அதன் அநுபூதி நெறியின் வெற்றியினைத் தான் நிலைநாட்டியுள்ளது என்று கூறுவது பொருத்தமானதாகும். அதனை 'உலகினில் பதார்த்தமெல்லாம் உருவமோ மருவமாகி — நிலவிடும் ஒன்ருகா நின்ற நிலையே போல குலவிய பதார்த்தத் தொன்ருய்க் கூடுவன் குறித்திடாய்'[1] என சாத்திரங்களும் விளக்கின. 'ஏகம்ஸத்' எனப்படுவதாகிய உண்மைப் பொருள் ஒன்று' என்ற வேத வாக்கிய விளக்கமாக சித்தாந்தம் தனது ஒரு கடவுட் கொள்கையினை நடராஜர் எனவும், பரமசிவம் எனவும், சிவபெருமான் எனவும், சுந்தரேசர் எனவும் சந்திரசேகரர் எனவும். சோமஸ்கந்தர் எனவும், சுப்பிரமணியர் எனவும், விநாயகர் எனவும்; வீரபத்திரர் எனவும், பைரவர் எனவும், பல்வேறு பெயர்களில் அழைக்கப்படும் பரம்பொருள் ஒன்று என்பதனையே 'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே - மரதொரு பாகனுர் தாம் வருவர்'[2] எனச் சாத்திரங்கள் வாயிலாக வரையறை செய்வதும் சித்தாந்தத்திற்குச் சுலபமாயிற்று. இதனுல் 'ஒன்றே சிவம், அதன் உண்மையியல்பு பற்றிய அறிவே ஞானம், அத்தகைய

1. சித்தியார் பதி. இ. 1.2.63.
2. சித்தியார். 2-2-115.



ஞானத்தை அறிவதே போதம்'[1] என சித்தாந்த கடவுட் கொள்கையினை பிற்காலத் தத்துவப் பேராசிரியர்களும் விளக்கிக் காட்டினர்.

**முடிவுரை : பரம் பொருளின் பூரணத்துவம் :**

இறைவனின் உருவக் கடவுட் கொள்கையினை வகுப்பதில் பல நுணுக்கமான ஞானநுபவங்களை வெளிப்படுத்திய சைவ சித்தாந்தம் அப்பரம் பொருளின் பரிபூரணத்தை முழுமையாக வெளிப்படுத்தவும் தவறவில்லை. சித்தாந்தப் பரம்பொருள் இதுவரை அறிந்தவற்றிலிருந்து வடிவமற்ற - ஒரு சூனிய வஸ்துவல்ல என்பதும்; அது நிர்குணத் தன்மையிலும் நிறைவினைக் கொண்டிருக்கும் பெற்றி வாய்ந்ததாகவும் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கின்றதை அறிய முடியும். சித்தாந்த முதல்வனைச் சிறப்பாகச் சொல்வதனுல் :

I. முக்குணங்கட்கப்பாற்பட்ட — நிர்குணன்
II. மலங்கட்கு அப்பாற்பட்ட — நின்மலன்
III. அஞ்ஞானத்திற்கப்பாற்பட்ட — சர்வக்ஞன்
IV. மாயத்தோற்றங்கட்கப்பாற்பட்ட — நிராமயன்
V. தனக்காதாரமாக எதுவுமின்றி தானேயாய் நிற்கும்- நிராதாரன்.
VI. எந்த விகாரங்கட்குமுட்படாத — நிர்விகாரி மட்டுமல்ல
VII. நிரஞ்சனன்
VIII. நிஷ்பிரபஞ்சன்

1. மகாதேவன், T.M.P. இந்து சமய தத்துவம், தமிழ் நாடு. பாடநூல் நிறுவனம், 1966, பக். 155.

VIII. நிஷ்களன்
X. நித்தியானந்தன்

எனப்படும் 'நிர்குண சொருபநிலை' யிலுள்ள 'நிஷ்களசகளமானவன்' என்பதே சித்தாந்தத்தின் முடிபான கடவுட் திட்டத்தின் அடிப்படையாகக் கருதப்படுகின்றது. அந்த அருவுருவக் கடவுளின் நித்தியவடிவம் சத்தியரூபமாகும். 'யான் தான் என்ற சொல்லிரண்டும் கெட்டாலன்றி யாவர்க்கும் தோன்றாத சத்தியம்' என அடியார்களால் போற்றப்படும் பரம் பொருள் அருளுருவம், அறிவுருவம், அன்புருவமாக விளங்கும் பரம்பொருட் தன்மையுடையதால் நிறைவுடைய சிவப்பரப்பிரமமாய் விளங்குவதாகும். நிர்குணசொருபநிலையிலும் பரமசிவத்தின் திவ்யரூபம் சித்திரிக்கப்படுவது சித்தாந்தப் பதிக் கோட்பாட்டின் விசேட தனித்தன்மையாகும் சிவப்பொருளின் நிர்குணநிலை தேவைகளற்ற பரிபூரணநிலையாகும் சைவசித்தாந்தக்கோட்டின் படி உலகமும் உயிர்களும் அனைத்தும் சிவத்துடன் தொடர்புபட்டவை. தனித்தன்மையற்ற-சிவமயமாக்கப்பட்ட இயல்பினாலே அவை சிவத்துடன் இரண்டறக் கலந்திருப்பவையாகும். சிவமின்றி சக்தியில்லை; சக்தியின்றிச் சிவமில்லை; சிவமின்றி ஆன்மா இயக்கமும் இல்லை; சிவமின்றி உலக இயக்கமுமில்லை. யாவும் சிவத்துடன் அத்துவிதமானவை. எனவே இஃது அத்வைதம் என்பது வேற்றுமையன்று; பிரிக்கமுடியாத தன்மையாகும். இத்தன்மையினை உணர்ந்து அடைதலே ஆன்மாவின் உயர்லட்சியமாகும். இவ்விதமாக இரு பொருட்களின் அன்னியமின்மையினை சித்தாந்தத்தில் உணர்வதே அத்துவிதபாவனையாகும்.

சித்தாந்தம் வற்புறுத்தும் பரம்பொருட் கொள்கை 'ஒருமைத்தன்மை' என்பதனைவிட ஒரு கடவுட்திட்டம் என்பதும் அதனை நிறைவாக்கும் தெளிவான இறைமைக்



கொள்கை என்பதும் வெளிப்படை. முடிவாகக் கூறுமிடத்து சைவசித்தாந்தக் கருத்தோட்டப்படி சிவம் என்பது 'நிர்குண சொரூபநிலை' எனப்படும் பரம்பொருட்தத்துவம்என்பதும் 'பதி' என்பது 'சிவன்' எனப்படும் உருவத் திருமேனிகட்கு மூலமான, தடத்தலட்சணம் கொண்ட ஈஸ்வரதத்துவம் என்பதும்; சிவமும் பதியும் இணைந்த நிலையே "அருவுருவ சொரூபநிலையே" என்பதும் பெறப்படும்.

# ஈழத்தமிழரும் சைவசித்தாந்தமும்

**வரலாற்றுக் காலம் :**

ஈழநாட்டிலே வாழும் தமிழ் மக்களுடைய சமயம் ஆதியிலிருந்து இந்து சமய மரபுகளை அடியொற்றி வளர்ச்சி பெற்று வந்துள்ளது என்பதற்கு கி. பி. 3ம் நூற்றுண்டைச் சேர்ந்த புராதனகால (Brhamic Inscriptions) பிராமிக் கல்வெட்டுக்களும் கி.பி. 4ம் நூற்றுண்டிலே எழுதப்பட்ட 'மகாவம்சப்' என்ற பௌத்த சமய நூலும் சிறப்பான சான்றுகளாகும். ஈழ நாட்டுப் பௌத்த சமய வரலாற்றை விரிவாகக் கூறும் மகாவம்சம் என்ய நூல் ஈழ மக்களிடையே பழங்காலம் முதல் வழக்கிலே இருந்து வந்த இந்து சமய நம்பிக்கைகள், வழிபாட்டு மரபுகள், வழிபடு கடவுளர், தொடர்பான பல வகைப்பட்ட சிந்தனைகளையும் தன்னகத்தே கொண்டதாயமைந்துள்ளது. இது மட்டுமின்றி ஈழத்து இந்து சமய வரலாறானது அந்த நாட்டு மக்களுடைய வரலாற்றுச் செய்திகள், மரபுக் கதைகள், கர்ண பரம்பரைச் செய்திகள், கட்டுக் கதைகள் பலவற்றிலும் நீண்டகாலமாக இருந்து வருகின்றது. விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சிகள் பெருகி வளர்கின்ற தற்காலத்திலே இத்தகைய பழமையான சில செய்திகள் மதிப்பிழந்து வருவதும் இயற்கையே. எனவே தர்க்கரீதியாகச் சில வரலாற்றுச் செய்திகளைத் தெளிவுபடுத்துவதற்கு, இலக்கியச் சான்றுகளுடன், தொல்பொருட்கள், நாணயங்கள், கல்வெட்டுக்கள், அயல் நாட்டுப் யாத்திரிகர் குறிப்புக்கள் என்பன அடிப்படையாதரங்களாக அமைவதால் ஈழத்து இந்து சமயம் தொடர்பான பல தகவல்களை இத்தகைய சான்றுகள் மூலமாக உறுதிப்படுத்த முடிகின்றது.



பிராமிக் கல்வெட்டுக்கள் இலங்கையில் கிடைக்கின்ற வரலாற்றுச் சான்றுகளிலே மிகப் பழமையானவை. இவற்றிலே கிடைக்கின்ற செய்திகளைக் கொண்டும் மகாவம்ச நூலிலே காணப்படும் தகவல்களிலிருந்தும் ஈழத்து ஆதிக் குடிமக்களிடையே சிவ வழிபாடு, சிவலிங்க வழிபாடு, முருக வழிபாடு, நாக வழிபாடு, கிராம தேவதை வழிபாடுகள் போன்றவை நிலவி வந்துள்ளமையினை அறிய முடிகின்றது. இந்திய நாட்டு இதிகாச புராணக் கருத்துக்களது இலக்கியச் செல்வாக்கின் விளைவாக ஈழத்து மக்களிடையே இந்து சமய நம்பிக்கைகளில் பெருமளவு பாதிப்பை அவை ஏற்படுத்தியுள்ளன. இவைபோன்ற சான்றுகள் பலவற்றினடிப்படையிலே ஈழத்து இந்து சமய வரலாற்று வளர்ச்சியினை மதிப்பிட்டறிவதற்கு இலங்கை வரலாற்றுப் பேராசிரியர்களான டாக்டர் S. பரணவிதான, பேராசிரியர். கா. இந்திரபாலா, டாக்டர். க. சிற்றம்பலம் போன்ற ஆய்வாளர்கள் முயற்சி செய்து பல கட்டுரைகளாகவும் நூல்களாகவும் சிலவற்றை வெளியிட்டுள்ளனர். ஈழத்திலே தமிழ் மக்களுடன் தமிழ் மக்கள் அல்லாதோரும் கூட புராதன காலம் தொட்டு இந்து சமயக் கடவுளரை வழிபட்டு வந்துள்ளனர். இதன் விளைவாக ஈழத்தில் முற்காலத்திலே ஆண்ட மன்னர்கள் குறிப்பாக. விஜயபாகு, பராக்கிரமபாகு, புவனேகபாகு போன்ற சில மன்னர்களின் ஆதரவாலும் இந்து சமயம் மேலும் வளர்ச்சி அடைந்ததுடன், ஈழத்திலே கி. பி. 11ம் நூற்றுண்டினை அடுத்துச் சோழர் ஆட்சி ஏற்பட்ட காலத்தில் ஈழத்து இந்து சமய வரலாற்றிலே ஒரு பொற்காலம் உதயமானது. நிறுவன ரீதியான அமைப்புக்கள், கோயில்கள், அந்தணர் செல்வாக்கு, ஆலயக் கிரியைகள் பலவும் வளர்ச்சி பெற்றன. ஈழத்திலே சோழராட்சி முடிவுற்ற பின்பும் [illegible] தமிழர் வாழும் வடகிழக்குப் பகுதிகளிலே இந்து

சமயப் பெருபளவில் சிறப்பான வளர்ச்சியினைத் தொடர்ந்தும் பெற்றது. கி.பி. 13ம் நூற்றுண்டிலிருந்து யாழ்பாண நகரிலும் முன்னர் இருந்தவற்றினைவிட பெரும் இந்துக் கோயில்களும், சமயம் சார்பான சில நூல்களும் உருவாகத் தொடங்சின. ஆயினும் கி.பி. 16ம் நூற்றுண்டிலிருந்து இவ்வளர்ச்சி நிலையிலே பல தளர்ச்சி நிலைகள் ஏற்பட்டன.

**ஐரோப்பியர் காலம் :**

கி. பி. 16ம் நூற்றுண்டிலிருந்து ஐரோப்பியர்களது படை எடுப்புகள் ஏற்பட்டதன் பலனுக கீழ் நாடுகளை ஆக்கிரமித்த போத்துக்கீசர், ஒல்லாந்தர் (Dutch People), பிரிட்டிசார் ஆட்சிக் காலங்களில் ஈழம் ஆக்கிரமிக்கப்பட்ட போது ஈழ நாட்டின் சுதேச சமயங்களான பௌத்தமும், இந்து சமயமும், பெரிதும் வீழ்ச்சியுறத் தொடங்கின. சுதேச சமயங்கள் வீழ்ச்சியுற்றதையடுத்து கிறிஸ்துவ சமயமானது ஈழத்திலே மேலான வளர்ச்சி கண்டது. போத்துக்கீசரை அடுத்து வந்த ஒல்லாந்தர் என்ற டச்சுக்காரர் ஆட்சியிலே சுதேச மக்களின் மதச் சுதநதிரமே ஆட்டம் காணும் நிலையினையடைந்தது. இந்து, பௌத்த சமயங்களைத் தடைசெய்து கிறிஸ்துவ சமய வளர்ச்சியினையே (கத்தோலிக்கம்) டச்சுக்காரர் தமது ஆட்சியிலே பிரதானமாகக் கொண்டனர். இவர்களது காலத்திலே யாழ்ப்பாணத் தமிழ் மக்களிடையே சைவ சமயம் பிரபல்யம் அடைந்திருந்த போதும் மதச் சுதந்திரமும், கோயில் வழிபாடும், விரதக் கிரியைகள் போன்றவற்றின் அனுட்டானங்களும் டச்சுக்காரரால் முற்றுகத் தடை செய்யப்பட்டன. பல கடுமையான மதச் சட்டங்களால் சைவ சமயத்தின் நிலையானது தளர்ச்சியுறத் தொடங்கியதனுலும் தீவிர சமயப் பற்றுள்ள சில தமிழ் மக்கள், அறிஞர் பெரு



மக்கள், இந்து சமயத்தைச் சார்ந்த பெரியோர்கள் பலரும் தமிழ் மக்களிடையே தொடர்ந்து இந்து சமயத்தை வளர்ச்சி பெறச் செய்வதற்குப் பல முறை தமிழ்நாட்டுடன் பல கலாச்சாரத் தொடர்புகளை ஏற்படுத்தி வந்தினர். ஈழ நாட்டு இந்துக்களது சமயமும் சரி தத்துவமும் சரி இந்திய சமய தத்துவப் பாரம் பரியத்துடன் நீண்ட காலத் தொடர்புடையதாகவே வளர்ந்து வந்துள்ளது. தென்னுட்டிற்கும் ஈழநாட்டிற்குமுள்ள புராதன கால அரசியல், கலாச்சாரத் தொடர்புகளின் பயனுக ஈழத் தமிழறிஞர் பலரும் தென்னுடு சென்று தமது தமிழ்ப் புலமை, சமய தத்துவப் புலமை என்பவற்றை அவ்வப் போது வளர்த்துக் கொண்டு வர முற்பட்டனர்.

**ஞானப்பிரகாசரும் சித்தாந்தமும் :**

இப்படியான தொரு அரசியல் சூழ்நிலை காரணமாக யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் பல இன்னல்கட்கிடையில் ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் தமது சைவாசார அநுட்டானங்களைப் பகிரங்கமாகச் செய்ய முடியாது இரகசியமாகவே செய்து வந்தனர். இந்த அவல நிலையினைக் கண்டு மனம் வருந்திய பலருள் ஞானப்பிரகாச முனிவர் குறிப்பிடத்தக்கவர். யாழ்பாணத் தமிழரிடையே சைவ சித்தாந்த தத்துவத்தில் பெரும் ஈடுபாட்டை ஏற்படுத்திய மகான்களில் ஞானப்பிரகாசர் தலையாயவர் மட்டுமின்றி காலத்தாலும் மிக முற்பட்டவராவார். ஈழத் தமிழ் மக்களது சைவ சித்தாந்த வரலாற்றை முறைபடி ஆரம்பித்து வைத்ததுடன் நில்லாது அவர்கட்கு சைவ சித்தாந்தக் கல்வியில் பெரியதொரு ஈடுபாடு ஏற்படவும் ஞானப்பிரகாச முனிவர் காரணமாய் அமைந்தார். ஒல்லாந்தரது கடுமையான சமய அடக்கு முறைகளால் மிகவும் பாதிக்கப்பட்ட ஞானப்பிரகாசர் தமது சமயமாகிய சைவத்தையும் தமிழையும் வளர்த்தற் பொருட்டு தனி

ஒருவராகவே அக்காலத்தில் தமிழ்நாட்டைச் சென்றடைந்தார். அந்த திருவண்ணாமலை யாதீனத்தை அடைந்து தமது தமிழ்க் கல்வி, சைவக் கல்வி, சித்தாந்தக் கல்வி அனைத்தையும் பயின்று அவற்றில் நல்ல புலமையும் பயிற்சியுமுடையவரானார். மெய்கண்ட சாத்திரங்களிலும், சைவாகமங்களிலும் சிறந்த தேர்ச்சியும் அறிவும் பெற்றுத் திகழ்ந்தார். வடமொழி, தமிழ் மொழி இரண்டிலும் நிகரற்ற புலமை பெற்று விளங்கினார். அதனால் தமிழிலும், வடமொழியிலும் சைவ சித்தாந்த நூல்களையுமியற்றினார்.

சைவசித்தாந்த பரபினை சாஸ்திரக் கோட்பாட்டு முறையிலே முதன் முதல் ஈழத்திலே ஆரம்பித்து வைத்த பெருமை 17ம் நூற்றாண்டில் ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் யாழ்பாணத்தில் தோன்றிய ஞானப்பிரகாச முனிவரையே சாரும். (கி. பி 1625 - 1658) முப்பத்திமூன்று ஆண்டுகள் இவர் உலகிலே வாழ்ந்தார். மிகச் சிறிய வயதிலே பெரும் சித்தாந்த சிந்தனையாளர்களில் ஒருவரானார். மெய்கண்ட சாத்திரங்களில் ஒன்றான சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு உரை செய்த அறுவருள் ஞானப்பிரகாச முனிவரும் ஒருவர் ஆவர். இந்நூல் 'அறுவர் உரை' என்ற பெயரில் மிகவும் புகழ்வாய்ந்தது. சென்னையில் உள்ள சிவஞான போத யந்திர சாலையில் இந்நூல் (பக். 5-8) முதல் முதலாக 1901ம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. ஆறுமுக நாவலர் என்பாரும் தம்முடைய நூல்கள் சிலவற்றிலே ஞானப்பிரகாச முனிவர் பற்றிய சில தகவல்களைத் தந்துள்ளார். ஆயினும் ஞானப்பிரகாசர் வாழ்க்கை வரலாறு பற்றித் தெளிவாக விரிவாக அறிந்து கொள்வதற்கு இதுவரை போதிய நூல்கள், ஆதாரங்கள் கிடைக்காமற் போனமை மிகவும் வருந்தத்தக்கதாகும்.



யாழ்பாணம் ஆறுமுக நாவலர் இவ் அறிஞரைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'சிதம்பரத்திலே ஞானப்பிரகாசம் என்னும் திருக்குளம் செய்வித்தவரும் சமஸ்கிருதத்திலே பௌஷ்கராகமவிருத்தி, சிவஞானபோதவிருத்தி, சித்தாந்த சிகாமணி, பிரமாண தீபிகா, பிரசாத தீபிகா, சிவயோக சாரம், சிவயோக ரத்னம் என்பவைகளுடன் சிவஞான சித்தியார் சுபக்கம் என்ற நூலுக்கு ஓர் உரையை இயற்றியவரும் திருவண்ணாமலை ஆதினத் தம்பிரான்களுள் பலருக்கு சைவாகம உபதேசம் செய்வித்தவருமான ஸ்ரீ ஞானப்பிரகாச முனிவர் யாழ்ப்பாணத்தவர்' என்று நாவலர் தமது நல்லறிவுச் சுடர் கொளுத்தல்' என்னும் பிரசுரத்தில் கூறியிருப்பது நமக்கு ஞானப்பிரகாசரை ஓரளவு அறிமுகப்படுத்துவதாக அமைந்துள்ளது. ஞானப்பிரகாச முனிவரது சொந்தப்பிறப்பிடம் யாழ்பாணத்தில் உள்ள 'திருநெல்வேலி' என்ற கிராமமாகும்.

ஞானப்பிரகாசமுனிவர் இயற்றிய நூல்களின் மொத்த எண்ணிக்கைபற்றி வேறுபாடான கருத்துக்கள் உண்டு ஆறுமுக நாவலர் குறிப்பிடும் போது மொததம் எட்டு நூல்களில் ஏழு நூல்கள் ஞானப்பிரகாசரால் வடமொழியில் இயற்றப்பட்டவை எனக் கூறியுள்ளார். 'யாழ்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூல் விற்பனைக் கழகம்' 1971ல் சிவஞான சித்தியாருக்கு திருவிளங்கம் என்பாரால் எழுதப்பட்ட, புத்துரை ஒன்றினைப் பதிப்பித்தார்கள். அந்த நூலின் பதிப்புரையில் சித்தியாருக்கு அறுவர் உரையில் ஒன்றைச் செய்தவரான யாழ்பாணத்தைச் சேர்ந்த ஞானப்பிரகாசர் திருவண்ணாமலை யாதினத்தைச் சேர்ந்தவர் எனவும் அவர் வடமொழியில் எட்டு நூல்களை இயற்றினார் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றுள் நாவலர் குறிப்பிட்ட மொத்தம் எட்டு நூல்களுடன் 'அஞ்ஞான விவேசனம்' என்ற ஒரு நூலும் ஞானப்பிரகாச முனிவ

ரால் இயற்றப்பட்ட நூல்களுள் ஒன்று என்பதாகக் கூறப்பட்டமைகாணலாம். இவை தவிர 1975ம் ஆண்டில் ஞானப்பிரகாசரால் இயற்றப்பட்ட 'சிவயோகரத்தினம்' என்ற வடமொழி நூல் பாண்டிச்சேரியில் உள்ள பிரெஞ்சு ஆராய்ச்சிக் கழகத்தினால் வெளியிடப்பட்டுள்ளது.

அந்த நூலின் பதிப்புரையில் நூலாசிரியர் பற்றிய அதிகமான குறிப்புக்களைக் காணமுடியவில்லை. மேலும் ஞானப்பிரகாசரால் இயற்றப்பட்ட நூல்களின் பட்டியல் தரப்பட்டுள்ளது. அவர்களது அறுவர் உரையினையும் சேர்த்து எல்லாமாக பத்து நூல்கள் ஞானப்பிரகாசரால் செய்யப்பட்டவை எனக் குறிப்பிட்டுள்ளனர். அவையாவன சித்தியார் அறுவர்-உரை, மற்றும் வடமொழியிலே எழுதப்பட்ட பௌஷ்கர விருத்தி, பாசாத தீபிகா, சித்தாந்தப்பிரமாண தீபிகா, சித்தாந்த சிகாமணி, சிவயோக சாரம், சிவஞானபோத வியாக்கியானம், சிவயோகரத்தினம் என்பவற்றுடன் நாவலரால் குறிப்பிடப்படாத நூல்களான அஞ்ஞான விவேசனம், சிவாகமாதி மகாத்மிய சங்கிரகம் என்பனவும் ஞானப்பிரகாசரால் எழுதப்பட்டனவாகத் தெரிவிக்கப்பட்டுள்ளன. எனவே ஞானப்பிரகாசர் வடமொழியில் மொத்தம் பத்து நூல்கள் இயற்றியதாக அறிய முடிகிறது'.

இவற்றிலே பாஷாததீபிகா என்பதனை நாவலர் பிரசாத தீபிகா எனவும் 'சிவஞானபோத வியாக்கியானம்' என்பதனை சிவஞானபோத விருத்தி எனவும் குறிப்பிட்டதாகக் கருதலாம். மற்றும் பௌஷ்கராகம விருத்தி என்ற நூலானது உமாபதி சிவாச் சாரியாரால் எழுதப்பட்ட நூலாகவும் கருதப்படுகின்றது. ஞானப்பிரகாசரால் இயற்றப்பட்ட நூல்களிலும் அதைப் பற்றித்தகவல் தரும் மேற்குறிப்பிட்ட மூன்று குறிப்புக்களிலும் பௌஷ்கரமாக



விருத்தி என ஒரு நூல் இடம் பெற்றுள்ளது. எனவே இரண்டும் தனித்தனி இருவராலும் செய்யப்பட்டதா அல்லது வேறு வேறு நூல்களா என்பதும் தெளிவற்றதாக உள்ளது. இந்நூல்களில் பாஷாத தீபிகா என்ற நூல் அடையாறு கையேட்டுப் பிரதி நூலகத்தில் இருப்பதாகவும் பிரமாண தீபிகை பிரெஞ்சு ஆராய்ச்சிக் கழகத்தில் இருப்பதாகவும் பாண்டிச்சேரி பிரெஞ்சு ஆராய்ச்சிக் கழகம் வெளியிட்டுள்ள 'சிவயோக ரத்தினம்' என்ற நூலின் பதிப்புரையில் இருந்து அறியப்படுகின்றது.

இவ்வாறாக ஞானப்பிரகாச முனிவர் யாழ்ப்பாணத்து ஒல்லாந்தர் ஆட்சிக் காலமான இருள் அடைந்த சமயச் சூழ்நிலையில் சைவசித்தாந்த ஒளிவிளக்கை ஏற்றிவைத்து அந்த நாட்டு மக்கட்கு வழிகாட்டியவர்களுள் தலையாயவர் என்றால் அது மிகையாகாது. அவரது சைவசித்தாந்த அறிவினையும், சிவாகமங்களின் புலமையினையும் அவரால் எழுதப்பட்ட நூல்களில் இருந்து துல்லியமாகக் கண்டு கொள்ளலாம்.

**ஆறுமுக நாவலரும் சைவசித்தாந்தமும் : ***

ஈழ நாட்டு யாழ்ப்பாணத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட ஆறுமுக நாவலருக்கு அறிமுகம் தேவையற்றது. கடந்த ஆண்டு 1991ல் வெளிவந்த ஐப்பசி மாத 'தமிழ் மாருதம்' நாவலர் அவர்கள் திருவுருவப் படத்துடன்

---

* இக்கட்டுரை 'நாவலரும் சைவசித்தாந்தமும்' என்ற தலைப்பிலே 1983ம் ஆண்டு ஆடி மாதம் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக ஆராய்ச்சி வெளியீடாக வருகின்ற 'சிந்தனை' என்ற சஞ்சிகையிலே முன்னர் வெளிவந்ததாகும். அதன் சுருக்கமே இங்கு தரப்பட்டுள்ளது.

அவரைப் பற்றிய பல அரிய செய்திகளையும் தாங்கி வெளி வந்திருப்பது ஈழ நாட்டுத் தமிழ்ச் சைவர்கட்கு மிகவும் பெருமையளிப்பதாகும். ஈழ நாட்டுத் தமிழர்கட்கும் தமிழுக்கும், சைவத்திற்கும் நாவலர் பெருமான் ஆற்றிய தொண்டினை ஈழநாடு மட்டுமல்ல தமிழகமும் நன்கு அறியும். தமிழ், வடமொழி இரண்டிலும் திறமையான புலமையைப் பெற்றிருந்த நாவலர் தமிழ்நாட்டிலே தங்கியிருந்த காலங்களில் அவரது அறிவாற்றல் காரணமாக திருவாவடுதுறையாதீனத்துடன் நெருங்கிய தொடர்பு உண்டானது. இத் தொடர்பினால் தாம் ஏற்கனவே பெற்றிருந்த சைவ சித்தாந்த அறிவினை மேலும் பெருக்கிக் கொண்டதுடன் - ஆதீனத் தலைவர் அவர்களது பெருமதிப்பினையும் பெற்று சைவ சித்தாந்த நூல்கள் பலவற்றினையும் ஆராய்ந்து அவற்றிலே ஆழமான திறமையும் புலமையும் பெற்றுக் கொள்ளவும் முடிந்தது. நாவலர் பெருமான் வைதிக சைவநெறியிலே தலை சிறந்து விளங்கியமையால் 'சைவசித்தாந்தம்' நாவலருடைய உயர்வான தத்துவக் கோட்பாடாயிற்று.

யாழ்ப்பாணம் திருநெல்வேலியைச் சேர்ந்த ஞானப் பிரகாச முனிவரால் மெய்கண்ட சாத்திரங்களில் ஒன்றான சிவஞான சித்தியார் - சுபக்கத்திற்கு ஒரு நல்லுரை செய்யப்பட்டதை முன்பே கண்டோம். 17ம் நூற்றாண்டிலே இவ்வாறு சித்தாந்த சாத்திரங்களைக் கற்றுத் தேர்ந்து ஞானப்பிரகாசர் ஆரம்பித்து வைத்த சைவ சித்தாந்த நெறியிலே அடுத்த கால கட்டத்திலே 19ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே (1822) ஈழத்து யாழ்ப்பாணத்திலே ஞானப்பிரகாசர் மரபிலே தோன்றியவர் ஆறுமுக நாவலராவார். நாவலரும் சித்தாந்தக் கோட்பாட்டிலே தணியாத ஆர்வமும் அக்கறையும் கொண்டிருந்தார். தமது தத்துவ சிந்தனைகளையும் சித்தாந்த மரபினை அடித்தள



மாகக் கொண்டே அமைத்துக் கொண்டார். அவருடைய சைவ சித்தாந்தக் கோட்பாட்டின் தீர்க்கமான சிந்தனைகளை நாவலரால் எழுதப்பட்டதும், பதிப்பிக்கப் பட்டதும், உரை செய்யப்பட்டதுமான இன்னோரன்ன பிற நூல்களிலும் கண்டு கொள்ளலாம். மெய்கண்ட சாத்திரங்களில் நாவலருக்கிருந்த அறிவாற்றலினாலே 'சைவ சமய நெறி' எனப்படும் மறைஞான சம்பந்தரது நூலிற்கு அவர் புத்துரை ஒன்றினை எழுதி வெளியிட்டார். மறைஞான சம்பந்தரால் நூல் எதுவும் எழுதப்படவில்லை எனவும் ஆராய்ச்சியாளர் சிலர் கருதுவர்.[1] ஆயினும் இத்தகவலை 'ஆறுமுக நாவலர் சரித்திரம்' என்ற நூலிலே அதன் ஆசிரியரான வே. கனகரட்ண உபாத்தியாயர் என்பார் வெளியிட்டுள்ளார். நாவலரால் புத்துரை எழுதப்பட்ட 'சைவ சமய நெறி' என்ற நூலும் சென்னையிலே 1955 ம் ஆண்டிலே பதிப்பிக்கப்பட்டுள்ளது. மேலும் நாவலர் சிவஞான சுவாமிகள் 'சிவஞானபோதம்' என்றும் நூலிற்கு அருளிய விருத்தியுரையினையும் பரிசோதித்து வெளியிட்டார்.

**வேதாகம வைதிக நெறி :**

தத்துவ சிந்தனை மரபிலே வேதாகமவைதிக நெறியினையே நாவலர் பின்பற்றினார். 'வேதத்தின் ஞானகாண்டம், சிவாகமங்களின் ஞானகாண்டம் என்னுமிரண்டும் திரிபதார்த்த லட்சணங்களையே கூறுவன' என்று தனது

---

1. Siddhalingaiah, Dr. T. B., Origin and devolopement of Saivasiddhanta, (upto 14th century) Madurai Kamarajar university, central co-operative stores, Madurai, 1979, PP. 119 - 120.

'சைவசமய நெறி'க்கு எழுதிய புத்துரையிலே குறிப்பிட்டிருப்பதிலிருந்து, வேதாகமங்கள் முப்பொருள் உண்மையினை அடிப்படையாகக் கொண்டவை என்பதனை நாவலர் ஏற்றுக் கொண்டுள்ளார் என்பது புலனாகின்றது. சைவசித்தாந்த தத்துவத்திற்கு வேதம் பொது நூல், ஆகமம் சிறப்பு நூல் என்பதனை நாவலர் பின்வருமாறு வலியுறுத்தினார். 'வேதங்கள் அற்பச் சுருதி வாக்கியம், பிரபலச் சுருதி வாக்கியம் என இரு பகுதிப்படும். அற்பச் சுருதி வாக்கியம் கர்மானுட்டானத்தையும் பிரபலச் சுருதி வாக்கியம் அத்தியான்ம ஞானத்தையும் சொல்லும். இவை முப்பத்திரண்டு உபநிடதங்களாக இருக்கும். வேதங்கட்கு வழி நூல் சைவம் முதலிய புராணங்களும் ஸ்மிருதிகளுமாம்' எனவும், சிவாகமங்களைப் பற்றிக் கூறுமிடத்து 'ஆகமங்கள் தனித்தனியே ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என நான்கு பாதங்களையுடையன. அவை பதி, பசு, பாசம் என்னும் திரிபதார்த்தங்களின் ஸ்வருபப், சிவயோகம் ..... சந்தியா வந்தனம் ...... பூசை, செபம், ஓமம் முதலிய ஆச்சார்யா அபிசேகங்களையும் உபதேசிக்கும் எனவும் விளக்கிக் காட்டினர். நாவலரது இந்த விக்கியாபனம்' ஸ்ரீ வேதாக மோத்த சித்தாந்த சைவப்பிரகாச சமாசிய விக்கியாபனம் எனப்படும். இக்குறிப்பு நாவலரது நூலான 'சைவ தூஷண பரிகாரம்' என்ற நூலிலே இடம் பெற்றுள்ளது.

நாவலரது சித்தாந்த மரபு 'வேத சிவாகம சித்தாந்தம்' என்பது ஈழத்துப் பெரியார் சிலரது கணிப்பாகும இதனைப் பற்றி நாவலர் பரம்பரையில் வந்த பண்டிதமணி கணபதிப்பிள்ளையவர்கள் குறிப்பிடும்போது ' வைதிகமானது தூய அறிவு நெறி. அது சிவ சம்பந்தம் உறும் போது சைவம் என்பதால்...... நாவலர் சரித் திரத்தை அவ்வாறு கூறுகிறோம்' என கூறியிருப்பது மேற் குறிப்பிட்ட கருத்தினை விளக்குவதாகும். எனவே ஈழத்துச் சைவப் பெரியார்கள் பலரும் சைவசித்தாந்தத்திலே ஆகமங்களைப் போன்று வேதமரபின் தொன்மையும் ஏற்புடைமையானதே என்பதனை ஏற்றுக் கொண்டு சைவ சித்தாந்த மரபினை வளர்த்து வந்துள்ளமையினை நாவலர் மாணவ பரம்பரையினரின் சைவசமயப் பணிகள் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.



**நாவலரும் சித்தாந்தம் சார்பான நூல்களும் :**

நாவலரால் எழுதப்பட்ட 'சைவ வினு விடை' இரண்டாம் புத்தகத்தின் அமைப்பு முறை சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களில் சொல்லுகின்ற தத்துவக் கோட்பாட்டினை நாவலரது இந்த நூலாவது 'வினுவிடை, அமைப்பிலே சுருக்கமாக அறிமுகப்படுத்துவதாக இருக்கின்றது. பதி இயல், பசு இயல், பாச இயல் வைப்பு முறைமையிலே இந்த நூலானது சித்தாந்தக் கருத்துக்களைச் சிறியோரும், குழந்தைகளும் விளங்கிக் கொள்ளுமாறு எடுத்துச் சொல்கின்றது. 'உலகிற்கு கருத்தா சிவபெருமான்' எனவும் ஆன்மாக்கள் பல எனவும் அவை பாசத்தால் பந்திக்கப்பட்டவை என்பது போன்ற சித்தாந்தக் கோட்பாடுகள் மெய்கண்ட சாத்திர மரபிலே வைத்து விளக்கப்பட்டுள்ளன. இவ்வாறாக பதி பசு, பாச உண்மைகள் பற்றிய விளக்கங்கள் நாவலரது நூலாக்கங்கள் பலவற்றிலும் பல கோணங்களில் பரவிக் கிடக்கின்றன. சைவசித்தாந்தக் கோட்பாட்டினை இலகுவாகவும் எளிமையாகவும் ஈழத் தமிழ் மக்களுக்கு முதன் முதலாக வசன ரூபமாக விளக்கிய பெருமை 'வசன நடை கைவந்த வல்லாளர்' எனப் புகழப்பட்ட ஆறுமுக நாவலரையே சாரும்.

நாவலரின் நான்காம் பாலபாடம் என்ற நூலிலும் சித்தாந்தக் கொள்கைகள் சுருக்கமாக அறிமுகப்படுத்தப்

பட்டுள்ளன. 'கடவுள் ஒருவர் இருக்கின்றார் என்பது புற இந்திரியங்களால் அறியப்படாவிட்டாலும் அனுமான பிரமாணத்தால் நிச்சயிக்கப்படும்' என்று கூறிய தன் வழி அனுமானப் பிரமாணப் பயன்பாட்டினை அவ்விடத்திலே விளக்கிக் காட்டினார். சைவசித்தாந்தத்தின் பரம்பொருள் 'பசுபதி' யாகவும் பேசப்படும் என்பதனை எல்லா அறிவும் எல்லா முதன்மையும் எல்லா அனுக்கிரகமும் உடைய முழு முதல் தாம் ஒருவரேயாகி, பசுக்களாகிய ஆன்மாக்கள் எல்லாம் தமக்கு உடைமைப் பொருட்களேயாகத் தாம் என்றும் உடையவராயே நின்று 'பசுபதி எனப்படும் சிவன் பிரபஞ்சம் எங்குமாகி நீக்கமற வியாபித்து நிற்பர்' எனச் 'சிதம்பரமான்மியம்' என்ற நூலிலே நாவலர் குறிப்பிட்டுள்ளார். நாவலரது முதலாம், இரண்டாம், நான்காம் பால பாடங்கள் என்று அவரால் எழுதப்பட்ட சைவசமய நூல்வரிசைகளை நோக்குமிடத்து; அவர் சைவசமய அறிவையும் அதன்பின் சைவசித்தாந்த அறிவினையும் பாமர மக்களதும், படித்தவர்களதும் அறிவின் படித்தரத்தினையொட்டி படிப்படியான விளக்கங்களைப் பெற்றுக் கொள்ளும் பாண்மையிலே, ஒரு தத்துவப்பள்ளிக்குரிய ஆரம்ப நூல்களாக அவற்றினை அமைத்துக் கொடுத்த திறமையினை பலரும் வியந்து பாராட்டாமல் இருக்க முடியாது.

நாவலருக்குச் சிவஞான சித்தியாரில் இருந்த ஈடுபாடும் அளப்பரியது. சித்தியாரின் பதி இலக்கணம் பற்றிய பகுதிகள் அவரது மனதினைப்பெரிதும் கவர்ந்திருந்ததுடன்; கிறிஸ்துவப் பாதிரிமார்கட்கும் அந்த நூலிலே பெரிதும் ஆர்வம் இருந்தது என்பதனை 'பதி இலக்கணம் பைபிளிலே எங்கே சொல்லப்பட்டுள்ளது. சைவருடைய சிவஞான சித்தியாரைப் பார்த்தாலன்றோ பதி இலக்கணம் இனிது விளங்கும்' என ஒரு கிறிஸ்துவப் பாதிரியார் வாய்மொழி



யாகவே எடுத்துக்காட்டியுள்ளார். கிறிஸ்தவப் பெருமக்களும் அறியுமளவிற்கு நாவலர் காலம் சைவசித்தாந்த மரபானது அக்காலத்தில் யாழ்ப்பாணத்திலே வேரூன்றியிருந்தது என்பதற்கு மேற்குறிப்பிட்ட கூற்று சிறந்த எடுத்துக்காட்டாகும். நாவலரது 'நான்காம் பாலபாடம்' என்ற நூலானது சைவசித்தாந்தம் கூறும் 'பாசங்கள்' எனப்படும் மாயாமலகாரியங்கள் பற்றியும், ஆன்மாக்களது இருவினைகள், கன்மம், மறுபிறவி. பற்றியும் மெய்கண்ட சாத்திரங்களின் கருத்துக்களைத் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளது.

நாவலர் பாடசாலைப் பிள்ளைகட்கு என்று எழுதிய பாட நூல்கள் அனைத்திலும் மாணவர்கட்குச் சித்தாந்த அறிவினைப் புகட்டுமுகமாகச் சமயக் கோட்பாடுகளையும் தத்துவக் கருத்துக்களையும் இலகுவான வசன நடையிலே பால பாடங்களாகவும் சைவ வினாவிடைகளாகவும் உருவாக்கினார். இவற்றிலே எல்லாம் வேத சிவாகமக் கோட்பாடுகளை அறிமுகப்படுத்துவதே அவரது முக்கிய குறிக்கோளாயிற்று. சைவசித்தாந்தக் கோட்பாடுகளை வேத சிவாகம அடிப்படையிலே அனைவருக்கும் கற்பிக்க விரும்பிய நாவலர் சிதம்பரத்திலே ஒரு வேதாகம பாடசாலையையும், சைவ மடத்தையும், நிறுவுவதற்கு முயற்சிகள் எடுத்தவர். 'சமய சாத்திரக் கல்வி தகுந்த முறையிலே போதிக்கப்படாமல் இருந்து வருவது குறித்தே நாவலர் இவ்வாறு வேதாகம பாடசாலையை நிறுவ முயன்றார்' என யாழ்ப்பாணத் தமிழ்ப் பேராசிரியர்களில் ஒருவரான செ. தனஞ்செயராஜசிங்கம் என்பார் இதனை எடுத்துக் காட்டியுள்ளார். சைவ சித்தாந்த மரபினை ஈழத் தமிழ் மக்களிடையே நிலை பெறச் செய்யும் முயற்சியிலே சைவ சமயம், தத்துவம் சார்ந்த நூல்கள் அனைத்தையும் ஓரளவு நாவலர் பயன்படுத்தினார். வேத நூல்கள், உபநிடத நூல்

களுடன், தருக்கசங்கிரகம், உபமான சங்கிரகம், பிரயோக விவேக உரை என்னும் தருக்க நூல்கள் பலவற்றையும் பரிசோதித்துப் பதிப்பித்தார். தேவாரம், திருவாசகம், ஸ்மிருதி நூல்கள், இதிகாசம், புராணங்களில் கந்த புராணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், சிவாகமங்கள், மெய்கண்ட சாத்திரங்கள் முதலிய நூல்களிலுள்ள சித்தாந்தக் கோட்பாடுகள், முப்பொருள் உண்மை பற்றிய விளக்கங்கள் யாவும் நாவலரது உரை நூல்களிலும், கண்டன நூல்களிலும், சுயநூலாக்கங்களிலும் ஏராளமாகக் காணப்படுகின்றன. இவற்றுள் 'சுப்பிரபோதம்' என்ற கண்டனப் பிரசுரம் சிவசக்தி தத்துவம் பற்றியும், திருவிளையாடற் புராண வசனம், திருத்தொண்டர் புராண வசனம் என்ற நூல்களில் பதி இலக்கணம் பற்றியும், 'சைவதூஷணபரிகாரம்' என்ற நூலிலே 'பதிப்பிரகரணம்' பற்றியுமாக மெய்கண்ட சாத்திரங்கள் கூறும் சித்தாந்தக் கோட்பாடுகள் நாவலரால் மிகத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

யாழ்ப்பாணத்திலே மட்டுமல்ல தென்னகம் - தமிழ் நாட்டிலும் நாவலர் நிகழ்த்திய பல பிரசங்கங்கள் சைவ சித்தாந்தக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு நிகழ்த்தப்பட்டவையாகும். அவற்றிலே மதுரை மீனாட்சியம்மை சந்நிதானத்திலும், திருவண்ணாமலை யாதீனத்திலும், திருவாவடுதுறை யாதீனத்திலும் நாவலரால் நடத்தப்பட்ட பிரசங்கங்கள் மிகவும் புகழ் பெற்றவையாகும். சைவ சித்தாந்த முதல் நூலான சிவஞான போதத்திற்கு சிவஞான முனிவரால் எழுதப்பட்ட சிவஞான மாபாடியம் நாவலரின் மனதினைக் கவர்ந்த ஒரு நூலாகும். அதனால் மாபாடியம் விருத்தியுரையினையும், சிவஞானப் போதச் சிற்றுரை என்ற நூலையும் பரிசோதித்துப் பதிப்பித்தார்' ஆறுமுகநாவலரின் இந்த அரியப்பணி ஈழத்தமிழ்ச்



சைவ உலகிலே அவருக்குச் சித்தாந்த வளர்ச்சியிலே மேலான இடத்தினைப் பெற்றுக் கொடுத்தது. நாவலர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களை அச்சேற்றியும், பதிப்பித்தும், உரை எழுதியும், சுயநூல்கள் பலவும் கூட எழுதி வெளியிட்டபோதும்; சைவசித்தாந்தம் பற்றிய தமது சிந்தனைகளை ஒரு தனி நூலாக வெளியிடாது - அந்தத் தத்துவக் கொள்கைகளையெல்லாம் இயன்றவரை தம்மால் வெளியிடப்பட்ட சகல நூலாக்கங்களிலும் விபரித்து விளக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இவற்றினை நோக்குமிடத்து நாவலருக்குச் சைவசித்தாந்தம்பற்றித் தனி நூல் எழுதுவதனைவிட எல்லா வழிகளாலும் ஈழத்தமிழ்ச் சைவரிடையே அவற்றைப் பரப்புவதே அவரது பிரதான நோக்கமாக இருந்தமை புலனாகும். அவர் வாழ்ந்த காலச் சூழலும் அன்னியராட்சியும், கிறிஸ்தவ மதப்பிரசாரத்திற்கும் மத்தியிலே சொந்தச் சமயத்தையும் தத்துவத்தையும் அழியாமல் பாதுகாத்து தொடர்ந்தும் அவற்றினை நிலைபெறச் செய்வதனையே நாவலர் தன் வாழ்நாளில் பெரும் பணியாக ஏற்றுக் கொண்டு பாடுபட்டவர் எனவும் கூறமுடியும். சைவசித்தாந்தம் பற்றிய சுயநூலாக்கத்தைக் காட்டிலும் அத்தத்துவ சிந்தனை மரபினை தமது எல்லா நூல்களின் வாயிலாகவும் அறிமுகப்படுத்தினார். நாவலர் தமிழுக்கும் இதே போன்று பணி செய்தவராயினும் சைவசித்தாந்தக் கோட்பாட்டிலே நாவலரது சிந்தனைகளை வெளிப்படுத்துவதே இவ்விடத்திலே முக்கிய குறிக்கோளாதலால் அவரின் ஏனைய சிறப்பியல்புகள் இங்கு எடுத்துக் காட்டப்படவில்லை. தமிழ் இலக்கியம், இலக்கணம், நிகண்டு, அகராதி போன்ற பலதுறைகளிலும் நாவலருக்கு இருந்த அளப்பரிய ஈடுபாட்டையும் ஆர்வத்தையும் அவரது நூல்கள் அனைத்திலும் காணலாம். பழமைபேணும் மரபு நாவலரது நூலாக்கங்கள் யாவற்றிலும்

பேணப்பட்டு வந்துள்ளது. நாவலரது படைப்புக்களிலே பதிப்புக்களிலே உரைநூல்களிலே மற்றும் பிறவற்றிலும் எல்லாம் நாவலரின் தத்துவமரபின் கருத்தாழத்தை ஆளுமையைக் காணுகின்ற அதேவேளையிலே அவற்றிலே மாற்றம். புதுமை என்ற சிந்தனைகளைவிட அந்த தத்துவக் கோட்பாட்டினை உள்ளது உள்ளபடியே கட்டிக் காப்பதிலேயே நாவலர் கண்ணும் கருத்துமாய் இருந்து அதிக கவனம் செலுத்தியுள்ளார். அவர் வாழ்நத காலச் சூழ்நிலை அத்தகையதொரு தேவையினை அவருக்குத் தோற்றுவித்திருந்ததே அதற்குக் காரணம் எனலாம்.

நாவலர் சைவசித்தாந்தக் கோட்பாட்டினை விளக்கிப் பிரசாரம் செய்து அவை தொடர்பான நூல்கள் பலவற்றினை வெளியிட்டதன் விளைவாகத் தமது மாணவர் பரம்பரையினரிடையே புதியதொரு விழிப்புணர்வினைத் தோற்றுவிப்பதற்கும் அவரது கருத்துக்கள் மிகவும் தூண்டுகோலாக அமைந்தன. இப்படியாகத் தமது இலட்சியம், கொள்கை, குறிக்கோள் என்பனவற்றைப் பின்பற்றி வாழநினைக்கும் அனைவருக்கும் ஈழத்தமிழரிடையே அவர் ஒரு முன்னோடியாகவும், வழிகாட்டியாகவும் திகழ்ந்தார். 'நாவலர் வரலாற்றுப் பெருகுனர். 19ம் நூற்றாண்டிலே தமிழ்ச்சமுதாயத்திற்கு அவசியமாயிருந்த சில கருமங்களை நிறைவேற்றியவர். நன்கு ஆற்றப்பட்ட அக்கருமங்கள் பிறருக்கு ஆதர்சமாய் அமைந்தன' என்ற இலக்கிய கலாநிதி, பண்டிதமணி அவர்களது குறிப்புரையானது பிற்காலம் ஈழத்திலே தோன்றிய பல தமிழ்ச் சைவ அறிஞர்கட்கு நாவலர் ஒரு ஆதர்சபுருசராய் விளங்கியவர் என்ற பெருமையினை பறைசாற்றி நிற்கின்றது.

இவ்வாறாக ஈழத்து யாழ்ப்பாணத்திலே சைவசித்தாந்



தமரபினை சைவசித்தாந்த சாத்திர நூல்களின் விதிப்படி அறிமுகப்படுத்தி - அந்தத் தத்துவத்தினை மரபிற்கமைய வளர்த்துக் கொடுத்தபணியிலே ஆறுமுக நாவலர் அவர்களின் பங்களிப்பும், சேவையும் ஈழத்தமிழரது சைவசமய வளர்ச்சியிலே மறக்கமுடியாத ஒரு வரலாற்றுக் காலமாக அமைந்துள்ளதெனலாம். நாவலர் அவர்கள் ஈழத் தமிழ்ச் சித்தாந்த வளர்ச்சியிலே ஏனையோர்களைவிட அதிகம் தொண்டாற்றியவர் - அவர் ஒரு சரித்திரம் - சகாப்தம் ஆகையினால் அன்னாரது பணிகளின் மதிப்பீடுகட்டு இக்கட்டுரையில் நீண்ட இடமளிக்கப்பட்டது.

**இலக்கணச் சுவாமிகள் : சபாபதி நாவலர் :**

ஆறுமுக நாவலரை அடுத்து வந்த அவரது மாணவ பரம்பரை மிக நீளமானது. ஞானப்பிரகாசர் போட்டு வைத்த சித்தாந்த வித்து நாவலர் மூலமாக பாரிய விருட்சமாக வளர்ந்து வந்ததுடன், அவரது மாணவ பரம்பரையினரிடையே சைவத்திலும் தத்துவத்திலும் புதியதொரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது. அவற்றின் பயனாக சித்தாந்த நூலறிவு வளர்ச்சியிலே குறிப்பாகச் 'சிவஞான பாடியம்' என்ற ஆராய்ச்சி நூலுடன் ஈழத்தமிழறிஞர் பலருக்கு நெருங்கிய பரிச்சயமுண்டாயிற்று. இத்துறையிலே சபாபதி நாவலரையும், இலக்கணம் முத்துக்குமாரசாமித் தம்பிரானையும் அறியாதவர்கள் இருக்க முடியாது. சபாபதி நாவலர் சிவஞான முனிவரது சிவஞானபாடியத்தை பதிப்பிக்கும் முயற்சியில் பெரிதும் ஈடுபட்டுத் தொண்டாற்றியவர். ஆயினும் அம்முயற்சியிலே வெற்றி கண்டவர் இலக்கணம் முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் என்றே கூறலாம். ஈழத்து யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சுவாமிகள் தமிழ்நாட்டில் சூரியனார் கோவிலாதீனத்தில் பலகாலம் தங்கியிருந்து சித்தாந்தப் புலமை

யினை வளர்த்துக் கொண்டவர்கள். அக்காலத்திலே சுவாமிகட்கு சிவஞான மாபாடியத்திலே பேரார்வம் ஏற்பட்டது. சபாபதி நாவலர் இந்த நூலினைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்ட போதும் 'சிவஞானமாபாடியம் முழுவதையும் பரிசோதித்து அச்சிட்டுப் பதிப்பித்த பெருமை முதன் முதலாக இலக்கணச் சுவாமிகளையே சாரும்.

தவத்திரு முத்துக்குமார சுவாமிகளே சிவஞான போதத்திற்கும் காலத்தால் முற்பட்ட சைவ சித்தாந்த நூலான 'ஞானாமிர்தம்' என்ற நூலினைப் பற்றியும் அந் நூல் திருவாலீஸ்வரம் என்ற இடத்திலே இயற்றப்பட்டதாகவும் திருவாய் மலர்ந்ததாக 'ஞானாமிர்தம்' என்ற நூலிற்கு உரை எழுதியுள்ள உரையாசிரியர்[1] திரு. இரா. சங்கரனார் அவர்கள் குறிப்பிட்டுள்ளமை யாவரும் அறிந்ததே. இலக்கணச் சுவாமிகள் பற்றி 1968ம் ஆண்டு மீண்டும் சிவஞானபாடியத்தைப் பதிப்பித்த திருநெல்வேலி - சைவ சித்தாந்த நூல் வெளியீட்டுக் கழகத்தினர் அந்த நூலிற்கான தமது பதிப்புரையிலே தமது கழகத்தினர் இலக்கணச் சுவாமிகட்கு என்றும் கடப்பாடுடையவர்கள் எனக் குறிப்பிட்டிருப்பதி[2]லிருந்து சுவாமிகளின் சித்தாந்தத் தொண்டினை அனைவரும் மதிப்பிட முடியும். சிவஞானபாடியம் 1921 ஆண்டிலே முதன் முதல் சுவாமிகள்

1) வாகீச முனிவர்., ஞானாமிர்தம் மூலமும் உரையும், உரையாசிரியர், வித்வான். அம்பை. இரா. சங்கரனார் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1984 முன்னுரை, பக். Viiii.

2) சிவஞானமாபாடியம், சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1968, பதிப்புரை, பக். 5-6.



சூரியனார் கோயிலாதீன மகாசந்நிதானமாக இருந்தபோது அச்சிட்டு வெளி வந்தமை ஈழத் தமிழருக்கும் சித்தாந்த வளர்ச்சியில் பெருமை சேர்ப்பதாகும். அது மட்டுமின்றி சிவாக்கிரக யோகிகளது கிரியாதீபிகை, சைவ சன்னியாச பத்ததி, முத்தி நிச்சயம், போன்ற நூல்களையும் பரிசோதித்து உதவினார்கள்.

சுவாமிகளைப் போன்று சித்தாந்த வளர்ச்சியிலே சபாபதி நாவலரும் மறக்க முடியாதவர்களுள் ஒருவர் எனலாம். திருவாவடுதுறை யாதின வித்துவானாகவும் இருந்து இவர் ஈழத் தமிழருக்குப் பெருமை சேர்த்தவராகவும் விளங்கியவர். "திராவிடப் பிரகாசிகை" என்பது இவரது நூல்களில் ஒன்றாகும். 'சிவஞான சுவாமிகள் உரைச் செய்யுள்' என்ற நூலினை சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் வெளியிட்டபோது அந்த நூலிற்குச் சிறப்பான வரலாறு ஒன்றினை எழுதிக் கொடுத்துள்ளார்.[1] இப்படியாக நாவலரின் பின்னர் யாழ்பாணத்திலே சைவமும் சித்தாந்தமும் வளர்ச்சியடைந்து நிலை பெறுதற் பொருட்டுப் பணியாற்றியவர்களிலே மேலும் சுவாமி நாத பண்டிதர், சுன்னாகம் குமாரசாமிப் புலவர், கதிரை வேற்பிள்ளை, காசி வாசி செந்திநாதையர் எனப் பெயர் பட்டியல் நீண்டுகொண்டே செல்லும். 1985ம் ஆண்டு பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்கள் காலம் வரை மாணவர் பரம்பரையின் தொடர்ச்சி காணப்பட்டது.

**காசிவாசி, செந்திநாதையர் :**

ஈழத்திலே சைவ சித்தாந்த மரபினை வேரூன்றச்

1) சிவஞான சுவாமிகள் உரைச் செய்யுள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, துந்துபிவருசம், (1936), நூல் வரலாறு பக். 1-12.

செய்தவர்களில் காசிவாசி. செந்திநாதையர் என்பார் குறிப்பிடத்தக்க செல்வாக்குப் பெற்றிருந்தவர். 'சைவ சித்தாந்த ஞானபானு' 'சித்தாந்த சிகாமணி' எனப் பல சிறப்புப் பெயர்களைப் பெற்றதிலிருந்தே ஐயரவர்களின் பணியினை பலரும் விளங்கிக் கொள்ள முடியும். இவர் இயற்றிய நூல்களில் சைவ வேதாந்தம், தேவாரம் வேத சாரம், என்பன பெரிதும் அறிஞரால் போற்றப்படுவன. ஐயரவர்களின் பணிகளில் தலையாயதும் மறக்க முடியாத துமாக விளங்குவது நீலகண்ட சிவாச்சாரியாரால் பிரம சூத்திரத்திற்கு சைவபரமாக எழுதப்பட்ட 'சிவாத்துவித சைவ பாடியம்' என்ற நூலினைத் தமிழிலே மொழிபெயர்த் திருத்தலாகும். இந்நாலிற்கு இன்றுவரை வேறு நூல்விளக் கங்களோ, மொழி பெயர்ப்புகளோ எழுந்ததாக அறியமுடிய வில்லை. பிலவங்கவருடம் 1901 ம் ஆண்டு ஐயரவர்களின் இந்த மொழிபெயர்ப்பு வெளியிடப்பட்டது. யாழ்ப்பாணம் இணுவில் என்ற ஊரைச் சேர்ந்த நடராஜ ஐயர் என் பார் ஐயரவர்களின் 'நீலகண்ட பாஷ்யம்' என்ற அந்த மொழி பெயர்ப்பினைப் பதிப்பித்தார். ஞானப் பிரகாசரது சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு எழுதப்பட்ட உரையும் யாழ்ப்பாணத்திலே நடராஜ ஐயர் அவர்களால் பதிப்பிக் கப்பட்டதாகும். செந்திநாதையர் அவர்களின் 'சைவ வேதாந்தம்' என்ற நூல் 1920 ம் ஆண்டு ஸ்ரீ ராமச்சந்திர விலாசத்தாரால் மதுரையில் வெளியிடப்பட்டது. இவை தவிர 'கந்தபுராண நவநீதம்' என்ற ஒரு நூலையும் செந்தி நாதையர் இயற்றியுள்ளார். இந்த நூலிலே சைவசித்தாந் தக் கருத்துக்கள் பலவற்றை விளக்கி எழுதினர்.

ஐயரவர்கள் தமது நூல்களிலே பெரும்பாலும் வேதாந்த சித்தாந்தக் கருத்துக்களை ஒருமைப்படுத்தி விளக் கம் காண முயன்றுள்ளமை புலனாகின்றது. சிவபிரகாசம்



கூறியது போன்று 'வேதாந்தத் தெளிவு சைவ சித்தாந்தத் திறன்' என்பதே செந்திநாதையரது நாட்டமாக இருந் தது. இக் கருத்தோட்ட சிந்தனைகளையே அவரது சைவ வேதாந்தம், தேவாரம் வேதசாரம், என்ற நூல்கள் பெரி தும் விளக்கம்முயன்றுள்ளன எனவும் கூறலாம். ஈழத்து சைவசித்தாந்த வளர்ச்சிக் கட்டத்திலே செந்திநாதையர் அவர்களை ஈழத்தமிழ் சித்தாந்த வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டு உழைத்தவர் என்று சொன்னாலும் அது பொருந்துவதாகும். செந்திநாதையர் வாழ்ந்த சமகாலத் திலே வாழ்ந்தவர் திரு ச. சபாரத்தின முதலியார் என் பவராவர்.

இநத அறிஞரும் சைவசித்தாந்தத் துறையிலே பெரி தும் ஈடுபாடு கொண்டிருந்த அறிஞராவார். இவரால் சைவசித்தாந்தம் தொடர்பாக எழுதப்பட்ட ஒரு ஆங்கில நூல் மிகவும் சிறப்பு வாய்ந்தது. மெய்கண்டான் அச்ச கத்தாரால், 191 ம் ஆண்டு சென்னையில் இந்த நூல் வெளி யிடப்பட்டுள்ளது.[1] இந்த ஆங்கில நூலானது இந்து சம யத்தின் பெருமையினையும் சைவசித்தாந்த தத்துவத்தின் சாரத்தினையும் பெரிதும் விளக்குவதாக அமைந்தது என லாம். அதே போன்று சித்தாந்த உலக உற்பத்திக் கோட் பாட்டை விளக்கம் செய்வது போன்று 'பிரபஞ்ச விசாரம்' என்ற ஒரு தத்துவ நூலும் இந்த அறிஞரால் எழுதப்பட் டது குறிப்பிடத்தக்கது. இதில் இரண்டு பகுதிகள் உள் ளன. சே. வே ஜம்புலிங்கம்பிள்ளை என்பார் 1918 ம் ஆண்டு சென்னையில் இந்த நூலினைப் பதிப்பித்துள்ளார்.

---

1. Sabaratnamudheliyar, S., Essential of Hinduism in the ligtht of Saivasiddhanta, Meikandan Press, Madars, 1913.

இவர்களைத் தவிர 20ம் நூற்றாண்டின் முற்பகுதியிலே சைவ சித்தாந்தத்துறையிலே பெரிதும் ஈடுபாடு கொண்டு செயலாற்றிய இன்னும் பல அறிஞர்கள் இருக்கின்றனர். நீர் வேலி சங்கரபண்டிதர், அச்சுவேலி. குமரசாமிக் குருக்கள் பலரும் இவ்விடத்தில் நினைவு கூர வேண்டியவர்களாவார்கள்.

**திருவிளங்கதேசிகர் :**

யாழ்பாணத்திலே சைவசித்தாந்த சாத்திரங்களில் நாவலருக்கு அடுத்த பயிற்சி வாய்ந்த புலமையாளராக விளங்கியவர்களிலே மு. திருவிளங்க தேசிகர் என்பவரையும் ஒருவராகக் கூறலாம். இவர் யாழ்ப்பாணத்திலுள்ள மானிப்பாய் என்ற கிராமத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். வட்டுக் கோட்டை யாழ்பாணக் கல்லூரியிலும் கொழும்பு சென்தோமஸ் கல்லூரியிலும் கல்விபயின்ற இவ்வறிஞர் முதலில் ஆசிரியராக இருந்து பின்னர் வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டவராவர். பாரம்பரிய மிக்க சைவாசாரக் குடும்பத்திலே தோன்றியவராதலால் சைவ நூல்களிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் ஆழ்ந்த புலமை பெற்றிருந்தமையினை அவரால் எழுதப்பட்ட உரை நூல்கள் உணர்த்துகின்றன. ஈழத்து சைவ சித்தாந்த வளர்ச்சியிலே மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றாகிய சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கும், சார்பு நூலாகிய சிவப்பிரகாசத்திற்கும் புத்துரைகளை எழுதிய பெரும் சித்தாந்த அறிஞரில் ஒருவராகத் திகழ்ந்தார். இவரது உரை நூல்கள் சித்தாந்தம் கற்கும் மாணவர்கட்கு ஏற்படும் தெளிவின்மையையும் சிக்கல்களையும் நீக்குவதாக அமைந்திருந்தன. பழையவுரைகளைக் கற்றற்கு இலக்கிய இலக்கணவளவை நூலுணர்வும், நுண்ணறிவும் வேண்டப்படுவதால் இந்நாட்களிற் பெரிதும் பயன்படாமை



கண்டு, எளிதான நடையுள்ள ஒருரை இன்றியமையாதெனக் கண்ட திருவிளங்க தேசிகர் இவ்வுரையை எழுதினார்[1] எனச் சைவப் பெரியார் சிவபாத சுந்தரனார் கூறியமை அன்னார் உரைநூற் சிறப்பிற்குத் தகுந்த எடுத்துக் காட்டாகும். பொழிப்புரைகட்கு விளக்கம் தருவதும், செய்யுட் பொருளைத் தொகுத்துத் தருவதும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை ஆங்காங்கு தொடர்புபடுத்துவதும் மிகத் தெளிவு கொடுப்பனவாயமைந்துள்ளன.

'காலப் போக்கிற்கு இயைந்த நல்ல உரைக்கு ஓர் எடுத்துக்காட்டு, 'சித்தியாரின் புத்துரை' எனப் பண்டிதமணி கணபதிப்பிள்ளையவர்களும் திருவிளங்க தேசிகர் அவர்களின் சித்தியார் உரையினைப் பாராட்டியுள்ளார்.[2] திருவிளங்க தேசிகரது சிவப்பிரகாச உரை அதன் பழைய உரைகளாகிய மதுரைச் சிவப்பிரகாசரதும், காஞ்சிபுரம் இலக்கணம் சிதம்பரநாத முனிவர் செய்த உரைகளையும் தழுவி எழுதப்பட்டனவாகும். பொருள் விளங்காதவிடத்து இந்நூல்கட்குப் பதவுரையும், குறிப்புரையும், பொழிப்புரையும் புதிதாக ஆசிரியரால் சேர்க்கப்பட்டுள்ளன. அவரது குறிப்புரைகள் சிவஞான பாடியம், சித்தாந்த சாராவலி, பௌஷ்கரம், மிருகேந்திரம் முதலிய ஆகம நூல்களையும் அதன் கருத்துக்களையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன. இந்நூல்களைக் கற்பவர்கட்கு உதவியாக நூலுடன் விடய அகராதியும், அரும் பதவுரையும் சேர்க்கப்பட்டுள்ளன. சிவப்பிரகாச உரையினை படிப்

---

1) சிவஞான சித்தியார், சுபக்கம், புத்துரை மு. திருவிளங்கம், உரைச் சிறப்பு, பக். 2.
2) மேற்படி, அணிந்துரை, பக். IX.

போர் சிந்தியாரையும், ஏனைய சித்தாந்த சாத்திரங்களை யும் விளங்கிக் கொள்ளுமாறு அவ்வுரைகள் அவ்வளவு தெளிவாக அமைக்கப்பட்டுள்ளன. திருவிளங்க தேசிகர் அவர்கள் சித்தாந்த சாத்திரங்கட்கு மட்டுமின்றி கந்தர லங்காரம், திருப்புகழ்திரட்டு, கந்தபுராண நவநீதம், போன்ற பல நூற்கட்கும் புத்துரை எழுதிவெளியிட்ட வராவார். அன்னாரது சைவ சித்தாந்தப்பணி ஈழத்து சித்தாந்த வளர்ச்சியிலே ஒரு வரலாற்றுச் சிறப்பு மிக்க காலகட்டமாகும். இப் பெரியாரின் வாழ்க்கை வரலாற் றுச் சுருக்கத்தை எழுதிய இளமுருகனார் அவர்கள்[1] 'திரு வருட் பதிவினால் அவரிடம் விளங்கிய உள்ளொளியே இவ்வாறு உண்மைப்பொருள்களை உணர்த்தியதெனலாம்' எனக் குறிப்பிட்டுள்ளமை திருவிளங்க தேசிகர் அவர்க ளின் உரை நூல்களைப் பொறுத்தவரை முற்றிலும் பொருத்தமானதென்றே கூறலாம்'

**யாழ், கூட்டுறவுதமிழ் நூற்பதிப்பு விற்பனைக்கழகம்:**

இந்த சந்தர்ப்பத்திலே இன்னொரு விடயத்தையும் இங்கு குறிப்பிடுதல் பொருத்தமானதாகும். 'யாழ்ப்பாணம் கூட் டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம்' என்ற பெய ரிலே ஒரு நிறுவனம் 20 ம் நூற்றுண்டின் ஆரம்பத்திலி ருந்து சைவ சித்தாந்த சாத்திர நூல்களை பதிப்பித்து வெளியிடுவதில் பெரும் ஆர்வம் கொண்டு உழைத்து வந் துள்ளது. திரு. சி. சிவகுருநாதன் என்பவர் இக்கழகத்தின் தலைவராக விளங்கினார். திருவுந்தியார், உண்மை விளக்

1. மு. திருவிளங்க தேசிகரது வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் 'சித்தியார் புத்துரை' என்ற நூலிலே பண்டி தர். சோ. இளமுருகனார் என்பவரால் எழுதப்பட்டுள் ளது.



கம், என்ற இரண்டு சித்தாந்த நூல்கள் முதல் முதலாக இக்கழகத்தினரால் பதிப்பித்து வெளியிடப்பட்டன. திரு விளங்க தேசிகர் எழுதிய புத்துரையுடன் சிவப்பிரகாசம் என்ற நூலானது 1918 லும் பின்னர் 1933 லும், அடுத்து 1971 ம் ஆண்டிலுமாக இக் கழகத்தினரால் வெளி வரும் பேறுபெற்றது. 'கந்தரலங்காரம், சித்தியார், சிவப்பிரகாசம் என்னும் இவைகட்குத் தேசிகர் தந்த உரைகள் மறைந்து விடுமோ என ஏக்கம் கொண்ட சமயத்திலே சைவ மரபு காத்த தாதை, மூதாதையர்களைப் பின்பற்றி திரு. சி. சிவ குருநாதன் அவர்கள் கூட்டுறவுக் கழகம் மூலம் தேசிகர் அவர்களின் உரைகளை வெளிப்படுத்தித் தம் மரபைப் பேணியது பாராட்டியமையாது'[1] என்ற வாழ்த்துரையினை அன்னார் பெற்றிருப்பதிலிருந்து இக்கழகத் தலைவரின் பணி யின் இன்றியமையாத தேவையினையும் உழைப்பையும் அனை வரும் உணரமுடியும். சிவஞான சித்தியார் சுபக்கத்திற் குத் திருவிளங்க தேசிகர் அவர்கள் எழுதிய புத்துரையும் கூட்டுறவுக் கழகத்தினரால் 1971 ல் பதிப்பிக்கப்பட்டது. இத்தக் கழகத்தின் பெருமுயற்சிகளில் மிக உயர்ந்த பணி இந்த நூலையும் அவர்கள் வெளியிட்டமையாகும். இக்கழகத் தினரின் இடையரு முயற்சியினால் ஈழத் தமிழருக்குச் சைவ சித்தாந்த சாத்திரங்களைச் சுலபமாகப் பெற்றுப் பயன்பெற வும் முடிந்தது. 'தென் இந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்' போன்று இந்த 'யாழ்ப்பாணம் கூட்டு றவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகமும்' ஈழத் தமிழ ருக்குச் சித்தாந்த தத்துவ மரபினை வளர்க்கும் முயற்சி லே பெரிதும் ஈடுபாடும், அக்கறையும் கொண்டிருந்த

1. சிவப்பிரகாசம், புத்துரை, திருவிளக்கம். மு., அணிந் துரை, பக். 1. பண்டிதமணியவர்களால் எழுதப்பட் டது.

போதும் நாட்டிலே, பிற்காலம் ஏற்பட்ட பல இடையூறுகள் இன்னல்கள் காரணமாக இந்நிறுவனத்தாரின் பணிகள் தொடர முடியாமல் இருப்பதும் மிகவும் கவலைக்குரிய விடயமாகும்.

**கலாநிதி பொன்னையா :**

1950ம் ஆண்டின் பின்னர் ஈழத்துச் சைவ சித்தாந்தத் துறையிலே ஒரு புதிய பரிணாமம் ஏற்பட்டது. ஈழத் தமிழரான யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த கலாநிதி. பொன்னையா என்பவரால் பல்கலைக்கழக அளவிலே சைவ சித்தாந்த தத்துவ ஆராய்ச்சிகள் முதன் முதலாக மேற்கொள்ளப்பட்டதாக அறிய முடிகிறது. கலாநிதி. வி. பொன்னையா அவர்கள் சைவ சித்தாந்த அளவையியல் 'தொடர்பாக தமிழ் நாட்டிலே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மேற்கொண்ட ஆய்வின் பயனாக ஒரு ஆங்கில நூலினை வெளியிட்டுப் பெரும் புகழினை அடைந்தவராவார்.[1] சைவ சித்தாந்த தத்துவத் துறையிலே பல்கலைக் கழக அளவிலே ஆராய்ச்சி மேற்கொண்டு நூல் வெளியிட்ட சிறப்பு கலாநிதி பொன்னையா அவர்களையே சாரும் எனலாம். சைவப் பெரியார் சு. சிவபாத சுந்தரனார் என்பாரும் சைவ சித்தாந்த சாத்திரங்களில் அதிகம் ஆர்வம் கொண்டு நூலாக்கங்களையும் செய்திருக்கின்றார். இவர் யாழ்ப்பாணம் புலோலியூரைச் சேர்ந்தவர். இவ்வறிஞரால் எழுதப்பட்ட 'திருவருட்பயன்' என்ற சித்தாந்த நூலிற்கான உரை மிகவும் எளிமையானதும் இலகுவானதும் அனைவராலும் எளிதிலே விளங்கிக் கொள்ளக் கூடியதுமாகும். இந்து சமயத்தின் பெருமைகளையும் சைவ

1. Ponnaiah, Dr. V. Svivasiddhanta Theory of Knowledge, Annamalai University 1952.



சித்தாந்தத்தின் சிறப்பான சிந்தனைகளையும் விளக்கி ஆங்கிலத்திலும் இப்பெரியார் எழுதிய நூல் ஒன்று இங்கிலாந்திலே அக்காலத்திலேயே வெளியிடப்பட்ட சிறப்பினையும் கொண்டிருந்தது.[1]

**ஏழாலை. மு. கந்தையா :**

தற்காலத்திலும் ஈழ நாட்டிலே பல தமிழ் கல்வியாளர்கள் சைவ சித்தாந்தத் துறையினை வளர்ப்பதிலே பெரிதும் சிரத்தை கொண்டு முயற்சிகள் செய்து வருகின்றனர். அத்தகையோரில் ஏழாலை என்னும் கிராமத்தைச் சேர்ந்த மு ஞானப் பிரகாசம் அவர்களைக் குறிப்பிடலாம். அவர் எழுதிய 'கர்மயோகம்' என்ற நூல் கீதையிலும் சித்தாந்த சிந்தனைகளைக் காண முடியும் என விளக்குகின்றது. இதே கிராமத்தைச் சேர்ந்தவர்கள் திரு. மு. கந்தையா என்ற அறிஞராவார். சைவ சித்தாந்த வளர்ச்சியிலே சிரத்தை கொண்டவர்களுள் ஒருவரான இவர்களால் எழுதப்பட்ட நூல் 'சித்தாந்தச் செழும்புதையல்[2] என்ற பெயரில் வெளி வந்திருக்கின்றது. இந்த நூல் சிவாகமங்களையும் அவை கூறும் சைவ சித்தாந்த விளக்கங்களையும் பெரிதும் கொண்டதாக அமைந்திருக்கின்றது. வடமொழி, தமிழ், ஆங்கிலமாகிய மொழிகளில் புலமை பெற்றுள்ள இவ்வாசிரியரின் நூல் சைவ சித்தாந்தம் பற்றிய சிவாகம தத்துவங்களை அறிய விரும்புவோர்க்கு ஒரு சுருக்கமான வழிகாட்டி நூலாக இருக்கின்றதெனலாம். 'சிவாகமங்கள் சித்தாந்தமாகும்' என்ற சாஸ்திர நூல்களின் சிந்த

1. Sivapadasundaram, S.. Saiva School of Hinduism George allen & unwin Ltd. London, 1934.
2. கந்தையா, மு., சித்தாந்தச் செழும்புதையல்கள், ஈழத்து சித்தாந்த வித்யா பீடம், யாழ்ப்பாணம், 1978.

னைகட்கமையுமாறு 'சித்தாந்தச் செழுப்புதையல்' என்ற நூலிலே சிவாகமங்கட்கும் சைவ சித்தாந்தத்திற்குமுள்ள தொடர்பும், பதி, பசு, பாச, விளக்கங்களும், மலம், மாயை, ஆன்மா இவற்றினது இலக்கணங்களும் சிறப்பாக ஆராயப்பட்டுள்ளன. சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை உள்ளது உள்ளபடி அறிந்து அவற்றினை வளர்ப்பதற்குத் தமிழ் மொழியறிவுடன் வடமொழியறிவும் இன்றியமையாதது என்னும் கருத்து இந்த நூலினைப் படிப்போர்க்கு உண்டாகும்.

**நல்லை ஞானசம்பந்தர் ஆதீனம் :**

மேலும் நல்லை ஞானசம்பந்தர் ஆதீன மகாவித்துவானாக இருந்த க. கணபதிப்பிள்ளை, மற்றும் க. சி. குலரத்தினம், திருமதி. ரத்தின நவரத்தினம், பண்டிதமணி. கணபதிப்பிள்ளை போன்ற பல அறிஞர்களும் சைவ சித்தாந்தத் துறையிலே ஈழத் தமிழரிடையே பெரும் பணிபுரியும் சிந்தையுடையவர்களாக விளங்கினார்கள். யாழ்ப்பாணம், நல்லூர் ஞானசம்பந்தர் ஆதீனமும், யாழ்ப்பாணம் 'சிவதொண்டன் நிலையம்' என்ற நிறுவனமும் கூடச் சைவ சித்தாந்தத்தை வளர்க்கும் முயற்சியிலே பெரிதும் ஆர்வமும், சிரத்தையும் கொண்டு விளங்கும் நிறுவன அமைப்புகளில் சிலவாகும். யாழ்ப்பாணம் நல்லை ஞான சம்பந்தர் ஆதீன மகா சன்னிதானமாக விளங்கும் ஸ்ரீ சுவாமி நாத தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகளது பெரு விருப்பினால் 'சித்தாந்த சைவ வித்யா பீடம்' என்ற ஒரு அமைப்பினை உருவாக்கி சித்தாந்த அறிஞர்கள் பலரின் சொற்பொழிவுகள் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த அமைப்பினால் சித்தாந்தம் தொடர்பாக எழுதப்பட்ட நூல்களும் சில வெளியிடப்பட்டு வந்தமை சிறப்பான பணியாக அமைந்தன. யாழ்ப்பாணம் 'சிவ தொண்



டன் நிலையம்' அக்காலத்திலிருந்தே 'யோகர் சுவாமிகள்' எனப்படும் யாழ்ப்பாணச் சித்த புருஷர் ஒருவருடன் நெருங்கிய தொடர்பினைக் கொண்டது மட்டுமின்றி சுவாமியவர்களின் கருத்துக்கள், பாடல்கள், போன்றவற்றினைத் தொகுத்து நூலாகவும் வெளியிட்டது.

**பண்டிதமணி அவர்கள்**

20ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே பெரும் சமய அறிஞராகவும் சிந்தனையாளராகவும் புகழ் பெற்று விளங்கியவர் பண்டிதமணி. மு. கணபதிப்பிள்ளையவர்களாவார். இந்த அறிஞரைத் தெரியாதவர்கள் மிகக் குறைவென்னலாம் இவர் எழுதிய நூல்களில் 'சமயக் கட்டுரைகள்', 'அத்வைத சிந்தனைகள்' என்ற நூல்கள் பிரபல்யமானவை. சைவ சித்தாந்தத்தின் 'அத்வைதம்' பற்றிய கோட்பாட்டினையும், வேதாந்தக் கருத்துக்களில் காணப்படும் சித்தாந்தக் கருத்தோட்டங்களை விளக்குவதாகவும் 'அத்வைத சிந்தனைகள்' என்ற நூல் அமைந்திருப்பதாகக் கொள்ளலாம். வைதிக நெறியிலே ஆறுமுக நாவலர் அவர்கள் வழி நின்று சைவ சித்தாந்த தத்துவத்தினை வளர்த்துக் கொடுத்த முயற்சியிலே ஈழத் தமிழரிடையே பண்டிதமணி அவர்கட்கும் என்றும் தனித்துவமான இடமுண்டு என்பதனை எவரும் மறுக்க மாட்டார்கள்.

தற்போதுள்ள சிக்கல் நிறைந்த சூழ்நிலையும் பல கஷ்டங்கள், அமைதியின்மை இவற்றிற்கும் மத்தியிலே சேவை நெறியும், அறநெறியும் தலைமேற் கொண்டொழுகி வரும் யாழ்ப்பாணம் தெல்லிப்பளையிலே உள்ள 'துர்க்கா தேவி ஆலய தேவஸ்தானம்' சிறப்புமிக்க ஒரு சக்திபீடமாகச் செயற்பட்டு வருகின்றது. அப்பீடத்துத் தலைமைப் பொறுப்பிலிருந்து தலை சிறந்த பணியாற்றி வருபவர் 'சிவத்

தமிழ்ச் செல்வி என்றழைக்கப்படும் செல்வி, தங்கம்மா அப்பாக்குட்டி அவர்களாவார். இவர்கள் சித்தாந்த சேவா நெறியினைப் பரப்பி சமூக சேவையாற்றுவதில் நிகரற்று விளங்குபவர்கள். சிவத் தமிழ்ச் செல்வியவர்கள் ஆதரவற்ற குழந்தைகள், பெண்கள், பலருக்கும், வைத்தியப் பணிகள் பலவற்றுக்கும் பற்பல உதவிகளைச் செய்திருப்பதைச் சைவ உலகம் நன்கு அறியும். இப்படி இலைமறை காயாக இன்றும் பலர் இருக்கவே செய்கின்றார்கள்.

## ஸ்ரீ லங்கா - யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் :

ஈழத்து வடபகுதியிலே அமைந்திருக்கும் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகமும் சைவ சித்தாந்தத் துறைக்கு உழைப்பதிலே பெரிதும் ஆர்வம் கொண்டுள்ள ஓர் உயர் கல்வி நிறுவனமாகும். அங்குள்ள பல்வேறு கல்வித் துறைகளிலே - கலைப் பீடப் பிரிவிலே 'இந்து நாகரிகத்துறை' என ஒரு துறை அமைக்கப்பட்டுப் பதினைந்து வருடங்கட்கும் மேலாகச் செயற்பட்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கவொன்றாகும். இப்பிரிவானது ஆரம்பத்திலே கொழும்புப் பல்கலைக் கழகத்தின் கலைப்பீடத் தமிழ்த்துறைப் பகுதியிலே ஒரு பிரிவாக இயங்கி வந்தது. 1975ம் ஆண்டிலே யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டதும் அங்கிருந்து பின்னர் யாழ்பல்கலைக் கழகத்திலே தனித் துறையாக அமைக்கப்பட்டு சிறப்பாக வளர்க்கப்பட்டு வருகின்றது. இந்துறையானது இதுவரை வேறெந்த வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களிலும் தனித்துறையாகச் செயற்பட்டிருக்கவில்லையென்பதும், அதன் சிறப்பும் தனித்துவமும் வட இலங்கை யாழ்பாணப் பல்கலைக் கழகத்திற்கேயுரிய தென்றால் அது மிகவும் பொருத்தமானதாகும். இந்தப் பல்கலைக்கழகமும் இந்து நாகரிகத்துறையும் சேர்ந்து சைவ



சித்தாந்த தத்துவ வளர்ச்சிக்காகப் பெரு முயற்சிகளை எடுத்து வருகின்றன. சைவ சித்தாந்த தத்துவம் ஒரு பாட நெறியாக இளங்கலை இந்து நாகரிகம் பயிலும் பட்டப் படிப்பு மாணவர்கட்கும், மற்றும் உயர் கல்விக்குரிய நெறியாகவும் சேர்க்கப்பட்டுள்ளது. அத்துடன் பட்ட மேற்படிப்புத் துறையிலே முதுமாணிப்பட்டத்திற்கான கல்வித் திட்டத்திலும் சைவ சித்தாந்தத்தின் சிறப்பான கோட்பாடுகளைத் தனியாராய்ச்சிக்காக எடுத்துக் கொண்டு உயர்கல்வித் தகைமை பெறுவதற்கான வசதிகளும் வாய்ப்புக்களும் கூட 'இந்து நாகரிகத் துறை' ஊடாக யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம் மேற்கொண்டு வருகின்றமையும் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறாக ஈழத்து சைவ சித்தாந்த வளர்ச்சியினைப் பற்றி இந்தக் கட்டுரைப் பகுதியிலே சுருக்கமாகப் பல விடயங்களைத் தகவல் அடிப்படையில் சுட்டிக் காட்ட முயன்றுள்ளோம். ஆதலால் சைவ சித்தாந்தத் துறைக்கு பணியாற்றிய மேலும் பல பேரை எம்மால் இக்கட்டுரையிலே அடையாளம் காட்ட முடியாது போயிருக்கலாம். அதற்கு காரணம் கட்டுரை அமைப்பின் சுருக்கமும் சரியான தகவல்கள் சேகரிக்க முடியாத வசதி குறைவினாலும் ஏற்பட்ட சிக்கலினாலும் அவை தவிர்க்கப்பட்டனவே தவிர வேறில்லை. ஆதலால் ஈழத்து சைவ சித்தாந்த வளர்ச்சியிலே 19 ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து-தற்காலம் வரை ஒரு சில குறிப்பிட்ட வளர்ச்சிக் கட்டங்கள் இங்கே கூறப்பட்டனவே தவிர அவை முழுமை பெற்றவை எனக் கூறுவதற்கில்லை. அதாவது ஈழத்து சைவ சித்தாந்த வளர்ச்சி பற்றிய சில முக்கியமான செய்திகளை அறிமுகப்படுத்துவதே இக்கட்டுரை எழுதிய தன் பிரதானமான நோக்கம் என்று கூறினாலும் அது பொருந்தும்.

**உதவிய நூல்கள் :**


1. ஆறுமுக நாவலர், க., சைவசமயநெறி. 8ம் பதிப்பு, சென்னை, 1955.
2. ஆறுமுக நாவலர், க., சைவவினாவிடை, 1ம் 2ம் புத்தகங்கள், சென்னை, 1954.
3. ஆறுமுக நாவலர், க., நான்காம் பாலபாடம், சென்னை, 1950.
4. கனகரட்ண உபாத்தியாயர், வே., ஆறுமுக நாவலர் சரித்திரம், யாழ்ப்பாணம், 1963.
5. கணபதிப்பிள்ளை, பண்டிதமணி, சி., 'ஆறுமுக நாவலர்' 'நாவலர் நூற்றாண்டு நினைவு மஞ்சரி', சாவகச்சேரி, 1979.
6. கைலாசபிள்ளை, த., ஆறுமுகநாவலர் பிரபந்தத் திரட்டு.
7. திருவிளங்கதேசிகர், மு., சிவஞானசித்தியார், புத்துரை, (சுபக்கம்) யாழ்ப்பாணம் கூட்டுறவு தமிழ் நூற்பதிப்பகம், 1971.
8. சிவஞானசுவாமிகள், சிவஞானமாபாடியம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு; சென்னை, 1968.
9. கந்தையா, மு, சித்தாந்தச் செழும் புதையல்கள், ஈழத்து சித்தாந்த சைவ வித்யா பீடம், யாழ்ப்பாணம், 1978


## நூலாக்கத்திற்குத் துணைபுரிந்த நூல்களின் பட்டியல்

**தமிழ்மூல நூல்கள் :**


| | |
|---|---|
| உண்மை விளக்கம் : | க. வச்சிரவேலு முதலியார் தெளிவுரையும், ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை எழுதிய ஆங்கில மொழி பெயர்ப்பும், கூட்டுறவுத்தமிழ் நூற் பதிப்பு, விற்பனைக் கழகம் யாழ்பாணம் 1971. |
| சிவஞான போதம் : | மெய்கண்டதேவர் பொழிப்புரையும், சிவஞான சுவாமிகள் சிற்றுரையும், ஆறுமுக நாவலர் பரிசோதித்துப் பதிப்பித்தது, சென்னை சர்வதாரி வருடம். |
| சிவஞான சித்தியார் : | மு. திருவிளங்கம் உரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1971. |
| சிவப் பிரகாசம் : | மு. திருவிளங்கம் உரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1974. |
| சிவஞானமாபாடியம், | சிவஞான சுவாமிகள், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1968. |

திருவருட்பயன், — சு. சிவபாத சுந்தரனார் உரை, சைவபிரகாசயந்திர சாலை. யாழ்ப்பாணம், எட்டாம் பதிப்பு, மன்மத வருடம்.

திருவுந்தியார் : — திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்.

திருமந்திரம் : — திருப்பனந்தாள் காசிமட வெளியீடு, ஸ்ரீவைகுண்டம், 1968.

திருவாசகம் : — ஈ. சுந்திர மாணிக்க லோகீஸ்வரர் உரை, வேப்பேரி பிரம்ம வித்யா சங்க வெளியீடு, சென்னை, 1929.

திருமுறை, — காரைக்கால் அம்மையார், வி. கல்யாணசுந்தர முதலியார் உரை, பாலன் பதிப்பு கழகம், சென்னை. 1947

பன்னிரு திருமுறைப் பெருந் திரட்டு, — ப. இராமநாதப்பிள்ளை, தொகுப்பாசிரியர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1961.


### வடமொழி மூல நூல்கள் :


காரணாகமம், — பூர்வபாகம், கௌ. சண்முகசுந்தர முதலியார் பதிப்பு, சிவஞானபோதயந்திர சாலை சென்னை 1900.


### ஏனைய தமிழ் நூல்கள் :


அம்பலவாண தேசிகர்(?) — சர்வஞானோத்தர ஆகமம், ஞானபாதம் தமிழ்மூலமும் முத்திரத்தினமென்னும் விருத்தியுரையும், ஸ்ரீ கோபாலவிநாயகர் பிரஸ், கும்பகோணம்.

இராசமாணிக்கனார், டாக்டர். மா., — சைவ சமய வளர்ச்சி, ஔவை நூலகம், சென்னை, 1958.

இராமானுஜச்சாரி. ர, — சைவ சித்தாந்தம், அண்ணாமலைப்பல்கலைக்கழகம், 1963

கைலாசநாதக் குருக்கள், கா., — வடமொழி இலக்கிய வரலாறு, கலா நிலையம், கொழும்பு, 1962.

கேசவபிள்ளை, டாக்டர், பி., — சித்தர்காப்பியம், திருநெல்வேலி, 1982.

சிவகுருநாதபிள்ளை, ந., — சிவஞான சித்தியார் ஆராய்ச்சி, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு, 1955.

சுந்தரமூர்த்தி, டாக்டர், கோ., — வடமொழி நூல்களிற் சைவ சித்தாந்தம், முதற் பகுதி, தத்துவப் பிரகாசமும் அதன் இரு உரைகளும், மதுரை, 1977.

சுந்தரமூர்த்தி, டாக்டர், கோ, வடமொழி நூல்களிற் சைவ சித்தாந்தம், இரண்டாம் பகுதி, வடமொழிச் சிவஞான போதமும், தட்சஞமூர்த்தி ஞானதேவர் அருளிய உரையும், சர்வோதய இலக்கியப்பண்ணை, 1979.

சுந்தரமூர்த்தி, டாக்டர், கோ., சைவ சமயம், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1977.

சொக்கலிங்கம், இலஞ்சி, ஆ., ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், முதற் புத்தகம், சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு, 1987.

சேக்கிழார், பெரியபுராணம், திருமூலநாயனுர் புராணம்.

மகாதேவன். ரி. எம்.பி., இந்துசமய தத்துவம், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1961.

மாணிக்கவாசகம், டாக்டர், இரா., நம் நாட்டுச் சித்தர்கள், (தமிழக அரசின் முதற் பரிசு பெற்ற நூல்) அன்னை அபிராமி அருளகம், சென்னை, 1982.

தேவசேனபதி, வ. ஆ., சைவசித்தாந்த அடிப்படைகள், சென்னைப் பல்கலைக்கழகம், 1982.

வேலுப்பிள்ளை, டாக்டர், ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி நிலையம், சென்னை, 1985.

வேலுப்பிள்ளை, டாக்டர், ஆ., தமிழர் சமயவரலாறு, பாரி நிலையம், சென்னை, 1980.


**அகராதிகள் :**


மதுரைத் தமிழ்ப் பேரகராதி., இ. மா., கோபாலகிருஷ்ணக்கோன் வெளியீடு, மதுரை, 1956.

கழகத்தமிழ் கையகராதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1976.


**பிரசுரிக்கப்படாத ஆய்வுக்கட்டுரை :**


கலைவாணி இராமநாதன்., 'இந்து தத்துவங்களான வேதாந்தமும் சைவ சித்தாந்தமும் காட்டும் கடவுட் கொள்கை - ஓர் ஒப்பியல் ஆய்வு' (முதுமாணிப் பட்டத்திற்காகச் சமர்பிக்கப்பட்டது) யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், ஸ்ரீலங்கா, 1981.


**ஆங்கில நூல்கள் :**


Arunasalam, M., Sivagamas (peeps into Tamil Culture Series N. 5) Kalashetra Press, Tiuvanmiyur, Madras, 1983.

Astapraharana, Edited by : N Krishnasastri, Devakottai. South India, Saiva Siddhanta Paripalana, Sangam, 1928.

Battacharya, T., The Cannons of Indian Art, Firma Mukkopadhyaya, K.L Calcutta, 1963.

Dunuwila. Rohan. A., Saiva Siddhanta Theology, Motilal Banarsldas, Madras, 1985.

Dasgupta, S N., A History of Indian Philosophy, Vol. V, The Southern Schools of Saivaism, Motilal Banarsidas, 1975.

Farquar, J. N., An outline of the Religious. Literature of India, Motilal Banarsidas, Delhi, 1967.

Griffith. Ralph, T. H , (Trans) The Hyms of Rig Veda, Vol. I Vol. II Chowhamba Sanskrit Series Office, Varanasi, 1963.

Mahadevan, T.M.P., The Idea of God in Saiva-Siddhanta, Srilasri Arulnandi Swamigal Endowmend Lectures, 1953, Annamalai University, Madras, 1955.

Marshal, Sir. John., Mohenjadaro and Indus Civilization, Vol. I, Indological Book house, Delhi, 1973.

Narayana Iyer, C.V., The Origin and early History of Saivaism of South India, University of Madras, 1936.

Paranjothi. Vilot., Saiva Siddhanta in the Meikanda Sastras. London, 1938.

Winternitze, M., A History of Indian Literature, Vol. I, Part. I, Calcutta, 1938.

## Unpublished Theisis :

Kailasanatha Kurru-kal, K., A study of Saivaism of Epic and Puranic periods, (Thesis for Degree of Doctor of Philosophy)

## Dictionary and Encyclopaedia :

Apte, V. S., A Students Sanskrit Dictionary, Wilson, H. H., Glossary of Indian terms, London, 1955.

Encyclopaedia of Religion and Ethics. ED: James Hastings, Newyork, Vol. V, 1912.

An encyclopaedia of Religious , Edited by : Vergillius Ferm.

# பிழை திருத்தம்

## முதல் அத்தியாயம்

| | | |
|---|---|---|
| வரி 4 | பக். 5 | பாஞ்சராத்திரம் எனவும் வாதமந்திரம் எனவும் படும் |
| வரி 14 | பக். 6 | இவ்வாருயினும் ஆகமங்கள் |
| வரி 19 | பக். 8 | சுந்தரமூர்த்தி நாயனுர் திருத்தொண்டர் தொகையில் |
| வரி- 1 | பக்.12 | ஆகமங்களும் மொழி மூலமும் |
| வரி 18 | பக் 13 | இருந்திருக்கலாம் |
| வரி- 3 | பக்.16 | சுட்டுகின்றன |
| வரி 13 | பக்.18 | சிவன் என்ற |
| வரி-23 | பக் 18 | கொடு கொட்டி |
| வரி-14 | பக்.27 | சுட்டி |
| வரி-20 | பக்.29 | பிரதம தைவ்ய |
| வரி-12 | பக்.33 | மனப்பூர்வமான |
| வரி 5 | பக்.40 | சிறப்பாக யாரும் விளக்குவது |
| வரி- 9 | பக்.41 | நூலின் |
| வரி-12 | பக்.42 | தமிழ் |
| வரி-23 | ” | 13ம் நூற்ருண்டு |
| வரி-18 | பக்.43 | உலகளாவிய |

## இரண்டாம் அத்தியாயம் :

| | | |
|---|---|---|
| வரி- 2 | பக் 47 | கலை முதல் பிரகிருதி |
| வரி-14 | பக்.48 | கன்மத்து |
| வரி- 1 | பக்.49 | உணரப்படாத |
| அடிக்குறிப்பு, வரி 2. | பக்.50 | ஆய்வுக்கட்டுரை |
| வரி 27 | பக்.51 | அசலமாகி |
| வரி- 1 | பக்.52 | சிறிதாய்ப் பெரிதாய்ப் |
| வரி- 3 | ” | அறியப்பட்டுள்ளது |

| | | |
|---|---|---|
| வரி-20 | பக்.53 | ரூபா ரூபங்களில் |
| வரி-25 | ” | திருமேனிகளுமாகி |
| வரி-3 | பக் 54 | மேலான சொரூப நிலையிலே |
| வரி-13 | ” | தருவருண ரூபமில்லான் |
| வரி-17 | ” | சர்வான்மாவாயுள்ள |
| வரி-21 | ” | சுட்டுவதாக |
| வரி-10 | பக்.57 | நிலையினையும் |
| வரி-28 | பக்.60 | காரியப்படும் |
| வரி- 2 | பக்.62 | ஐந்தொழிலாற்றுகின்றனர் |
| வரி-17 | ” | இக்காரியங்கள் |
| வரி-13 | பக்.63 | விஞ்ஞான கலர் |
| வரி-22 | ” | பிரளய கலர் |
| வரி-25 | ” | கூறுவது |
| வரி 10 | பக்.64 | எனலாம் |
| வரி-24 | ” | சிவம் |
| வரி-26 | பக் 65 | உருவாக்கி |
| வரி- 4 | பக்.68 | அநுக்கிரக |
| வரி-12 | ” | கதை வடிவங்களூடாக |
| வரி-10 | பக்.70 | வளர்த்தல் |
| வரி-13 | ” | உற்பத்திக்கு இன்றியமையாதது |
| வரி- 2 | பக்.71 | கொடுத்துள்ளது |
| வரி-30 | ” | ஒளிகொடுப்பது |
| வரி- 8 | ” | பின்னணியாகக் |
| வரி- 9 | ” | இறைவன் |
| வரி-16 | ” | கருவறை |
| வரி-10 | பக்.74 | மனமொடுங்கும் |
| வரி-16. 21 | ” | ஸ்ரீகண்டர் |
| வரி- 1 | பக்.75 | பிரளயகலர் |
| வரி-26 | பக்.76 | அர்த்தநாரீஸ்வரர் |
| வரி-10 | பக்.78 | இறுதியிலே |
| வரி- 8 | பக்.79 | நிஷ்களமாகக் |
| வரி- 9 | ” | பரவெளியினையும் |
| வரி- 5 | பக்.94 | இறைவனுணவன் |
| வரி- 5 | பக்.95 | நிற்றலாய் |
| வரி-18 | பக் 99 | ஞானக்கிரியை |
| வரி-20 | ” | பாசக்கூட்டங்களால் |
| வரி-21 | ” | விடயங்களிலே |
| வரி 26 | ” | சன்னிதானத்தை |
| வரி-17 | பக் 104 | சாயுச்சியநிலை |
| வரி- 3 | பக்.116 | நிர்குண |
| வரி- 7 | பக்.117 | அருவுருவ சொருபநிலை |

**மூன்றும் அத்தியாயம் :**

| | | |
|---|---|---|
| வரி- 6 | பக் 118 | சமய |
| வரி- 8 | ” | என்ற |
| வரி-16 | பக் 127 | என்னும் |
| வரி- 5 | பக்.139 | விளக்கமுயன்றுள்ளன |
| வரி-16 | ” | 1913 |
| வரி-16 | பக்.144 | துறையிலே |

**நூற்பட்டியல் :**

| | | |
|---|---|---|
| வரி-21 | பக்.156 | 1963 |